# இலக்கண விளக்கம்

## யாப்பியல்

'கலா நிலயம்'
கே. ராஜகோபாலாச்சாரியார்

ஸ்டார் பிரசுரம்
72, பெரிய தெரு,
திருவல்லிக்கேணி, சென்னை — 600 005.

இலக்கண விளக்கம் — 5.
முதற் பதிப்பு, ஜூன் — 1963
இரண்டாம் பதிப்பு, செப்டம்பர் — 1969
திருத்திய மறுபதிப்பு, செப்டம்பர் — 1980

விலை ரூ. 14—00

STAR PUBLICATIONS
72, Big Street,
Triplicane, Madras - 600 005.

முத்துக்குமரன் பிரஸ், சென்னை-1.

# முன்னுரை

இலக்கண விளக்கம் என்ற தலைப்பில் யாம் எழுதி வரும் நூல் வரிசையில் யாப்பிலக்கணமாகிய இந்நூல் ஐந்தாவதாகும். எழுத்து, சொல், பொருள் என்னும் மூவகை இலக்கணமும், எழுத்தியல், சொல்லியல், புணரியல், பொருளியல் என்ற நான்கு நூல்களில் எழுதி முடிக்கப்பெற்றுள்ளது.

நூலின் பொருளை ஓசை நயத்தோடும் தோற்றவனப் போடும் நடத்திச் செல்லும் செய்யுள் நடைக்குரிய விதி களை வகுத்துரைப்பது யாப்பின் காரியமாகும். சொல்லப் படும் விஷயம் செய்யுள் நடையில் அமையுங்கால், ஓதுவார்க்கு அது தரும் எழிற்பயனை உதவும் செவ்வி, உரை நடைக்கு இல்லை. எனவே தான், உரை நடை யினும் செய்யுள் நடை உயர்ந்ததாகின்றது. நமது பண்டை நூல்கள் எல்லாம் செய்யுள் நடையில் அமைந் தனவாதலால், அவற்றை முழுமையாய் அனுபவிக்க யாப்பிலக்கணப் பயிற்சி இன்றியமையாததாகின்றது.

தமிழரது ஆதி இலக்கண நூலான தொல்காப்பியத்தின் பொருளதிகாரத்தில் செய்யுளமைப்பு விதிகள் விரிவாகக் கூறப்பெற்றிருப்பதே யாப்பிலக்கணப் பயிற்சியின் அவசியத் திற்குப் போதிய சான்றாகும். எனினும், பிற்காலத்தில் பெரு வழக்காய் வழங்கி வந்த பாவினங்களுக்கு அதில் விதி கூறப்படாமையின், பல புலவர்கள் பல யாப்பிலக்கண நூல் களை இயற்றித் தந்தனர்.

அவிநயனார், காக்கைப் பாடினியார், நத்தத்தனார், பல்காயனார், பல்காப்பினார், மயேச்சுரனார் முதலிய பழம் பெரும் புலவர்கள் இயற்றியுதவிய யாப்பிலக்கண நூல்கள் இப்பொழுது நமக்குக் கிடைக்கவில்லை. அவை கிடைக் காமை ஒரு பெரும் நஷ்டமே ஆகும்.

யாப்பிற்கென்று இப்பொழுது நமக்குக் கிடைக்கும் நூல்கள், தொல்காப்பியச் செய்யுளியல், அமுத சாகரர் என்பவரால் இயற்றப்பெற்ற யாப்பருங்கலம், யாப்பருங்கலக் காரிகை என்பவையே.

இம் மூன்று நூல்களே யாப்பிலக்கணப் பயிற்சிக்குச் சிறந்த கருவி நூல்களாகக் கருதப்படுகின்றன. இவற்றுள் யாப்பருங்கலக் காரிகை என்னும் நூலே இப்பொழுது மாணவர்களால் அதிகம் பயிலப் பெறுகின்றது. இம் மூன்று நூல்களாலும் எய்தக்கூடிய பயனை, எமது இந் நூல் அளிக்கக் கூடியதாகலாம்.

யாம் யாப்பிலக்கணம் பயின்றபொழுது, அதில் முற்றிய தெளிவு ஏற்படாமையை எம் நண்பர், அறிஞர் சேஷாசலனாரிடம் கூற நேர்ந்தது. அப்பொழுது அவர், யாப்பிற்கு ஓரிலக்கணம் எழுதலே தெளிவெய்துவதற்குச் சிறந்த வழி என்று கூறி, அக் கருமத்தில் எம்மை ஊக்கினார். அவரது துணையுடன் 1931-ல் பாவிலக் கணத்தை எமது கலாநிலைய இதழில் எழுதி வந்தனம். அதைத் தொடர்ந்து பாவினங்களுக்கு இலக்கணம் எழுத அப்பொழுது முடியாமற் போயிற்று.

பின்னர், எமது பத்திரிகை நிற்க நேர்ந்தது. அய்யரும் இறையுலகு எய்தினார். விதியும் எம்மை இருபத்தைந்து வருட காலம் ஒரு பெருஞ் சோதனைக்குள்ளாக்கியது. எம்மை நாடியடைந்த நேயர்களுக்கு ஓதுவிப்பதும், அழைத்த இடங்கள் சென்று கம்பராமாயணச் சொற்பொழிவு நிகழ்த்து வதுமாய்க் காலங்கழித்து வரலாயினம்.

இந் நிலையில் எமக்கு 1959-இல் ஸ்டார் நண்பர் ஸ்ரீ இராமனாதனது தொடர்பு ஏற்பட்டது. அதன் பயனாய்க் கானல்வரி என்ற எமது விரிவுரை நூல் 1960-இல் ஸ்டார் வெளியீடாக வெளிவந்தது. அதைத் தொடர்ந்து எழுத்து, சொல், பொருள் இலக்கண நூல்கள் நான்கு புத்தகங்களில் வெளிவந்தன.

யாப்பிற்கு இலக்கணங் கூறும் இந்நூல், இவ்வரிசையில் அய்ந்தாவது புத்தகமாகும். பாக்களுக்கு, யாம் கலா நிலயத்தில் எழுதிய இலக்கணத்தையும் பாவினங்களுக்கு, யாப்பருங்கலக் காரிகையோடு இலக்கியங்களையும் ஆதாரமாகக் கொண்டு யாப்பியலை எழுதி முடித்தோம்.

கற்போர்க்கு மயக்கந்தரும் இடங்களை எல்லாம் விரிவாக உதாரணங்களுடன் விளக்கியுள்ளோம். எனவே இச்சையும் முயற்சியும் உடையார். இந்நூலின் மூலம் யாப்பில் நல்ல புலமை பெற இயலும். நம் பண்டை இலக்கிய நூல்களை முழுமையாய் அனுபவிக்கவும் யாப்பமைதி கெடாதபடி செய்யுள் இயற்றவும் யாப்பிலக்கணப் பயிற்சி துணை புரியும்.

நிற்க, இந்நாள், புதுப்பாட்டு அல்லது மறுமலர்ச்சிப் பாட்டு என்ற பேரால் யாப்பமைதிகெடப் பலர் பாடி வருகின்றனர். இவர்களுக்கு முன்னோடியான பாரதியார் யாப்பிலக்கணப் புலமை உடையவராதலால், அவரது பாக்கள் யாப்புவிதி பிறழாது நடக்கின்றன. யாப்பறிவின் அவசியத்தை உணராத பலர், காதையே துணையாகக் கொண்டு பாடுவதால், பாக்களின் யாப்பமைதி கெட நேர்கின்றது.

இந்நாள் பாடப்பெறும் பாக்கள் கும்மி, ஓடம், சிந்து, லாவணி முதலிய இசைப் பாட்டுக்களைத் தழுவியவை. எனவே, அப்பாக்களுக்குரிய இலக்கணத்தைச் சுருக்கமாய் அநுபந்தத்தில் கூறியுள்ளோம். பா, பாவின இலக்கணங்களைப் பயின்றவர்க்கு இசைப்பாட்டின் இலக்கணத்தைத் தேர்ந்துகொள்ளல் சுலபமானதே. எனவே, விரிவான இலக்கணம் எழுத நினைத்திலம்.

கே. ராஜகோபாலாச்சாரியார்
"கலா நிலயம்"

# பொருளடக்கம்

# உறுப்பியல்

## 1. எழுத்து

யாப்பு என்னும் தொழிற் பெயர் கட்டுதல் என்னும் பொருளது எழுத்து, அசை, சீர், அடி, தொடை என்னும் உறுப்புக்களால் அமைவது செய்யுளாதலால், அதற்கு யாப்பு என்பது ஆகுபெய ராகின்றது எனவே, செய்யுள் இலக்கணத்தை, யாப்பிலக்கணம் என்று அழைக்கின்றனர். யாப்பு, பாட்டு, தூக்கு, தொடர், செய்யுள் என்பவை ஒரு பொருள் குறிக்கும் பல சொற்கள்.

சொல்லப்படும் விஷயங்கள், செவ்விய ஓசை சேர்ந்த செய்யுள்களில் இடம்பெறுங்கால், அவற்றின் நயமும் பயனும் அதிகம் மிகுவதாகின்றன. "அழகு சுமந்து இளைத்த ஆகத்தாள்," என்னும் செய்யுளடி தரும் உவகைப் பயனை உதவும் திறனோ, உரைநடைக்கு இலது. பெருமையும் அருமையும் வாய்ந்த கருத்துக்கள், செய்யுளின் வழி நம்மனம் சேருங்கால், அவை நம் மனதில் நிலை கொண்டு விடுகின்றமையின், நாம் அடையும் பயன் பெரியதாகின்றது.

உயிரிற்கு உடல்போன்றது கருத்திற்குச் செய்யுள். உடல், உயிர் இரண்டில் உயர்ந்தது உயிரேயாயினும், அதைத் தாங்கும் உடலின் வனப்பினால் உயிரின் பொலிவு சிறப்புறுதல் வெளிப்படை, எனவே, உரை நடையினும் செய்யுள்நடை உயர்ந்ததே. எனவே தான், நமது முன்னையோர் நூல்களைச் செய்யுள் நடையில் நமக்கு உதவினர்.

அப்பெரியோரின் நூல்களை நன்கு அனுபவிக்க வும், நாமே கவி பாடவும் யாப்பிலக்கணப் பயிற்சி இன்றியமையாதது. நாம் கவி பாடுவது ஒருபுறமிருக்க யாப்பிலக்கணங் கற்பதால் வேறோர் நற்பயனும் உளது. இசை யிலக்கணம் அறியாதாரும், பண்ணமைந்த பாடல் களைக் கேட்குங்கால் இன்புறலாமாயினும், இசையிலக்கண நுணுக்கங்களை அறிந்தோர் எய்தும் அனுபவம் பெரியதே யாகும். அதேபோல் செய்யுட் கலையிலும், செய்யுளின் பொருளையும் பொருளுக்கேற்ற ஓசையையும், அவ வோசைக்கேற்ற சீர், தளை தொடை முதலிய உறுப்புக் களின் அமைப்பையும் முழுமையாய் அனுபவிக்க யாப்பிலக் கணப் பயிற்சி அவசியமாகின்றது.

வேறு சில உதவிகளையும் செய்யவல்லது யாப்பிலக் கணப் பயிற்சி. சாதாரணமாக அச்சேறி வெளிவரும் நூல் களில், வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பாக்களே சீர்பிரித்து அலகிட்டுக் காட்டப்படுகின்றன. விருத்தங்களும், கலி நிலைத் துறைகளும், கட்டளைக் கலிவிருத்தங்களும் பெரும் பாலும் அலகிடப் பெறுவதில்லை. யாப்பிலக்கணந் தெரிந்தவர்களுக் கன்றி மற்றவர்களுக்கு அவைகளைச் சீர்பிரித்துப் படித்தல் இயலாது.

செய்யுள்களைச் சீர்பிரித்து ஓதப் பயில்வதால், ஓது வார் அடையும் பயன் பெரியதாகும். சீர் பிரித்துச் சந்தத் தோடு செய்யுள்களைப் படிக்கப் பயில்வதால், மனப்பாடம் செய்தல் எளியதாவதோடு பொருள் மயக்கமுடைய செய் யுள்களின் பொருளும் விளங்கத் தலைப்படும். இரு பொருள் களுக்கு இடந் தந்து நிற்கும் அடிகளில், 'கவியின் கருத்து இதுதான்!' என்று தெளியவும் யாப்பிலக்கணப் பயிற்சி துணை புரியும் இவ்விலக்கணவுதவியால் ஓதுவார் அச்சுப் பிழைகளையும் திருத்திக் கொள்ளக் கூடியவராவர். ஆதலால், யாப்பிலக்கணப்பயிற்சி இலக்கியத் துறையில் ஈடுபாடுடையார்க்கு அவசியமானதே

இவ்விலக்கணத்தை யாம் பண்டை முறைப்படி வரைய நினைத்திலம் யாம் மேலே கூறிய நோக்கம் நிறைவேறு கைக்கு எத்துணை இவ்விலக்கணப் புலமை வேண்டுமோ அந்த அளவினில் எளிய வழியில் எல்லோரும் கற்றுக் கொள்ளுவது இயல்வதாமாறு, இலக்கணத்தை விளக்கி வருவோம்.

அடிகளால் ஆவது செய்யுள் பெரும்பாலும் நான்கு அடிகளையுடைய செய்யுள்களாலேயே நூல்கள் செய்யப் பெற்றிருக்கக் காண்கின்றோம்.

மிக்கோ-னுலகளந்த-மெய்யடியே-சார்பாகப்
புக்கோ-ரருவினைபோற்-போயிற்றே-யக்காலம்
கானகத்தே-காதலியை-நீத்துக்-கரந்துறையும்
மானகத்தேர்ப்-பாகன்-வடிவு.

என்பது புகழேந்தியாரின் நளவெண்பாச் செய்யுள்களில் ஒன்று. இதனில் நான்கு அடிகள் இருக்கின்றன எனினும், செய்யுள்கள் எல்லாம் நான்கு அடிகளைக் கொண்டவை யாகவே இருக்க வேண்டும் என்று கொள்ளக் கூடாது.

அகர-முதல-வெழுத்தெல்லா-மாதி
பகவன்-முதற்றே-யுலகு

என்பதுபோல் இரண்டடிகளாலும் செய்யுள்கள் செய்யப் படலாம். திருக்குறள் நூலின் செய்யுள்கள் இரண்டடி களால் ஆனவை. குறுந்தொகை, நற்றிணை, புறநானூறு முதலிய நூல்களில், 8, 10, 15, 20, 30 அடிகளுடைய செய் யுள்களைக் காணலாம். மணிமேகலை என்னும் நூலில் செய்யுள்கள் நூற்றுக் கணக்காலான அடிகளைக் கொண்டி ருக்கக் காண்கின்றோம்.

இவ்வாறு பல அடிகளால் நடப்பது செய்யுள். செய்யுளின் ஒவ்வோரடியிலும் பல *சீர்கள்* இருக்கும் உதாரணமாக, " மிக்கோனுலகளந்த " என்ற செய்யுளை எடுத்துக் கொள்வோம். இதனில் முதல் மூன்று அடிகளிலும், அடியொன்றிற்கு நான்குசீர்களும், நாலாவது அடியில் மூன்று *சீர்களும்* இருக்கின்றன.

மிக்கோ-னுலகளந்த-மெய்யடியே-சார்பாக, என்ற அடி நான்கு *சீர்களைக்* கொண்டது.

புக்கோ-ரருவினைபோற்-போயிற்றே-யக்காலம், என்ற இரண்டாவது அடியும் நான்கு *சீர்களைக்* கொண்டது.

கானகத்தே-காதலியை-நீத்துக்-கரந்துரையும் என்ற மூன்ருவது அடியும் நான்கு *சீர்களைக்* கொண்டது.

மானகத்தேர்ப்-பாகன்-வடிவு, என்ற நான்காவது அடியில் மூன்று *சீர்கள்* இருக்கின்றன.

இரண்டு *சீர்களை* உடைய செய்யுளடிகளும் உண்டு. மூன்று, நான்கு, ஐந்து, ஆறு *சீர்களையும்*, அதற்கும் அதிகமான *சீர்களையும்* கொண்ட செய்யுளடிகளும் உண்டு.

இவ்வாறு பல *சீர்களாலாவது* ஒரு செய்யுளடி. *சீர்கள்* அசைகளால் ஆகின்றன. அசைகளோ எழுத்துக்களால் ஆகின்றன, என்பது சொல்லாமலே புலப்படும்.

எழுத்து அசைக்கு ஆதாரம் என்றதினால், ஒரு *சீரில்* உள்ள எழுத்துக்கள் ஒவ்வொன்றையும் ஒவ்வோர் அசையாகக் கொள்ளக்கூடாது. மிக்கோ என்ற *சீரில்* மூன்று எழுத்துக்கள் இருக்கின்றன. எனினும் அது ஈரசைச் *சீரே*. னுலகளந்த என்ற இரண்டாவது *சீர்* ஆறு எழுத்துக்களை உடையது. எனினும், அது மூன்று அசைகளை உடைய *சீரே*. மெய்யடியே என்பது ஐந்து எழுத்துக்களைக்

கொண்டதேனும், அதில் இருப்பது மூன்று அசைகளே. எனின், எழுத்துக்கள் எப்படி நின்றால் அசைகளாகும் என்பதை இனி அறிவோம்.

ஒலியின் வரிவடிவம் எழுத்தாதலால், எழுத்துக்களின் ஒலியளவை ஆதாரமாகக் கொண்டு அமைவது அசை. எழுத்தின் ஒலி அளவை, அதாவது எழுத்துக்களை உச்சரிப்பதற்கு வேண்டிய கால அளவை மாத்திரை என்பர். எழுத்துக்கள் அசைகளாகின்ற தன்மையை நன்கு உணர்வதற்கு அவைகளின் ஒலியளவை ஐயமறத் தெரிந்துகொள்ள வேண்டும். எழுத்திலக்கணப் பகுதியில், இதை விரிவாக விளக்கியுள்ளோம்.

தமிழ் எழுத்துக்களைப் பற்பல தன்மை நோக்கி, உயிர், மெய், உயிர்மெய், ஆயுதம் என்று பிரித்துள்ளார்கள். 12 உயிரும், 18 மெய்யும், 216 உயிர்மெய்யும், 1 ஆய்தமும் சேர்ந்து, தமிழ் எழுத்துக்கள் 247 ஆகின்றன.

இவற்றில் அ, இ. உ, எ, ஒ என்ற ஐந்தும் ஒரு மாத்திரை உச்சரிப்பு அளவையுடைய உயிர்க்குறில்.

ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ என்ற ஏழும் இரண்டு மாத்திரை அளவையுடைய உயிர்நெடில்.

க் முதல் ன் ஈறாக உள்ள மெய்யெழுத்துக்கள் பதினெட்டும் அரை மாத்திரை அளவின. மெய்யெழுத்துக்கள் எல்லாம் ஒரே அளவின. எனவே அவைகளில் குறில், நெடில் என்னும் பேதமில்லை.

உயிர்மெய் யெழுத்துக்களில் உயிரும் மெய்யும் இருப்பதால், உயிர்மெய்க் குறில்கள் ஐந்தும், உயிர் மெய் நெடில்கள் ஏழும், ஒவ்வொரு வரிசையிலுமாகப் பதினெட்டு வரிசையிலும் உண்டு. ஆகவே,

| | |
|---|---|
| உயிர்க்குறில் | 5 |
| உயிர்நெடில் | 7 |
| உயிர்மெய்க் குறில் | 90 |
| உயிர்மெய் நெடில் | 126 |
| மெய் | 18 |
| ஆய்தம் | 1 சேர்ந்து |

தமிழில் எழுத்துக்கள் 247 ஆகின்றன.

இவற்றில் இரண்டு மாத்திரை அளவுடைய நெட்டெழுத்துக்களும், அரை மாத்திரை அளவுடைய மெய்யெழுத்துக்களும் சிற்சில சமயம், அளவு நீட்டி உச்சரிக்கப் பெறுவதுண்டு. உயிரொலி மிகுங்கால், அதை உயிரளபெடை என்றும், மெய்யொலி மிகுங்கால், அதை ஒற்றளபெடை என்றும் அழைப்பர்.

சில எழுத்துக்கள் சில சமயங்களில் ஒலி குறைந்து ஒலிக்கவுங் கூடும். அப்பொழுது அவைகளைக் குறுக்கம் என்பர். அவ்வாறு குறுகக் கூடிய எழுத்துக்கள், இ, உ, ஐ, ஔ என்ற நான்கு உயிரெழுத்துகளும், ம் என்ற மெய்யும், மூன்று புள்ளிகளால் (ஃ) குறிக்கப்படும் ஆய்தமும் ஆகும்.

இவ்வாறு குறுகும் எழுத்துக்களில் ஐ, ஔ என்ற நெடில்களின் மாத்திரை இரண்டு. ஆனால் நாம் பேசும் போது, இவற்றிற்கு இரண்டு மாத்திரை கொடுத்துப் பேசுவதில்லை. இது ஐ என்றும், இது ஔ என்றும் அவற்றின் பெயரைக் குறிக்கின்றபொழுதுதான், அவை இரண்டு மாத்திரை பெறுகின்றன. மற்று, வைரம், மைனு என்றும், ஔவை, வெளவால் என்றும் வார்த்தைகளுடன் சேர்ந்து நடக்கும்பொழுது, ஐயும், ஔவும் அரை மாத்திரை ஒலியை இழந்து ஒன்றரை மாத்திரை அளவினதாகின்றன. வாரம், வைரம் என்ற சொற்களை வாய்விட்டு உச்சரித்துப்

பார்த்தால், வை என்பது ஒலிக்குறைவு அடைவதை உணரலாம்.

ஆகவே, ஐயும், ஔவும் மொழி முதலாகையில் ஒன்றரை மாத்திரை அளவின. ஆனால் ஐ என்பது சொல்லின் இடையிலும் கடையிலும் குறிலைப் போல் ஒரு மாத்திரையே பெறுகின்றது.

மறையோன், மறவோன் என்ற சொற்களை உச்சரித்துப் பாருங்கள். ற, றை என்ற இரண்டிற்கும் உச்சரிப்பளவில் வேற்றுமை இல்லாமை புலப்படும்.

சொல்லின் கடையிலும் ஐகாரத்தின் அளவு ஒரு மாத்திரையே என்பது, முதலை முதலி என்ற சொற்களை உச்சரித்துப் பார்த்தால் தெரியவரும்.

ஔகாரம் மொழி முதலாய்த்தான் வரும். அது சொல்லின் இடையிலும், கடையிலும் வருவதில்லை. சொல் முதலாகும்பொழுது ஔவின் ஒலியளவு ஒன்றரை. ஐகார. ஔகாரக் குறுக்கங்களின் இலக்கணம் தெரிந்திருப்பது யாப்பிலக்கணங் கற்பதற்கு அவசியமாகும்.

இகர, உகரங்களும், மகர மெய்யும் குறுகி ஒலிக்க நேர்வதுண்டு. அப்பொழுது இகர, உகரங்கள் அரை மாத்திரையும், மகர மெய் கால் மாத்திரையும் பெறும். இவற்றின் இலக்கணத்தை எழுத்திலக்கணத்தில் விரிவாக விளக்கியுள்ளோம். ஞாபகப்படுத்திக் கொள்ளவும்.

## 2. அசை

செய்யுள் அடிகளாலும், அடி சீர்களாலும், சீர் அசைகளாலும், அசை, குறில், நெடில், ஒற்று அல்லது மெய் என்ற மூவகை எழுத்துக்களாலும் ஆகும் என்று கூறினோம். அதாவது, எழுத்துக்கள் தத்தம் மாத்திரை பற்றி அசைகளாக அமைகின்றன.

சீர்களுக்கு ஆதாரமாகும் அசைகள் நேரசை, நிரையசை என்று இருவிதப்படும்.

ஒரு குறில் அல்லது நெடில், தனித்தேனும், ஒற்று (மெய்) அடுத்தேனும் நடக்குமாயின் நேரசை.

அ, க, ப என்ற ஒரு மாத்திரையுடைய தனிக்குறில்கள் ஒவ்வொன்றும் நேரசையாகும்.

ஆ, கா, பா என்ற இரண்டு மாத்திரையுடைய தனி நெடில்கள் ஒவ்வொன்றும் நேரசை.

அல், கல், பல் என்று ஒற்றடுத்த குறில்களும், ஆல், கால், பால் என்று ஒற்றடுத்த நெடில்களும் நேரசைகளே.

ஆகவே, நேரசைகள் நான்கு வகைப்படுகின்றன.

உதாரணம் :

(1) அ—தனிக்குறில்—நேரசை.

(2) ஆ—தனிநெடில்—நேரசை.

(3) அல்—குறில் ஒற்று—நேரசை.

(4) ஆல்—நெடில் ஒற்று—நேரசை.

அடு என்பதுபோல், இரு குறில்களும் அடா என்பது போல் குறில் நெடிலும், அடல்-படாம் என்று ஒற்றடுத்து நடப்பவையும் நிரை அசைகளாகும்.

உதாரணம் :

(1) அடு —இருகுறில்—நிரையசை.

(2) அடா — குறில் நெடில்— நிரையசை.

(3) மடல் —இருகுறில் ஒற்று—நிரையசை.

(4) கடாம்—குறில்நெடில் ஒற்று—நிரையசை.

"கொந்தார் குழல்சரியக் கோல முகம் வியர்ப்ப", என்பது ஒரு செய்யுள் அடி. சீர்களுக்குள்ளேயே அசை களின் தன்மையைக் காணக் கூடுமாதலின், இச் செய்யு ளடியிலுள்ள சீர்கள் எவ்வகை அசைகளால் அமைந்திருக் கின்றன என்று பார்ப்போம்.

இதனில் ஒவ்வொரு சீரும் மொழியின் முடிபாக நிற்ப தோடு, அம்மொழியால் குறிக்கப்படும் பொருளும் முற்றியதாய் அமைந்திருக்கக் காண்கிறோம்.

கொந்தார் (கொந்து — ஆர் — பூங்கொத்துக்கள் பொருந்திய) என்பது ஒரு சீர், இது இரண்டு அசை களால் அமைந்த சீர்—(கொந்-தார்).

கொந் —குறில் ஒற்று—நேரசை.
தார்—நெடில் ஒற்று—நேரசை.

எனவே, கொந்தார் என்பது இரண்டு நேரசைகளா லான ஒரு சீர்.

குழல் சரியக்—மூன்று அசைகள்ாலான ஒரு சீர். (குழல்-சரி-யக்).

குழல்—இருகுறில் ஒற்று—நிரையசை.

சரி—இருகுறில்—நிரையசை.

யக்—குறில் ஒற்று—நேரசை.

எனவே, இது நிரை நிரை நேரசை களாலானவொரு சீர்.

கோல—(கோலம்-அழகு)—இரண்டு நேரசைகளாலான வொரு சீர்.

கோ—தனி நெடில்—நேரசை.
ல—தனிக் குறில்—நேரசை.
எனவே, இது இரண்டு நேரசைகளாலானவொரு சீர்.
முகம் வியர்ப்ப—மூன்று அசைகளாலானவொரு சீர்
முகம்—இருகுறில் ஒற்று—நிரையசை.
வியர்ப்—இருகுறில் இரண்டு ஒற்று—நிரையசை.
ப—தனிக் குறில்—நேரசை

எனவே இது நிரை, நிரை, நேர் அசைகளாலான வொரு சீர்.

குறிப்பு:— மெய்யெழுத்து யாப்பியலில் ஒரு எழுத்தாகக் கருதப்படுவதில்லை. எனவே, அது தனித்து ஓரசை ஆதற் கில்லை. வியர்ப் என்பதில் இரு மெய்கள் இருந்தபோதிலும் அது ஒரு நிரை அசையே.

இனி, வில்லிபுத்தூரர் திருமாலைப் பரவுகின்ற ஒரு பாசுரத்தை எடுத்துக் கொண்டு, அதன் கண்ணுள்ள சீர்களுக்கு ஆதாரமான அசைகளைப் பார்ப்போம்.

"கோயிலாளுடையபைங்கொண்டலார்கண்டுயில்
பாயலாய்வாழநீபாக்கியஞ்செய்ததென்
தீயலாதுவமைவேறில்லெனத்தீயநின்
வாயெலாநஞ்சுகால்வாளெயிற்றுரகமே."

என்பது செய்யுள். இதைச் சீர்பிரிக்காமல் வரைந்துள்ளோம் இதன் பொருள் :—

"தாமரையைக் கோயிலாக உடைய (எனது இதயத் தாமரையைக் கோயிலாகக் கொண்டுள்ள) திருமகளைத் தன் மார்பகம் கொண்டுள்ள, பசுமையான மேகம் போன்ற திருமால் கண் துயில்வதற்குரிய பாயலாய் வாழ, நெருப்பல்லாது வேறு உவமையில்லாதபடி கொடியதான உன் ஆயிரம் வாய்களிலும். விஷத்தைக் கக்கும் பற்களையுடைய பாம்பே, நீ செய்த பாக்கியம் யாது ?"

பொருள் உணர்ச்சியோடு, ஓசையும் பொருளும் இணங்க வாய்விட்டுப் பலமுறை ஓதினால் பாசுரம் தானே சரியானபடி சீர் பிரிந்துவிடும்.

கோயிலா ளுடையபைங் கொண்டலார் கண்டுயில்
பாயலாய் வாழநீ பாக்கியஞ் செய்ததென்
தீயலா துவமைவே றில்லெனத் தீயநின்
வாயெலா நஞ்சுகால் வாளெயிற் றுரகமே

இலக்கணம் தெரியாத காலத்தும், வாய்விட்டு ஓதினால் பாசுரம் இவ்வண்ணம் பிரிந்துவிடும். இச்செய்யுளின் ஒவ்வோரடியிலும் நான்கு சீர்கள் இருக்கின்றன. ஒவ்வொரு சீரிலும் இரண்டு அசைகள் இருக்கின்றன.

முதலடி :

கோயிலா—முதல் அடியின் முதல் சீர். அது கோ, யிலா என்ற இரண்டு அசைகளை உடையது.

ளுடையபைங்—இரண்டாவது சீர். ளுடை, யபைங் என்ற இரண்டு அசைகளை உடையது.

கொண்டலார்—மூன்றாவது சீர். கொண், டலார் என்ற இரண்டு அசைகளைக் கொண்டது.

கண்டுயில்—நான்காவது சீர். கண், டுயில் என்ற இரண்டு அசைகளைக் கொண்டது

**இரண்டாவது அடி :**

பாயலாய்—முதல் சீர்—பா, யலாய் என்ற இரண்டு அசைகளைக் கொண்டது.
வாழநீ—இரண்டாவது சீர்—வா நீ என்ற இரண்டு அசைகளைக் கொண்டது.
பாக்கியம்—மூன்றாவது சீர்—பாக், கியம் என்ற இரண்டு அசைகளைக் கொண்டது.
செய்ததென்—நான்காவது சீர்—செய், ததென் என்ற இரண்டு அசைகளைக் கொண்டது.

**மூன்றாவது அடி :**

தீயலா—முதல் சீர்—தீ, யலா என்ற இரண்டு அசைகளைக் கொண்டது
துவமைவே—இரண்டாவது சீர்—துவ, மைவே என்ற இரண்டு அசைகளைக் கொண்டது
றில்லெனத்—மூன்றாவது சீர்—றில், லெனத் என்ற இரண்டு அசைகளைக் கொண்டது
தீயநின்—நான்காவது சீர்—தீ, யநின் என்ற இரண்டு அசைகளைக் கொண்டது.

**நாலாவது அடி :**

வாயெலா—வா, யெலா (இரண்டு அசை)
நஞ்சுகால்—நஞ், சுகால் (இரண்டு அசை)
வாளெயிற்—வா, ளெயிற் (இரண்டு அசை)
றுரகமே—றுர, கமே (இரண்டு அசை)

எழுத்துக்கள், ஒலியளவு கருதி (மாத்திரை கருதி) அசைகளாவதை முன்னர்க் கூறினோம். அதை மேலும் சிறிது விளக்குவோம். அதாவது எழுத்துக்கள் எந்த நியதி பற்றி அசைகள் ஆகின்றன என்று பார்ப்போம்.

(1) தனிநிலையில்லாத மெய்யெழுத்து ஒருபோதும் சீர் முதலாய் வராது

(2) சீர் முதலில் ஒரு மாத்திரைக்கு மேற்பட்ட எழுத்து நின்றால், அந்த எழுத்தை ஓர் அசையாகக் கொண்டுவிட லாம்

எனவே, இரண்டு மாத்திரை உச்சரிப் பளவுள்ள நெடில்களும், மொழி முதலாகின்ற ஒன்றரை மாத்திரை அளவுடைய ஐகார, ஔகாரங்களும் சீர் முதலில் அசை களாகும்.

கோயிலா என்னும் சீரின் முதல், கோ என்னும் நெடில் ஆகவே, கோ என்பது ஓரசையாகின்றது

ஞடையபைங் என்பது இரண்டாவது சீர். இதன் சீர் முதல் ஞ. ஒரு மாத்திரையை உடைய ஞ என்னும் குறில் சீரின் முதலில் அசையாகாது. எனவே ஞடை என்பதை அசையாகக் கொள்ள வேண்டும்

இரண்டாவது அடியின் இரண்டாவது சீரான வாழீ என்பதின் சீர் முதலான வா என்பது நெடிலாகையால் ஓரசையாகின்றது.

எஞ்சிய ழீ என்பதிலுள்ள ழீ நெடிலானாலும் அதை ஒரு அசையாகக் கொள்வதற்கில்லை. ஏனெனில் அது சீர் முதலாக நிற்கவில்லை. சீரின் கடைசியில் இருக் கின்றது. எனவே ழீ என்று பிரித்து ஓரசையாகக் கொள்ள வேண்டும்.

சீர் முதலாய் நிற்கும் நெடிலைத்தான் தனியாக எடுத்து ஒரு அசையாகக் கொள்ளலாம்.

(3) *சீர்* முதலாய் நிற்கும் நெடிலின் பின் (வலப் புறத்தில்) ஒரு மெய் வந்தாலும் சரி, இரண்டு மெய் வந் தாலும் சரி, அவற்றை நெடிலோடு சேர்த்து ஓரசையாகக் கொள்ள வேண்டும்.

பாக்கியம் : என்ற *சீரில்* பா என்ற நெடிலின் பின் க் என்ற மெய் வந்துள்ளது. அது பா என்பதோடு சேர்ந்து பாக் என்று நின்று ஒரு அசையாகும்.

வாழ்ந்தான் என்பது இரண்டு அசைகளைக் கொண்ட ஒரு *சீர்*- வா என்னும் நெடிலின்பின் ழ், ந் என்ற இரு மெய்கள் நிற்கின்றன. இவ்விரு மெய்களும் வா என்னும் நெடிலோடு சேர்ந்து வாழ்ந் என்று நின்று ஓரசையாகும்.

(4) ஒரு மாத்திரையுடைய தனிக்குறில் *சீர்* முதலில் அசையாகாது என்று கூறினோம். ஆகவே, குறிலின் பின் மெய் இருப்பின் அதையும் சேர்த்து ஓரசையாகக் கொள்ள வேண்டும்.

கொண்டலார் என்னும் *சீரை* எடுத்துக் கொள்வோம். இதன் *சீர்* முதல் கொ என்னும் குறில். அதன் பக்கத்தி லுள்ள ண் என்னும் மெய் சேர்ந்தே அது ஓரசையாகும் எனவே, கொண் ஓரசை. *சீர்* முதல் குறிலின்பின் இரண்டு மெய் சேர்ந்தும் அசையாவதுண்டு. உய்ந்து என்பது போன்ற *சீர்களில்* தனிக்குறிலை இரண்டு மெய் கள் தொடர்ந்து நிற்கக் காணலாம். அப்பொழுது, உய்ந் என்பது ஓரசையாகும்.

(5) *சீர்* முதலான குறிலின்பின் குறிலேனும், நெடி லேனும், நிற்கலாம். அப்பொழுது, *சீர்* முதல் குறிலைத்

தொடரும் எழுத்தையும், அது குறிலாயினும் சரி, நெடிலாயினும் சரி, முதல் நின்ற குறிலோடு சேர்த்து ஓரசையாகக் கொள்ளவேண்டும்.

மேலே கண்ட செய்யுளின் மூன்றாவது அடியின் இரண்டாவது சீரான துவளைமவே என்பதை உதாரணமாக எடுத்துக்கொள்வோம். துவளைமவே என்னும் சீரின் முதல், து என்னும் குறில்; தனிக்குறில் அசையாகாதாகையால், அதன்பின் நிற்கும் வ என்பதும் சேர்ந்து துவ என்று நின்று, ஓரசையாகும், றுகரமே என்னும் சீரிலும், றுக என்னும் இருகுறில்களும் சேர்ந்தே சீர் முதல் அசையாகின்றது.

குறிலோடு நெடில் சேர்ந்தும் சீர்முதல் அசையாகும். கடாவினேன் என்பது ஒருசீர். இதனில் சீர் முதலாயிருப்பது க என்னும் குறில். எனவே, இது ஓர் அசையாதற்கில்லை. அடுத்து நிற்பது டா என்னும் நெடில். ககரத்தோடு டகர நெடிலையும் சேர்த்துக்கொண்டால் கடா என நின்று அது ஓரசையாகும்

(6) இரண்டு குறில், அல்லது குறில் நெடில் சேர்ந்து சீரின் முதலில் அசைகளாகலாம் என்று கூறினோம். அவ்வாறு சேர்ந்த எழுத்துக்களை ஒரு மெய்யோ, இரண்டு மெய்களோ தொடர்வதும் உண்டு. அப்பொழுது, அம்மெய்களையும் சேர்த்துக்கொண்டு, அவை அனைத்தையுஞ் சேர்த்து ஓரசையாகக்கொள்ள வேண்டும்.

சிரித்தான், என்பதை எடுத்துக்கொள்வோம். இதில் சீர் முதலான சி என்னும் குறில். அதை அடுத்துள்ள ரி என்னும் குறிலையும், அதைத் தொடரும் த் என்னும் மெய்யையும் ஒன்றுகச் சேர்த்துக்கொள்ள வேண்டும் அவ்வாறு சேர்த்தால் சிரித் என்பது சீர் முதல் அசையாகும்.

பெயர்ந்தான் என்பதை எடுத்துக்கொள்வோம். இதில் சீர்முதல் பெயர்ந் என்பது ஓரசையாகும்.

விடாப்பிடி என்னும் சீரில், வி என்னும் குறிலும், அதைத் தொடரும் டா என்னும் நெடிலும், அதைத் தொடரும் ப் என்னும் மெய்யும் சேர்ந்து விடாப் என்று நின்று சீர் முதல் அசையாகும்.

ஒரு மாத்திரை ஒலியளவுடைய எழுத்து சீர் முதலில் அசையாகாது. ஆகவே, தனிக் குறில் சீர் முதல் அசை யாதற்கில்லை. தனிக் குறில் மெய்யோடோ, அல்லது உயிர் மெய்யெழுத்தோடோ சேர்ந்தேதான் அசையாகும்

ஆனால், சீர்முதல் நெடிலாயின், அது, அதன் பின் வரும் மெய்யோடுதான் சேரும். அதை அடுத்து நிற்பது உயிர் மெய்யெழுத்தாயின், அதோடு ஒருநாளும் சேராது.

வாக்கியம் : வா என்னும் நெடில், அதை அடுத்துள்ள க் என்னும் மெய்யோடு சேர்ந்து சீர்முதலில் வாக் என்று நின்று ஓரசையாகும்.

கோயில் : கோ என்னும் நெடிலை அடுத்து வருவது யி என்னும் உயிர் மெய்யாதலால், அதனோடு சேராமல் கோ என்றே நின்று சீர் முதல் அசை யாகும்.

இவ் விதிகளை மனத்தில்கொண்டு சீரின் முதலசை யைப் பிரித்துவிட்டால், மற்ற அசைகளைப் பிரித்தல் சுலபமாய்விடும்.

அசைகள் நிரை அசை என்றும் நேர் அசை என்றும் இருவிதப் படும் என்று முதலில் கூறினோம். அவைகளை மேலும் சிறிது விளக்குவோம்.

(1) ஒரு குறில் அல்லது நெடில் தனித்தேனும், மெய் அல்லது மெய்களோடு சேர்ந்தேனும் ஒரு அசை ஆகலாம். அவ்வாறு ஆகும் அசை நேர் அசை.

"ப, பல், பா, பால்," என்பவை உதாரணங்கள்.

"உய்ங். போழ்ங்," என்பவை இரண்டு மெய்கள் சேர்ந்த நேர் அசைகளுக்கு உதாரணங்கள்.

(2) இரு குறில் அல்லது குறில் நெடில் தனித்தேனும் மெய்யோடு சேர்ந்தேனும் அசையாகும்போது, அதை நிரை அசை என்பர்.

பட, படம், படாம் என்பவை உதாரணம். ஆனால், சொற்கள் பாட, பாடம் என்று நிற்பின் அவை இரண்டு அசைகளைக் கொண்ட ஒரு சீராய்விடும். பா என்னும் நெடில் தனித்து நின்று ஒரு நேரசை ஆகும். ட அல்லது டம் என்பது வேறோர் நேரசை ஆகும்.

இனி, ஒரு செய்யுளை எடுத்துக்கொண்டு, அதனிலுள்ள சீர்களில் அமைந்திருக்கின்ற அசைகளை அறிவோம்.

"கௌவைவிரிதிரைநீர்க்காவிரிசூழ்நன்னாட்டு
மௌவல்கமழுங்குழன்மடவாய்செவ்வி
மதுவார்கவிரேநின்வாய்போல்வதன்றி
யதுபோல்வதுண்டேனுமாம்."

[இதன் பொருள்: ஆரவாரத்தையும் விரிந்த அலைகளையும் உடைய நீரையுடைய காவிரி நதி சூழ்ந்த நல்ல நாட்டின் முல்லை மலரின் மணங்கமழும் கூந்தலையுடைய பெண்ணே, செவ்விய தேன் பொருந்திய முருக்க மலரே நின்வாய் போல்வது. அதுவல்லாமல், அம் முருக்க மலர்

போன்றது வேறேதேனும் இருப்பின், அதுவும் உன் வாய்க்கு உவமையாகும்.]

என்பது ஒரு வெண்பாச் செய்யுள். இது பொருளுக்கும் ஓசைக்கும் இயையப் பின்வருமாறு பிரியும்:

" கௌவை விரிதிரைநீர்க் காவிரிசூழ் நன்னாட்டு
மௌவல் கமழும் குழன்மடவாய் - செவ்வி
மதுவார் கவிரேநின் வாய்போல்வ தன்றி
அதுபோல்வ துண்டேனு மாம்.

கௌவை என்பது செய்யுளின் முதலடியின் முதல் சீர். அச்சீரின் முதல் எழுத்து கௌ. அது நெடிலேனும் சொல் முதலாகையில் அரைமாத்திரை ஒலியை இழந்து விடும் என்று கூறியுள்ளோம். எனவே அதன் அளவு ஒன்றரை மாத்திரை. அதை ஓரசையாக எடுத்துக் கொள்ள வேண்டும். ஒரு தனி எழுத்து அசை ஆவதால், அது ஒரு நேரசை. கௌ ஓரசையான பிறகு எஞ்சியிருப்பது வை அந்த எழுத்தும் தனித்து ஒரு நேரசை ஆகின்றது ஆகவே, கௌவை, என்பது, நேர், நேர், என்னும் இரண்டு அசைகளாலான ஒரு சீர்.

**விரிதிரைநீர்க்** :—இந்தச் சீரின் முதல். வி என்னும் குறில் தனிக் குறில் சீரின் முதலில் ஒருபோதும் அசையாகாது. அதை அடுத்து நிற்கும் ரி என்பதை அதோடு சேர்த்து ஒரு அசையாகக் கொள்ளவேண்டும் எனவே விரி என்பது இரண்டு குறில்களாலான ஒரு நிரை அசை. விரி என்னும் முதலசை போக, எஞ்சி நிற்கும் எழுத்துக்கள் திரை நீர்க் என்பவை. இதையே சீராகக் கொண்டு, முதலசையைப் பிரிக்கின்ற விதிகளின்படி, எது அடுத்து அசையாகுமென்று பார்ப்போம். தி என்னும் எழுத்து குறிலாக. அதை அடுத்து நிற்கும்

ரை என்ற எழுத்தையும் சேர்த்துக் கொள்ள வேண்டும். அப்பொழுது திரை என்பது இரண்டாவது அசை யாகின்றது. அதுவும் இரு குறில்களாலான நிரை அசை. இனி, எஞ்சியிருப்பது நீர்க் என்னும் எழுத் துக்கள். நீ என்னும் நெடிலை இரண்டு மெய்கள் தொடர்கின்றன. அவைகளைச் சேர்த்து நீர்க் என் பதை ஒரு அசையாகக் கொள்ளவேண்டும். அது ஒரு நேரசை. எனவே, விரிதிரைநீர்க் என்னும் சீர், நிரை, நிரை, நேர் என்னும் மூன்று அசைகளாலான ஒரு சீர்.

காவிரிசூழ்:—கா என்னும் முதல் நெடில் ஒரு நேரசை. பின் வரும் விரி என்னும் இரு குறில்கள் சேர்ந்து ஒரு நிரை யசையாகின்றது. ஈற்றதான சூ என்னும் நெடில் ழ் என்னும் மெய்யோடு சேர்ந்து சூழ் என்னும் நேரசை யாகின்றது. எனவே, காவிரிசூழ் என்பது நேர், நிரை நேர் என்ற மூன்றசைகளாலான ஒரு சீர்.

நன்னுட்டு —ந என்னும் குறில் ன் என்னும் மெய்யோடு சேர்ந்து நன் என்று நின்று முதலசை ஆகின்றது. இது நேரசை. னு என்னும் நெடில் ட் என்னும் மெய்யோடு சேர்ந்து னுட் என்னும் நேரசையாகின்றது. எஞ்சி நிற்பது டு என்னும் குறில். அது சீரின் கடையில் தனித்து நின்று ஒரு நேரசையாகின்றது. நன்னுட்டு என்பது நேர், நேர், நேர், என்னு : மூன்று அசைகளா லான ஒரு சீர்.

குறிப்பு :—சீரின் கடையில் நிற்பதால் டு என்னும் தனிக்குறில் அசையாயிற்று. மற்றவிடங்களில் தனிக்குறில் அசையாகாது. கடையல்லாத மற்றவிடங்களில் குறில், அதை அடுத்துள்ள மெய்யோடோ, அல்லது குறிலோடோ அல்லது நெடிலோடோ சேர்ந்தே அசையாகும். ஆனால், சுட்டாகவேனும், தன்னைக் குறித்தோ விட்டிசைத்தோ

நிற்கும்போதும் தனிக்குறில் சீர்முதல் அசையாகக் கூடும். இதைப் பின்னர் விளக்குவோம்

மௌவல் :—இது இரண்டாவது அடியின் முதல் சீர், மௌ ஒன்றரை மாத்திரை அளவுடையதாதலால் தனியாக நின்று ஓரசையாயிற்று. வ என்னும் குறில் ல் என்னும் மெய்யோடு சேர்ந்து வல் என ஓரசையாயிற்று. மௌ வல்—நேர், நேர் என்ற இரண்டு அசைகளாலான ஒரு சீர்.

கமழும்—கம - ழும் என்று அசை பிரியும். நிரை நேர் அசை களாலான ஒரு சீர். கமழும் என்று பிரிப்பது பிழை. தனிக்குறில் சீர் முதலில் அசையாகாது

குழன்மடவாய்—குழன்-மட-வாய் என்று அசை பிரியும். நிரை, நிரை, நேர் என்னும் மூன்று அசைகளாலான ஒரு சீர். கு என்னும் குறில் ழன் என்பவைகளோடு சேர்ந்து ஒரு அசையாயிற்று. ம என்னும் குறில் ட வோடு சேர்ந்து ஒரு அசையாயிற்று. எஞ்சிய வாய் ஒரு அசையாயிற்று.

செவ்வி—செவ்-வி என்று அசை பிரியும். நேர், நேர் அசை களாலான ஒரு சீர் இது. சீரின் ஈற்றின் வி என்னும் குறில் ஒரு நேரசை ஆயிற்று.

மதுவார்—மது-வார். நிரை, நேர் என்னும் அசைகளைக் கொண்ட ஒரு சீர். ம-து-வார் என்றுவது, ம-துவார் என்றுவது பிரிப்பது பிழை.

கவிரேயின்—கவி-ரே-யின். நிரை, நேர், நேர். கவி-இரு குறில் சேர்ந்து நிரை அசையாயிற்று, ரே என்பது நெடில். அது முதல் இடை கடையாகிய எல்லா இடத் திலும் தனித்து நின்று நேரசையாகும். யின் ஒரு நேரசை.

வாய்போல்வ— வாய்-போல்-வ. நேர், நேர், நேர். சீரின் கடையில் வ என்னுந் தனிக்குறில் ஒரு நேரசை ஆயிற்று,

தன்றி—தன்-றி. நேர், நேர். சீரின் ஈற்றதான றி என்னும் குறில் நேரசையாயிற்று.

யதுபோல்வ – யது-போல்-வ. நிரை, நேர், நேர். சீரின் ஈற்றில் வ ஒரு அசையாயிற்று.

துண்டேனு—துண்-டே-னு. நேர், நேர், நேர், சீரீற்றில் னு ஒரு அசையாயிற்று.

மாம்—இந்தச் சீரில் மாம் என்னும் ஓரசையே இருக்கின்றது. இதை ஓரசைச் சீர் என்பர்.

மேலே கூறியவைகளிலிருந்து நேரசை, நிரையசை என்னும் ஒவ்வொன்றும் நான்கு நான்கு விதமாக அமையக் கூடும் என்பது வெளிப்படை. இதை முன்னரே கூறியுள் ளோம். மீண்டும் ஞாபகப் படுத்திக்கொள்வோம்.

நேரசை :

1. ஆ, கா, போ, வா போன்ற தனி நெடில்கள்- நேரசை. மொழி முதலாகிய ஐகார ஔகாரங்களும் தனியே நின்று நேரசைகளாகும்.

2 கான், வால், வீழ்க் போன்ற மெய்யடுத்த நெடில் கள் - நேரசை.

3. அ, க, து போன்ற தனிக்குறில்கள், சீரின் இறுதி யில் நிற்கையில், நேரசை.

4. துண், கள், உய்ங் போன்ற மெய்யடுத்த குறில்கள்- நேரசை.

நிரையசை ;

1. உரு, மது, கட என்பன போன்ற இரு குறில்கள் - நிரையசை.

2. உருத், மதர்த், கமழ்ந் போன்ற மெய்யடுத்த இரு குறில்கள் - நிரையசை.

3. படா, மதோ, உரா போன்ற குறில் நெடில் நிரையசை.

4. படாம், இருல், உராய்ந் போன்ற மெய்யடுத்த குறில் நெடில் - நிரையசை.

யாப்பிலக்கணத்தின் அஸ்திவாரமாகும் அசைகளைப் பற்றி விரிவாய் உதாரணங்களுடன் விளக்கி யுள்ளோம். நேயர்கள் செய்யுளடிகளை எடுத்து அசை பிரித்துப் பார்த்தல் நலம். இவ்வசைகளால் ஆகும் சீரைப்பற்றி இனி அறிவோம்.

" குறிலே நெடிலே குறிலிணை குறில்நெடில்
தனித்தும் ஒற்றடுத்தும் வரின்நேர் நிரையெனும்
அசையாம்........ "

என்பது சூத்திரம்.

# 3. சீர்

நேர், நிரை என்னும் இருவித அசைகளின் இலக் கணத்தைப் பார்த்தோம். இவ்விருவிதமான அசைகளால் ஆவது சீர் ஒரு சீரில் ஒன்று முதல் நான்கு அசைகள் வரை இருக்கலாம் எனவே, சீர்கள் ஓரசைச் சீர் ஈரசைச் சீர், மூவசைச்சீர், நான்கசைச்சீர் என்ற நான்கு பெரும் பிரிவுகளில் அடங்கும்.

ஓரசைச்சீர் :

ஒரு நேரசை அல்லது ஒரு நிரையசை தனியே நின்று சீராகுங்கால், அதை ஓரசைச்சீர் என்பர். அதை அசைச் சீர் என்றும், பொதுச்சீர் என்றும் அழைப்பதுண்டு. நாலசைச்சீருக்கும் பொதுச்சீர் என்ற பெயர் இருப்பதால், ஓரசைச் சீரை அசைச்சீர் என்று அழைத்தலே அமையும்.

அசைச்சீர் நேரசையினாலும், நிரையசையினாலும் ஆகலாம். இவ்வசைச்சீர் செய்யுளின் முதலிலும், இடை யிலும் வருவதற்கில்லை. ஆனால், வெண்பா என்னும் செய்யுளின் ஈற்றுச் சீராகவே அது பெரும்பாலும் வரும்.

> ''எதிரதாக் காக்கு மறிவினார்க் கில்லை
> அதிர வருவதோர் நோய்.''

என்று, வெண்பாவின் ஈற்றில் நோய் என்னும் நேரசை ஒரு சீராய் நிற்கின்றது.

> ''உளபோன் முகத்தெவன் செய்யு மன்வினாற்
> கண்ணோட்ட மில்லாத கண்''

என்று, கண் என்னும் நேரசை ஒரு சீராய் நிற்கின்றது.

"பற்றற்ற கண்ணும் பழமைபா ராட்டுதல்
சுற்றத்தார் கண்ணே யுள"

என்று, யுள என்னும் நிரையசை ஈற்றில் ஒரு சீராய் நிற்கின்றது.

"நனவினா னல்காரை நோவர் கனவினாற்
காதலர்க் காணா தவர்"

என்று, தவர் என்னும் நிரையசை ஈற்றில் ஓரசையாய் நிற்கின்றது.

நேரசையாலான அசைச்சீரை நாள் என்றும், நிரையசையாலான அசைச்சீரை மலர் என்றும் அழைப்பர்.

ஈரசைச்சீர் :

இரண்டு அசைகளால் அமைந்த சீர் ஈரசைச் சீர். இதை இயற்சீர் என்பர். இதை, ஆசிரியச் சீர் அல்லது ஆசிரிய உரிச்சீர் என்றும் அழைப்பதுண்டு. இது நான்கு வகையாதல் கூடும்.

(1) தேர்ந்த. வாய்ப்புண், கண்டாய், நின்றேன் என்பனபோல், இரண்டு அசையும் நேரசையாயிருத்தல்.

(2) விரிதிரை, கருங்கொடி, புதுமலர் என்பனபோல் இரண்டு அசையும் நிரையசையாய் இருத்தல்;

(3) கண்பொழி, பண்படும். நற்களா, பூந்துகில் என்பன போல் முதலசை, நேரசையாகவும் இரண்டாவது நிரையசை யாகவும் இருத்தல்.

(4) அதுவோ, கிழமை, கலாபம், ஒழுங்கு என்பன போல் முதலசை நிரையாகவும், இரண்டாவது அசை நேரா கவும் இருத்தல்.

ஆதலின், இயற்சீர்,

" நேர் நேர்—நிரை, நிரை
நேர், நிரை—நிரை, நேர், "

என நான்கு வகையாதல் அறிக.

யாப்பிலக்கணம், இந்நால்வகைச் சீர்களையும் தேமா, புளிமா, கருவிளம், கூவிளம் என்னும் வாய்பாடுகளால் குறிக்கும்.

தேமா—நேர், நேர்
புளிமா—நிரை, நேர்
கருவிளம்—நிரை, நிரை
கூவிளம்—நேர், நிரை

இவை நான்கும் இயற்சீர்கள்.

ஒரு செய்யுளை உதாரணமாக எடுத்துக்கொண்டு, அதில் உள்ள ஈரசைச் சீர்களின் அமைப்பைப் பார்ப்போம்.

" கட்கினியாள் காதலன் காதல் வகைபுனைவா
ளுட்குடையா ளூரா ணியல்பினா—ளுட்கி
யிடனறிந் தூடி யினிதி னுணரு
மடமொழி மாதராள் பெண். "

என்பது ஒரு வெண்பாச் செய்யுள், இதனில் கட்கினியாள், வகைபுனைவா, ளுட்குடையா என்ற மூன்று சீர்களும் மூவசைச்சீர்கள். ஈற்றுச்சீரான பெண் ஓரசைச்சீர். மற்றவையெல்லாம் இரண்டு அசைகளாலான இயற்சீர்கள். (மூவசைச் சீரைப் பற்றிப் பின்னர்க் கற்போம்.)

காதலன்—கா, தலன்—நேர், நிரை—கூவிளம்.

காதல்—கா, தல்—நேர், நேர்—தேமா.

ளூரா—ளூ, ரா—நேர், நேர்—தேமா.

ணியல்பினா—ணியல், பினா—நிரை, நிரை—கருவிளம்.

ளுட்கி - ளுட், கி—நேர், நேர்—தேமா.

யிடனறிந்—யிட,னறிந் — நிரை, நிரை—கருவிளம்.

தூடி—தூ, டி—நேர், நேர்—தேமா.

யினிதி—யினி, தி—நிரை, நேர்—புளிமா.

னுணரு—னுண, ரு—நிரை, நேர்—புளிமா.

மடமொழி—மட, மொழி—நிரை, நிரை—கருவிளம்.

மாதரான்—மா, தரான்—நேர், நிரை—கூவிளம்.

இச்செய்யுளில் நால்வகையான இயற்சீர்களும் வந்திருப்பது காண்க.

நேர் நேர், நிரை நிரை, நேர் நிரை, நிரை நேர் என, இரண்டு அசைகள் (நேர், நிரை) நான்கு விதமாகச் சேர்ந்து ஈரசைச் சீராகக் கூடும் என்பதையும், அவை முறையே தேமா, கருவிளம், கூவிளம், புளிமா என்னும் வாய்பாட்டால் குறிக்கப்படும் என்பதையும், இவ்வீரசைச் சீர்கள் இயற்சீர் என்ற பெயரால் அழைக்கப்படும் என்பதையும் இதுவரை விளக்கினோம்.

“ நேர்நேர் தேமா, நிரைநேர் புளிமா
நிரைநிரை கருவிளம், நேர்நிரை கூவிளம்
எனுமிவை நான்கும் ஈரசைச் சீரே.”

என்பது சூத்திரம்.

ஈரசைச்சீரை ஆசிரியச்சீர் என்றும் அழைப்பதுண்டு. ஏனெனில் இச்சீர் ஆசிரியப்பாவுக் குரியது. தேமா,

புளிமாச் சீர்களை மாச்சீர் என்றும், கருவிளம் கூவிளச்சீர்களை விளச்சீர் என்றும் கூறுவர். இனி மூவசைச்சீர்கள் அமையும் விதத்தைப் பார்ப்போம்

மூவசைச்சீர் :—

ஈரசைச்சீரை இயற்சீர் என்பதுபோல், மூவசைச்சீரை உரிச்சீர் என்று பெயரிட்டு அழைக்கின்றனர்.

மூன்று அசைகளைக் கொண்டு நடக்கும் சீர் மூவசைச்சீர். தேமா, புளிமா, கருவிளம், கூவிளம் என்னும் ஈரசைச்சீர்களோடு நேர் நிரை என்ற அசைகளைத் தனித்தனி சேர்ப்பின் மூவசைச்சீர்கள் எட்டு வகையினவாகும்.

1. சீரின் மூன்று அசைகளும் நேர் அசைகளாய் இருக்கலாம். மண்ணாலே - நேர், நேர், நேர்—தேமாங்காய்.

2. மூன்று அசைகளும் நிரை அசைகளாய் இருக்கலாம், புனற்குறுவிடாய் - நிரை, நிரை, நிரை - கருவிளங்கனி,

3. முதலிரண்டும் நேரசைகளாகவும், ஈற்றசை நிரையாகவும் இருக்கலாம். நீள்வான்சுடர் . நேர், நேர், நிரை—தேமாங்கனி.

4. முதலிரண்டும் நிரையசைகளாகவும், ஈற்றசை நேரசையாகவும் இருக்கலாம். மணங்கமழ்பூ - நிரை, நிரை, நேர் - கருவிளங்காய்.

5 முதலசை நேர், மற்றவிரண்டும் நிரை, ஆயிழையொளிர்—நேர், நிரை, நிரை—கூவிளங்கனி.

6. முதலசை நிரை, மற்றவிரண்டும் நேர், மகனேகாண்—நிரை, நேர், நேர்—புளிமாங்காய்.

7. முதலும் கடையும் நிரை, இடையசை நேர், -கலைவெண்மதி - நிரை, நேர், நிரை—புளிமாங்கனி,

8 முதலும் கடையும் நேர், இடையசை நிரை -கண்படுமோ—நேர், நிரை, நேர்—கூவிளங்காய்.

இயற்சீர் நான்குடன் நேரசை தனித்தனி சேர்வதால் நான்கும் நிரையசை தனித்தனி சேர்வதால் நான்குமாக மூவசைச்சீர்கள் எட்டு வகைகளில் அமையலாகின்றன.

தேமா, புளிமா, கூவிளம், கருவிளம், என்னும் ஈரசை இயற்சீர் வாய்பாடுகளுடன், காய், கனி, என்ற சொற்களைச் சேர்த்துக்கொள்ளலே உரிச்சீர் என்னும் மூவசைச் சீர்களுக்கு உரிய வாய்பாடு. அவ்வாய்பாடு வருமாறு :—

| இயற்சீர் | உரிச்சீர் |
|---|---|
| நேர்நேர்-தேமா | நேர்நேர்நேர்-தேமாங்காய் |
| நிரைநிரை-கருவிளம் | நிரைநிரைநேர்-கருவிளங்காய் |
| நிரைநேர்-புளிமா | நிரைநேர்நேர்-புளிமாங்காய் |
| நேர்நிரை-கூவிளம் | நேர்நிரைநேர்_கூவிளங்காய். |
| நேர்நேர்-தேமா | நேர்நேர்நிரை-தேமாங்கனி |
| நிரைநிரை-கருவிளம் | நிரைநிரைநிரை-கருவிளங்கனி |
| நிரைநேர் புளிமா | நிரைநேர்நிரை-புளிமாங்கனி |
| நேர்நிரை-கூவிளம் | நேர்நிரைநிரை-கூவிளங்கனி, |

செய்யுளொன்றை உதாரணமாக எடுத்துக்கொண்டு அதனிலுள்ள சீர்கள் எவ்வகையின என்று பார்ப்போம்.

" பனித்துண்டஞ் சூடும் படர்சடை
யம்பல வன்னுலகந்
தனித்துண் டவன்றெழுந் தாளோன்
கயிலைப் பயில்சிலம்பா

கனித்தொண்டை வாய்ச்சி கதிர்முலைப்
பாரிப்புக் கொண்டழிவுற்
றினிக்கண் டிலம்பற்றுச் சிற்றிடைக்
கென்றஞ்சு செம்மனையே.''

மணிவாசகர் பாடிய திருச்சிற்றம்பலக் கோவையின் கண்ணுள்ள ஒரு செய்யுள் இது. களவின் கூடி மகிழ்ந்த தலைவியை மணக்க நினையாமல் காலம் நீடிக்கின்ற தலைவனை நோக்கி, வரைவு முடுக்கும் கருத்தில், தலைவியின் உயிர்ப்பாங்கி, ''ஐய, இனி நீ விரைந்து மணங்கொள்ளாயாயின், மகளின் பருவ முதிர்ச்சி கண்டு நற்றாய், அவளை வேறு யாருக்கேனும் அளித்துவிடக்கூடும்.'' என்று கூறும் கருத்தினது இச்செய்யுள்.

[குளிர்ந்த பிறைச் சந்திரனைச் சூடிய விரிந்த சடையையுடையை சிற்றம்பலம் உறைபவனும், உலகத்தைத்தனித்து உண்ட திருமாலால் தொழப்பெற்ற தாள்களையுடையவனும் ஆகிய சிவபெருமானின் கயிலாய மலையில் வாழும் தலைவனே, கொவ்வைக் கனிபோன்ற வாயுடைய தன் மகளின் முலைகளின் பூரிப்பை அன்னை கண்டு மனங்கலங்கி, இவளது சிற்றிடைக்கு ஆதாரமாக ஒரு கணவனை இன்னும் காணமுடியவில்லையே என்று அஞ்சுகின்றாள் ஆதலால் யாது நேருமோ! அறியேன்—என்பது இதன் பொருள்.]

இச் செய்யுளிலுள்ள சீர்களை ஒவ்வொன்றாய் எடுத்துக்கொண்டு ஆய்வோம்.

பனித்துண்டஞ்—சீர் முதல் ப என்பது குறில். தனிக்குறில் சீரின் முதலில் ஓரசையாகாது என்று கூறியுள்ளோம். எனவே, அதை அடுத்துள்ள னித் என்ற எழுத்துக்களைச் சேர்த்துக்கொண்டு பனித் என்பதை முதலசையாகக் கொள்ளவேண்டும். இது 'நிரை அசை, பிறகு,

து என்ற எழுத்துடன் ண் என்ற மெய்யைச் சேர்த்தால் துண் என்பது இரண்டாவது அசையாகும். அது நேரசை. அதை அடுத்து நிற்கும் டஞ் ஒரு நேரசை யாகும். ஆகவே, இச் சீர் ஒரு நிரையசையையும் இரண்டு நேரசைகளையும் கொண்டது பனித்-துண்-டஞ். (நிரை, நேர், நேர்) புளிமாங்காய். மூவசைச்சீர்.

சூடும்—சீர் முதல் சூ என்பது நெடில், தனி நெடில் ஓரசை யாகும். அதை அடுத்து நிற்கும் டும் ஓரசை. சூ-டும் (நேர், நேர்) தேமா, ஈரசைச்சீர்;

படர்சடை—படர்·சடை. (நிரை, நிரை) கருவிளம் ஈரசைச்சீர்.

யம்பல—யம்-பல (நேர், நிரை) கூவிளம். ஈரசைச்சீர்.

தனினுலகங்—வன்-னுல-கங், (நேர், நிரை, நேர்) கூவிளங் காய் மூவசைச்சீர்.

தனித்துண்—தனித்-துண். (நிரை-நேர்) புளிமா, ஈரசைச்சீர்

டவன்ஒருழுங்— டவன் ஒருழுங் (நிரை, நிரை; கருவிளம். ஈரசைச்சீர்.

தானோன்—தா-னோன் (நேர், நேர்) தேமா. ஈரசைச்சீர்.

கயிலைப்—கயி-லைப் (நிரை, நேர்) புளிமா. ஈரசைச்சீர்.

பயில்சிலம்பா - பயில்-சிலம்-பா. (நிரை, நிரை, நேர்) கருவிளங்காய் மூவசைச்சீர்.

கனித்தொண்டை - கனித் - தொண் - டை. (நிரை, நேர், நேர்) புளிமாங்காய். மூவசைச்சீர்,

வாய்ச்சி—வாய்-ச்சி. (நேர், நேர்) தேமா. ஈரசைச்சீர்.

கதிர்முலைப்—கதிர் - முலைப். (நிரை, நிரை) கருவிளம். ஈரசைச்சீர்.

பாரிப்புக்—பா·ரிப்புக். (நேர், நேர், நேர்) தேமாங்காய். மூவசைச்சீர்.

கண்டழிவுற்—கண்·டழி-வுற். (நேர், நிரை, நேர்) கூவிளங்காய். மூவசைச்சீர்.

நிணிக்கண்—நிணிக்-கண். (நிரை, நேர்)புளிமா. ஈரசைச்சீர்.

டிலம்பற்றுச்—டிலம்-பற்-றுச். (நிரை, நேர், நேர்) புளிமாங்காய். மூவசைச்சீர்,

சிற்றிடைக்—சிற்-றிடைக். (நேர், நிரை,) கூவிளம். ஈரசைச்சீர்.

கென்றஞ்சு—கென்-றஞ்·சு. (நேர், நேர், நேர்) சீரின் இறுதியில் தனிக் குறில் நேரசையாய் நிற்கும் என்று கூறியுள்ளோம். தேமாங்காய், மூவசைச்சீர்

மெம்மனையே—மெம் மனை-யே (நேர், நிரை, நேர்) கூவிளங்காய். மூவசைச்சீர்.

இச் செய்யுளில் நிரையசையை ஈற்றிலுடைய மூச்சீர்கள் வரவில்லை. அதாவது, தேமாங்கனி, புளிமாங்கனி, கருவிளங்கனி, கூவிளங்கனி என்ற வாய்பாடுடைய நால் வகையான மூச்சீர்களும் இச்செய்யுளில் வரவில்லை, இவை தவிர மற்றவை இச்செய்யுளில் வந்திருக்கக் காணலாம்.

| | |
|---|---|
| கூ டும்—தேமா<br>படர் சடை—கரும்விளம்<br>யம் பல—கூவிளம்<br>கயி லைப்—புளிமா | இயற்சீர். |
| கென் றஞ் சு—தேமாங்காய்<br>பயில் சிலம் பா—கருவிளங்காய்<br>வன் னுல கம்—கூவிளங்காய்<br>பனித் துண் டஞ்—புளிமாங்காய் | உரிச்சீர். |

உரிச்சீர், நேர் ஈற்று உரிச்சீர் என்றும், நிரை ஈற்று உரிச்சீர் என்றும் இருவகைப்படும். தேமாங்காய், கருவிளங்காய், கூவிளங்காய், புளிமாங்காய் என நேரசையால் முடிகின்ற நான்கு சீர்களும் நேர் ஈற்று உரிச்சீர் இதை வெண்பா உரிச்சீர் என்றும் அழைப்பர்.

தேமாங்கனி, கருவிளங்கனி, கூவிளங்கனி, புளிமாங்கனி என நிரை அசையால் முடிகின்ற நான்கு சீர்களும் நிரை ஈற்று உரிச்சீர். இதை வஞ்சியுரிச்சீர் என்று அழைப்பர்.

நேரசையை ஈற்றிலுடைய வெண்பா உரிச்சீரை வெண்சீர், என்றும், காய்ச்சீர் என்றும் வழங்குவதுண்டு.

நேரசையை ஈற்றிலுடைய வெண்சீர்கள் (மூவசைச் சீர்கள்) வெண்பாவிற்கு உரியவை. நிரையசையை ஈற்றிலுடைய மூவசைச் சீர்கள் வெண்பாவில் இடம் பெறா. எனவேதான், வெண்பாவிற்கு உரியவான நேரீற்று மூவசைச் சீர்களை வெண்பா உரிச்சீர் என்று அழைக்கின்றனர். வெண்பா உரிச்சீர் என்பது குறுகி வெண்சீர் ஆயிற்று. இவைகளுக்குரிய வாய்பாடு காய் என்று முடிவதால், காய்ச்சீர் என்று அழைப்பதும் பொருத்தமுடையதே. காய்ச்சீர் எல்லாம் மூவசைச் சீர்களே.

இயற்சீரான, தேமா, புளிமாச் சீர்களை, மாச்சீர் என்றும், கருவிளம், கூவிளச் சீர்களை விளச்சீர் என்றும் அழைப்பர்.

இனி நிரையசையை ஈற்றிலுடைய மூவசைச் சீர்களைப் பார்ப்போம். நிரையீற்று மூவசைச்சீர்கள் வஞ்சிப்பாவிற்கு உரியவை. எனவே, அவற்றை வஞ்சியுரிச்சீர் என்று அழைப்பர். கனிச்சீர் என்றும் குறிப்பதுண்டு. கனிச்சீர்கள் எல்லாம் நிரையை ஈற்றிலுடைய மூவசைச் சீர்களே.

கனிச்சீர் எனப்படும் வஞ்சியுரிச் சீர்கள் வரும் செய்யுள் ஒன்றைப் பார்ப்போம்.

குறிப்பு.—இயற்சீர் எனப்படும் ஈரசைச் சீர்கள், ஆசிரியப்பா என்னும் பாவிற்குப் பெரும்பாலும் உரியவை. அவைகளை ஆசிரியச்சீர், அல்லது ஆசிரியவுரிச்சீர் என்று அழைப்பது வழக்கம் என்று கூறினோம். ஆனால் இயற்சீர் வெண்பாவில் வரக்கூடாதென்றும், காய்ச்சீர் வஞ்சிப்பாவில் வரக்கூடாதென்றும், நேயர்கள் எண்ண வேண்டா.

நீற்றானிறை வாகிய மேனியுட
　　னிறையன்புறு சிந்தையி னேசமிக
மாற்றார்புர மாற்றிய வேதியரை
　　மருளும்பிணி மாயை யறுத்திடுவான்
கூற்றாயின வாறு விலக்ககிலீ
　　ரெனநீடிய கோதி றிருப்பதிகம்
போற்றாலுல கேழின் வருந்துயரம்
　　போமாறெதிர் நின்று புகன்றனரால்.

நீற்றானிறை—நீற்-றா-னிறை. மூவசைச்சீர். (நேர், நேர், நிரை) தேமாங்கனி. வஞ்சியுரிச்சீர் எனப்படும் கனிச்சீர்.

வாகிய—வா-கிய. ஈரசைச்சீர். (நேர், நிரை) கூவிளம். இயற்சீர் எனப்படும் ஆசிரிய வுரிச்சீர்.

மேனியுட—மே-னியு-ட. மூவசைச்சீர். (நேர், நிரை, நேர்) கூவிளங்காய். வெண்பாவுரிச்சீர் எனப்படும் காய்ச்சீர். (சீரின் ஈற்றில் ட என்னும் தனிக்குறில் ஒரு நேரசையாயிற்று.)

னிறையன்புறு—னிறை-யன்-புறு. மூவசைச்சீர். (நிரை, நேர், நிரை) புளிமாங்கனி. வஞ்சியுரிச்சீர் எனப்படும் கனிச்சீர்.

சிந்தையி—சிந்-தையி. ஈரசைச்சீர். (நேர்-நிரை) கூவிளம். இயற்சீர் எனப்படும் ஆசிரியவுரிச்சீர். இது விளச்சீர் என்றும் வழங்கப்படும். (சிந்தையி என்பதிலுள்ள தை என்பது ஒரு மாத்திரை அளவினதே. ஐ என்பது சொல்லின் இடையிலும், கடையிலும் குறிலைப்போல் ஒரு மாத்திரை அளவினையுடையது என்று கூறியுள்ளோம். அதை நெடிலென்று மதித்து, "சிந்-தை-யி" என்று பிரித்தல் பிழை.)

னேசமிக—னே-சமி-க. மூவசைச்சீர். (நேர், நிரை, நேர்) கூவிளங்காய். வெண்பாவுரிச்சீர் எனப்படும் காய்ச்சீர்.

மாற்றார்—மாற்-றார்-புர. மூவசைச்சீர். (நேர், நேர், நிரை) தேமாங்கனி. வஞ்சியுரிச்சீர் என்னும் கனிச்சீர்.

மாற்றிய—மாற்-றிய. ஈரசைச்சீர். (நேர், நிரை) கூவிளம். இயற்சீர் அல்லது ஆசிரியவுரிச்சீர் எனப்படும் விளச்சீர்.

வேதியரை—வே-தியு-ரை. மூவசைச்சீர். (நேர், நிரை, நேர்) கூவிளங்காய். வெண்பாவுரிச்சீர் எனப்படும் காய்ச்சீர்.

மருளும்பிணி—மரு—ளும்-பிணி. மூவசைச்சீர். (நிரை, நேர், நிரை) புளிமாங்கனி. வஞ்சியுரிச்சீர் எனப்படும் கனிச்சீர்.

மாவை—மா-வை. ஈரசைச்சீர். (நேர், நேர்) தேமா. ஆசிரியவுரிச்சீர் எனப்படும் மாச்சீர்.

பறுத்திடுவோன்—பறுத்-திடு-வோன். மூவசைச்சீர். (நிரை, நிரை, நேர்) கருவிளங்காய். வெண்பா வுரிச்சீர் எனப்படும் காய்ச்சீர்.

இதுவரையில் கூறி வந்த சீர்களையும், அவைகளின் பெயர் தன்மைகளையும், நேயர்கள் மறக்காமலிருக்கும் பொருட்டு, அவைகளைச் சுருக்கமாய்க் கூறுவோம்.

1. அசைச்சீர் :

ஓரசை சீராய் நிற்குமாறைல் அது அசைச்சீர் ஆகும். அசைச்சீர், நேரசைச்சீர் என்றும் நிரையசைச்சீர் என்றும் இருவகைப்படும். இவ்விருவகைச் சீர்களும் பெரும்பாலும் வெண்பாவின் ஈற்றுச் சீராய் நிற்கும். செய்யுளின் முதலிலும் இடையிலும் அவை சீராய் நிற்றற்கில்லை.

நேரசைச் சீரின் வாய்பாடு நாள். நிரையசைச்சீரின் வாய்பாடு மலர்.

2. ஈரசைச்சீர்

இரண்டு அசைகளால் ஆகும் சீர் ஈரசைச் சீர். இதை, இயற்சீர் அல்லது ஆசிரியச்சீர், அல்லது ஆசிரியவுரிச்சீர் என்றழைப்பர். இது, மாச்சீர், விளச்சீர் என்ற பகுப்பினை யுடையது.

தேமா—நேர் நேர்.

புளிமா—நிரை நேர்,—இவ்விரு நேரீற்று இயற்சீர்களும் மாச்சீர் என்ற வாய்பாட்டின.

கருவிளம்—நிரை நிரை,

கூவிளம்—நேர் நிரை,—இவ்விரு நிரையீற்று இயற்சீர்களும் விளச்சீர் என்ற வாய்பாட்டின.

3. மூவசைச்சீர்:

மூன்று அசைகளாலாகும் இச்சீரை உரிச்சீர் என்று அழைப்பர்.

தேமாங்காய்—நேர் நேர் நேர்.

புளிமாங்காய்—நிரை நேர் நேர்.

கருவிளங்காய்—நிரை நிரை நேர்.

கூவிளங்காய்—நேர் நிரை நேர்.—இவை நான்கும் காயை ஈற்றிலுடைய உரிச்சீர். இதை வெண்சீர், அல்லது வெண்பாவுரிச்சீர் அல்லது காய்ச்சீர் என்பர்.

தேமாங்கனி—நேர் நேர் நிரை

புளிமாங்கனி - நிரை நேர் நிரை

கருவிளங்கனி—நிரை நிரை நிரை

கூவிளங்கனி—நேர் நிரை நிரை,—இவை நான்கும் கனியை ஈற்றிலுடைய உரிச்சீர். இதை வஞ்சி யுரிச்சீர், அல்லது வஞ்சிச்சீர், அல்லது கனிச்சீர் என்று அழைப்பர்.

அசைச்சீர் வெண்பாவின் ஈற்றில் நிற்கும் இயல்பினது. இயற்சீர் ஆசிரியப்பாவிற்கு உரியது காயீற்று உரிச்சீர் வெண்பாவிற்கு உரியது. கனியீற்று உரிச்சீர் வஞ்சிப்பா விற்குரியது.

நாலசைச்சீர்

இதுவரை, ஓரசை, ஈரசை மூவசைச் சீர்களைப் பார்த்தோம். இனிப் பொதுச்சீர் என்று அழைக்கப்படும் சிறப்பில் நாலசைச் சீர்களைப் பார்ப்போம்.

நான்கு அசைகளாலான சீரும் அபூர்வமாய்ச் செய்யுள் களில் வருவதுண்டு. நாலசைச்சீர் சிறப்புடையதாகக் கருதப்படுவதில்லை. இதைப் பொதுச்சீர் என்று வழங்குவர். சிறப்பிலா மக்களைப் பொது ஜனங்கள் என்பதுபோல், சிறப்பிலா இச்சீரையும், ஆன்றோர் பொதுச்சீர் என்று பெயரிட்டனர் போலும்.

இரண்டு அசைகளைக் கொண்டது இயற்சீர். இரண்டு இயற்சீர்கள் ஒன்று சேர்ந்து ஒரு நாலசைச்சீர் ஆனதாகக்

கொள்ளலாம். அல்லது, மூன்று அசைகளை உடைய உரிச்சீரோடு நேரும் நிரையும் சேர்ந்து பொதுச்சீர் பிறந்த தாகவும் கொள்ளலாம்.

நேர், நிரை என்னும் இரண்டு அசைகளும் சேரவல்ல முறை நோக்கி இயற்சீர் நான்கு வகைப்படும் என்பதை அறிவோம். ஒவ்வொரு வகை இயற்சீரினோடும் நால்வகை இயற்சீரும் சேர்ந்து பொதுச்சீர் பதினாறு வகையினதாகும். உரிச்சீரினின்று பிறந்ததாக இதைக் கொண்டாலும், எட்டு உரிச்சீரோடு நேரும் நிரையும் சேர்ந்து (8×2) பதினாறு ஆதல் காண்க.

இப் பொதுச்சீர்கள் செய்யுளில் பெரும்பாலும் இடம் பெறுவதில்லை. ஆனால் வஞ்சிப்பாவில் இவை இடம் பெறக் காண்கின்றோம்.

அந்தரதுந்துபி, என்னுஞ் சீரை எடுத்துக் கொள்வோம். இதுவொரு நாலசைச்சீர். இது அந்-தர-துந்-துபி என்று அசைபிரியும். இரண்டு கூவிளஞ்சீர்களைக் கொண்ட தென் றேனும், அல்லது கூவிளங்காயின் ஈற்றில் நிரையசையைக் கொண்ட தென்றேனுங் கொள்ளலாம். இனி, இப்பொதுச் சீரின் வகைகளையும், அவைகளுக்குரிய வாய்பாடுகளையும் அறிவோம்.

1. நேர்-நேர்-நேர்-நேர்
2. நேர்-நேர்-நிரை-நேர்
3. நேர்-நிரை-நேர்-நேர்
4. நேர்-நிரை-நிரை-நேர்
5. நிரை-நேர்-நேர்-நேர்
6. நிரை-நிரை-நிரை-நேர்
7. நிரை-நிரை-நேர்-நேர்

8. நிரை-நேர்-நிரை-நேர்,—என, நேரிசையை ஈற்றில் பெற்ற எட்டு வகைப் பொதுச்சீர்கள்.

1. நிரை-நிரை-நிரை-நிரை
2. நிரை-நிரை-நேர்-நிரை
3. நிரை-நேர்-நிரை-நிரை
4. நிரை-நேர்-நேர் நிரை
5 நேர்-நிரை-நிரை-நிரை
6. நேர்-நேர்-நேர்-நிரை
7. நேர்-நேர்-நிரை-நிரை
8. நேர்-நிரை-நேர்-நிரை, என நிரையசையை ஈற்றில் பெற்ற எட்டு வகைப் பொதுச்சீர்கள்.

ஆகவே நாலசைகளைக் கொண்ட பொதுச்சீர்கள் பதினாறு வகைகளில் அமையலாகின்றன. இயற்சீர் உரிச்சீர்களைப் போலவே, பொதுச்சீர்களுக்கும் வாய்பாடுகள் உண்டு.

இயற்சீர் நான்கினோடு நேர், நேர், தொடரின் தண்பூ என்றும், நேர், நிரை தொடரின் தண்ணிழல் என்றும், நிரை, நேர் தொடரின் நறும்பூ என்றும், நிரை, நிரை தொடரின் நறுநிழல் என்றும் சேர்த்துக் கொள்ளலே, இப் பொதுச் சீருக்குரிய வாய்பாடு.

உதாரணம் :

1. அங்கண்ஞாலம்—(அங்-கண்-ஞா-லம்) நேர், நேர் நேர், நேர்—தேமாந் தண்பூ.

2. கள்வார் குழலாய்—(கள்-வார்-குழ-லாய்) நேர், நேர், நிரை, நேர்—தேமாநறும்பூ.

3. வெங்களியானை—(வெங்-களி-யா-னை) நேர். நிரை, நேர், நேர்—கூவிளந்தண்பூ.

4 கொங்கவிரசோகின் — (கொங் - கவி -ரசோ-கின்) நேர். நிரை, நிரை, நேர்—கூவிளநறும்பூ.

5. வடிவார்கூந்தல்—(வடி-வார்-கூந் தல்) நிரை,நேர், நேர், நேர்—புளிமாந்தண்பூ.

6 முழுமதிபுரையும்—(முழு-மதி-புரை-யும்) நிரை,நிரை நிரை, நேர்—கருவிளநறும்பூ.

7. எழில்மிகுபாவாய்—(எழில்-மிகு-பா-வாய்) நிரை, நிரை, நேர், நேர்—கருவிளந்தண்பூ.

8. செழுநீர்ப்பவளம்—(செழு-நீர்ப்-பவ-ளம்) நிரை. நேர், நிரை, நேர்—புளிமாநறும்பூ இவை எட்டும் நேரசையை ஈற்றிலுடைய பொதுச் சீர்கள். இவற்றைப் பூச்சீர்கள் என்று வழங்குவர்.

9. கொதிதிரைபெறிகடல் — (கொதி - திரை - பெறி - கடல்) நிரை, நிரை. நிரை. நிரை-கரிவிளநறுநிழல்.

10. கலை பல கற்றவர்—(கலை-பல-கற்-றவர்) நிரை, நிரை, நேர், நிரை—கருவிளந்தண்ணிழல். (தண்-நிழல்)

11. மதியோவிதுவென-(மதி-யோ-விது-வென) நிரை, நேர், நிரை, நிரை—புளிமாநறுநிழல்.

12. கயல்போற்கண்ணிணை— (கயல் - போற் - கண் ணிணை) நிரை, நேர், நேர், நிரை— புளிமாந்தண் ணிழல்

13. பொன்புனைநெடுமதில் — (பொன் - புனை -நெடு-மதில்) நேர், நிரை, நிரை, நிரை—கூவிளநறுநிழல்.

14. வெங்கண் வினைப்பயன்—(வெங்-கண்—வினைப்-பயன்) நேர், நேர், நிரை,நிரை- தேமா நறுநிழல்.

15. நீள்வான் செல்மதி—(நீள்-வான்-செல்-மதி) நேர், நேர், நேர், நிரை—தேமாந்தண்ணிழல்.

16. அந்தரதுந்துமி—(அந்-தர-துந்-துமி) நேர், நிரை. நேர், நிரை—கூவிளந்தண்ணிழல்.

பொதுச் சீர்களை அதிகமாகவுடைய செய்யுள் ஒன்றை உதாரணமாக எடுத்துக் கொண்டு, சீர்களையும், வாய்பாடு களையும் பார்ப்போம்.

"பைம்பொற்குன்றே பணையிளவனமுலை
அம்புத்துணையே யரிமதருண்கண்
குனிசிலையிரண்டே கொடுநன்புருவம்
பானிறமதியே பழிதீர்நன்முகம்
கொடியேதனிரிடை கொண்மூவேகுழல்
ஆடரவின்பட மாமேகடிதடம்
காந்தளந்துணைமல ரவையேகையும்
பூந்தளிரென்றே புடைபெயர்மெல்லடி

நண்பா

படர்புகழ் மாறன் பராங்குசன்
துடரிவரை பொழிலே தோகைய திடனே."

இது, மாறன் பாப்பாவினம் என்னும் நூலின்கண் காணப்படும் ஒரு செய்யுள்.

காதலால் வருந்திய தலைவனை நோக்கி, "உனக்கு மையல் ஊட்டியவள் யாவள், எத்தன்மையவள், எங்குளள்?" என்று கேட்ட அந்தணப்பாங்கனுக்குத் தலைவன் கூறிய மொழிகளால் அமைந்த செய்யுள் இது.

[நண்பா, இளமையும் அழகும் பொருந்திய பருத்த அவளது முலைகள் பசும் பொன்மலையே. செவ்வரி படர்ந்து மதர்த்து மையுண்ட அவளது இரண்டு கண் களும் இரண்டு அம்புகளே. வளைந்த அழகிய அவளது புருவங்கள் இரண்டும் வளைந்த இரண்டு விற்களே. பழிப்பற்ற அவளது அழகிய முகம், பால்போன்ற நிற முடைய சந்திரனே. அவளது துவளும் இடுப்பு, பூங்கொடியே. அவளது கூந்தல் மேகமே. அவளது இரு கைகளும், இரண்டு அழகிய காந்தள் மலரே. அவள் நடக்கின்ற மென்மையான அடிகள் பூந்தளிரே (அத்தகை நலத்தினளான) தோகைபோல்வாள் இருக்குமிடமோ பரந்த புகழுடைய மாறன் பராங்குசனது துடரி என்னு மிடத்திலிருக்கும் வளப்பம் பொருந்திய பூஞ்சோலையாகும் - என்பது செய்யுளின் பொருள்.]

இவ்வழகிய செய்யுளிலுள்ள சீர்களை ஒவ்வொன்றாய் எடுத்துக்கொண்டு அதன் வாய்பாட்டைக் கற்போம்.

1. " பைம்பொற்குன்றே—தேமாந்தண்பூ
2. பணையிளவனமுலை—கருவிள நறுநிழல்
3. அம்புத்துணையே—தேமாநறும்பூ
4. அரிமதருண்கண்—கருவிளந்தண்பூ
5 குனிசிலையிரண்டே—கருவிளநறும்பூ
6. கொடுநன்புருவம்—புளிமா நறும்பூ
7 பானிறமதியே—கூவிள நறும்பூ
8 பழிதீர் நன்முகம்—புளிமாந்தண்ணிழல்
9 கொடியே தளரிடை—புளிமாநறுநிழல்
10. கொண்மூவேகுழல்—தேமாந்தண்ணிழல்
11. ஆடரவின்பட—கூவிளந்தண்ணிழல்
12. மாமே கடிதடங்—தேமாநறு நிழல்
13 காந்தளந்துணைமல—கூவிளநறுநிழல்

14. ரவையேகையும்—புளிமாந்தண்பூ
15. பூந்தளிரன்றே - கூவிளந்தண்பூ
16 புடைபெயர்மெல்லடி—கருவிளந்தண்ணிழல்,"

என, இச்செய்யுளில் பொதுச்சீர் பதினாறும் வந்துள்ளது.

நன்பா—தேமா
படர்புகழ்—கருவிளம்
மாறன்—தேமா
பராங்குசன்—கருவிளம்
துவடரின்—கருவிளம்
பொழிலே—புளிமா
தோகைய—கூவிளம்
திடனே—புளிமா

செய்யுளுறுப்பான சீர்களைப்பற்றி அறிந்தோம். இனிச் சீர்களின் சேர்க்கையால் அமையும் தளையைப் பார்ப்போம்.

# 4. தளை

இதுவரை அசைகளையும், அசைகளின் சேர்க்கையால் அமையும் சீர்களின் விதங்களையுங் கண்டோம். இனிச் சீர்கள் செய்யுளடிகளில் எவ்வாறு தொடர்கின்றன என்பதைப் பார்ப்போம்.

ஓசையை ஆதாரமாகக் கொண்டது செய்யுள். செய்யுளின் ஓசையமைப்பும், சீர்கள் ஒன்றையொன்று தொடரும் முறையைப் பற்றியதாகும். ஒரு சீர், அதை அடுத்துவரும் சீரோடு கூடும் முறையைத் தளை என்பர். தளை என்றால் கட்டு, பிணை. இரண்டு சீர்கள் பிணைந்து சம்பந்தங் கொள்ளல் தளை. தளைகள் நிலைச்சீரின் தன்மையையும், வருஞ்சீரின் முதலசையையும் பற்றி அமைகின்றன.

"அணங்குகொ லாய்மயில் கொல்லோ"

என்ற செய்யுளடியை எடுத்துக் கொள்வோம். இதில், 'அணங்குகொ' என்னும் முதற்சீர், நிலைச்சீர். அதை அடுத்து நிற்பது லாய்மயில் என்னும் சீர். எனவே, லாய்மயில் என்பது வருஞ்சீராகின்றது.

மீண்டும் லாய்மயில் என்னும் வருஞ்சீர், அதைத் தொடரும் கொல்லோ என்பதை நோக்கி நிலைச்சீராய் விடும்.

எனவே, செய்யுளில் முதற்சீரும், இறுதிச் சீரும் தவிர, மற்றெல்லாச் சீர்களும், பின்வரும் சீரைக் கருதி நிலைச் சீராகவும், முன்சென்ற சீரைக் கருதி வருஞ் சீராகவும் கருதப்படும். ஒரு செய்யுளை உதாரணமாக எடுத்துக் கொள்வோம்.

"அன்புற் றெவர்க்கும் அறனல்ல செய்யாது
தென்புற்று நன்குணற்றுஞ் செம்மைத் திருவுடையார்
இன்புற்று வாழ்வ ரினிது."

அன்புற்-றெவர்க்கும்,
றெவர்க்கும்-அறனல்ல,
அறனல்ல-செய்யாது,
செய்யாது-தென்புற்று
தென்புற்று-நன்குணற்றுஞ்,
நன்குணற்றுஞ்-செம்மைத்,
செம்மைத்-திருவுடையார்,
திருவுடையார்-இன்புற்று,
இன்புற்று-வாழ்வ,
வாழ்வ-ரினிது.

மேலே காட்டிய உதாரணத்தில், முதல்சீரும், இறுதிச் சீரும் தவிர, மற்றவை ஒவ்வொன்றும், பின்வரும் *சீரைக்* கருதி நிலைச்சீராகவும், முன்சென்ற *சீரைக்* கருதி வருஞ் *சீராகவும்* நிற்றலைக் காண்க.

ஒரு *சீர்* நிலைச்சீராக இருக்கும்பொழுது, அது இயற் *சீரா*, உரிச்*சீரா*, பொதுச்*சீரா* என்று அறிவதுடன், *சீரின்* ஈற்றசை நேரா அல்லது நிரையா என்பதையும் கருதவேண்டும், ஒரு *சீர்* வருஞ்*சீரா*யிருக்கும்பொழுது அச் *சீரின்* முதலசை நேரசையா அல்லது நிரையசையா என்பதை மாத்திரம் நோக்கினால் போதும்.

அவ்வாறு நோக்குங்கால், நிலைச்*சீரின்* ஈறு, வருஞ் *சீரின்* முதல் ஆகிய ஈரிடத்தும் நேரசையே இருக்கலாம்

அல்லது, ஈரிடத்தும் நிரையசையே இருக்கலாம்.

அல்லது, ஒன்று நேரசையாகவும், மற்றது நிரையசை யாகவும் இருக்கலாம்

மேலும், நேரசை அல்லது நிரையசையை ஈற்றில் பெற்று நிலைச்சீராய் நிற்குஞ்சீர், இயற்சீராகவேனும் உரிச்சீராகவேனும் அல்லது பொதுச்சீராகவேனும் இருக்கலாம். தளைகளின் தன்மையும், பெயரும் இவைகளைப் பற்றியவாகும்.

பாக்கள், ஆசிரியப்பா, வெண்பா, கலிப்பா, வஞ்சிப்பா என்று நான்கு வகைப்படும். அவ்வப் பாக்களுக்கு உரித்தாகித் தளைகளும் ஆசிரியத்தளை, வெண்டளை, கலித்தளை, வஞ்சித்தளை என்று நான்கு வகைப்படுகின்றன. இனித் தளைகளை ஒவ்வொன்றாய் எடுத்துக்கொண்டு அதற்குரிய இலக்கணத்தை விளக்குவோம்.

## ஆசிரியத்தளை

ஆசிரியத்தளை அமைவதற்கு, வருஞ்சீர் யாவதாயினும் நிலைச்சீர் இயற்சீராயிருத்தல் அவசியமாகும்.

நிலைச்சீர் (ஈரசைச்சீரான) இயற்சீராக, அச்சீரின் ஈற்றசை நேரசையாயின், வருஞ்சீரின் முதல் அசையும் நேரசையாய் இருக்கவேண்டும்; இயற்சீரின் ஈற்றசை நிரையசையாயின், வருஞ்சீரின் முதலசையும் நிரையசையாய் இருக்கவேண்டும். அவ்வாறு சீர்கள் தொடர்பு கொண்டு நடத்தலைத் தளை என்பர்.

உதாரணம் :

கண்டார் கொல்லோ என்பதில் கண்டார் என்னும் நிலைச்சீர் இரண்டு அசைகளாலான இயற்சீர். அதன் ஈற்றசையான டார் நேரசை. வருஞ்சீரான கொல்லோ என்பதின் முதலசையான கொல் என்பதும் நேரசை. எனவே, இவ்விரு சீர்களும் ஆசிரியத்தளை ஏற்று நிற்கின்றன.

கண்டா-ருய்வாரோ—சீர்கள் இவ்வாறு தொடரினும் ஆசிரியத்தளையே. வருஞ்சீராகிய ருய்வாரோ ஈரசைச் சீரன்று. வெண்பா வுரிச்சீர் என்னும் மூவசைச்சீர். எனினும், கண்டா என்னும் நிலைச்சீரின் ஈற்றிலும், ருய்வாரோ என்னும் வருஞ்சீரின் முதலிலும் நேரசைகளே ஒன்றி வருவதால் ஆசிரியத்தளை. வருஞ்சீரின் முதலசையைத்தான் கருதவேண்டும். வருஞ்சீர் இன்ன சீர் என்று கருதவேண்டியதில்லை.

குறிப்பு : 'கண்டா-ருய்வாரோ' என்பதை முன் பின்னாக மாற்றியமைத்தால், 'உய்வாரோ-கண்டார்' என்று அமையும். 'உய்வாரோ' என்னும் நிலைச்சீர், இயற்சீர் அன்று ஆதலின். இங்கே நிலைச்சீரின் ஈறு, வருஞ்சீரின் முதல் ஆகிய ஈரிடத்தும் நேரசையே இருந்த போதிலும் ஆசிரியத்தளையாகாது. நிலைச்சீர் இயற்சீரா யிருத்தல் ஆசிரியத்தளை அமைவதற்கு அவசியமாகும்.

இவ்வாறே. நிலைச்சீர் இயற்சீராக, அதன் ஈற்றசை நிரையசையாயின், வருஞ்சீரின் முதலசையும் நிரையசை யாய் இருக்கவேண்டும். அப்பொழுதுதான் ஆசி யத் தளை அமையும்.

திரைபெறி-கடலே – நிலைச்சீர் நிரையசையை ஈற்றி லுடைய இயற்சீர். வருஞ்சீரின் முதலும் நிரையசை எனவே ஆசிரியத்தளை.

ஆர்கலி-யுலகத்து—நிலைச்சீர் நிரையசையை ஈற்றி லுடைய இயற்சீர் யுலகத்து என்னும் வருஞ்சீர் உரிச் சீராயினும், அதன் முதலசை நிரையசையாதலால், ஆசிரியத்தளை.

குறிப்பு : மதிபொழிதரு-நிலவொளி எனச் சீர்கள் நிற்கு மாயின், நிலைச்சீர் மூன்றசைகளாலான கனிச்சீராகை யினால், வருஞ்சீர் ஈரசைச் சீராயிருந்தபோதிலும், ஆசிரி

யத்தளை அமையாது இந்த உதாரணத்தில் நிலைச்சீரின் ஈற்றிலும், வருஞ்சீரின் முதலிலும் நிரையசைகள் இருக்கின்றன. எனினும், நிலைச்சீர் இயற்சீர் அல்லாமையின் ஆசிரியத்தளை அமையாமை அறிக.

நிலைச்சீர் இயற்சீராயினும், நிலைச்சீரின் ஈற்றசையும் வருஞ்சீரின் முதலசையும் ஒன்றாமல் வேறுவேறாய் இருப்பின் ஆசிரியத்தளை அமையாது. அதாவது, "நேரும் நிரையும்' "நிரையும் நேருமாய்", நிலைச்சீரின் ஈறும், வருஞ்சீரின் முதலும் இருப்பின் ஆசிரியத்தளை அமையாது. சீர்கள் நேருக்கு நேரும் நிரைக்கு நிரையுமாய் இருத்தல் ஆசிரியத்தளை அமைவுக்கு அவசியம்.

கண்டனன்-வேந்தன்—நிரையும் நேருமாய் நிற்பதால் ஆசிரியத்தளை அன்று.

உரைத்த-வரசன் — நேரும் நிரையுமாய் நிற்பதால் ஆசிரியத்தளை அன்று.

எனவே, ஆசிரியத்தளை அமைவதற்கு—

1. நிலைச்சீர் இயற்சீராக இருக்கவேண்டும்.
2. நிலைச்சீரின் ஈற்றசையும், வருஞ்சீரின் முதலசையும் ஒன்றாயிருக்க வேண்டும். (அதாவது நேருக்கு நேர் நிரைக்கு நிரை.)
3. இவ்வாறு சீர்கள் ஒன்றி நிற்பின், வருஞ்சீர எத்தன்மையது என்றும், நிலைச்சீர் வருஞ்சீர்களிலுள்ள மற்ற அசைகளைப் பற்றியும் கருத வேண்டியதில்லை.

என்பதை அறிக.

கீழ்வரும் வகைகளில் சீர்கள் ஒன்றையொன்று தொடருங்கால் ஆசிரியத்தளை விளையும் :

| | நிலைச்சீர் | வருஞ்சீர் |
|---|---|---|
| (1) | தேமா அல்லது புளிமா (இதை மாச்சீர் என்றும் வழங்குவர்) | தேமா<br>கூவிளம்<br>தேமாங்காய்<br>தேமாங்கனி<br>கூவிளங்காய்<br>கூவிளங்கனி |
| (2) | கருவிளம் அல்லது கூவிளம் (இதை விளச்சீர் என்றும் வழங்குவர்) | புளிமா<br>கருவிளம்<br>புளிமாங்காய்<br>புளிமாங்கனி<br>கருவிளங்காய்<br>கருவிளங்கனி |

மேலே காட்டிய எடுத்துக்காட்டிலிருந்து, ஆசிரியத்தளை இரு விதப்படும் என்பது புலப்படும்.

1. நிலைச்சீர் ஈறும் வருஞ்சீர் முதலும் நேராயின், அதை நேரொன்றியஆசிரியத்தளை என்பர், (நேர் - நேர்.)

2. ஈறும் முதலும் நிரையாயின், அதை நிரையொன்றிய ஆசிரியத்தளை என்பர்.

குறிப்பு. வருஞ்சீர் எதுவாயினும், நிலைச்சீர் இயற்சீராயின், ஆசிரியத்தளை அமையப்போதுமானது என்று கூறினோம். எனினும், வருஞ்சீரும் இயற்சீராயிருக்குமானால் ஆசிரியத்தளை சிறப்புடையதாகும். இல்லையேல் அது சிறப்பில் ஆசிரியத்தளை என்று கொள்ளப்படும்.

உதாரணமாக நற்றிணையிலுள்ள ஆசிரியப்பா ஒன்றை எடுத்துக்கொண்டு அதன் கண்ணுள்ள ஆசிரியத் தளைகளை ஆராய்ந்து பார்ப்போம்:

கொடுங்குரல் குரைத்த செவ்வாய்ப் பைங்கிளி
யஞ்ச லோம்பி யார்பதங் கொண்டு
நின்குறை முடித்த பின்றை யென்குறை
செய்தல் வேண்டுமால் கைதொழு திரப்பல்
பல்கோட் பலவின் சார லவர்நாட்டு
நின்கிளை மருங்கிற் சேறி யாயி
னம்மலைக் கிழவோர்க் குரைமதி யிம்மலைக்
கானக் குறவர் மடமக
ளேனல் காவ லாயின ளெனவே.

[திணைப்புனக்காவலை வியாஜமாகக் கொண்டு தன் மகள் களவொழுக்கம் பூண்டு ஒழுகுகின்றாள் என்று அய்ய முற்ற தாய் அவளை வீட்டின் கண் இருத்திவிட்டாள். தலைவன் பல நாள் குறியிடம் வந்து அலைந்துவிட்டு வறிதே திரும்பியவன் தன் பதியிலே தங்கிவிட்டான். சில நாள் சென்றபின், தாய் மகளைத் திணைப்புனம் அனுப் பினாள். குறியிடங்களில் தலைவனைக் காண முடிய வில்லை. அந்நிலையில் தலைவி "இப்பொழுது எம்புனம் வரின் என்னைக் காணலாம்" என்னும் குறிப்பைத் தெரி வித்துத் தலைவனை அழைத்து வருமாறு கிளியைத் தலைவனிடம் தூதுபோக்கும் செய்தியது இப்பாட்டு. இதன் பொருள் வருமாறு: வளைந்த கதிர்களைக் கொய்து அறுக் கின்ற சிவந்த வாயையுடைய பசுங்கிளியே, நீ சிறிதும் அஞ்சாமல் உனக்கு வேண்டிய அளவு உணவை உண்டு, உன் குறை முடித்துக்கொண்டபின், என் குறையையும் நீ முடித்து வைக்க, உன்னைக் கைதொழுது வேண்டிக்கொள் கின்றேன். பல காய்களையுடைய பலாமரங்கள் செறிந்த அழகிய சாரலையுடைய அவரது நாட்டிலுள்ள உன்

சுற்றத்தாரைக் காண்பதற்குச் செல்வாயாயின் அம்மலைக் குரிய தலைவரிடம், இந்த மலையிலுள்ள காட்டில் வசிக்கும் குறவரது இளமகள் தினைப்புனம் காவல் செய்து கொண் டிருக்கிறாள், என்பதைச் சொல்,'' என்றாள்.]

கொடுங்குரல் - குறைத்த—கருவிளம் - புளிமா. நிலைச் சீராகிய கொடுங்குரல் இயற்சீர், அதன் ஈற்றசை யான குரல் நிரையசை. வருஞ்சீரான குறைத்த என்பதின் முதலசை நிரையசை. ஆகையால், ஆசிரியத்தளை. ஈறு, முதல் ஆகிய ஈரிடத்தும் நிரையசை இருப்பதால், இது நிரையொன்றிய ஆசிரியத்தளை.

குறைத்த செவ்வாய்ப் — புளிமா-தேமா. நிலைச்சீரின் ஈறு வருஞ்சீரின் முதல் ஆகிய ஈரிடத்தும் நேரசை யிருப்பதால், நேரொன்றிய ஆசிரியத்தளை.

செவ்வாய்ப் - பைங்கிளி—தேமா-கூவிளம் நேரொன்றிய ஆசிரியத்தளை.

பைங்கிளி-யஞ்ச—கூவிளம் - தேமா. நிலைச்சீர் இயற் சீராயினும், சீரீறு நிரையாகவும், வருஞ்சீர் முதல் நேராகவும் இருப்பதால் இது ஆசிரியத் தளை யாதற்கில்லை. (வெண்பாவிற்குரிய வெண்டளை யாகும். விரைவில் கற்போம்).

யஞ்ச - லோம்பி - தேமா - தேமா. ஆசிரியத்தளை.

லோம்பி - யார்பதங்-தேமா - கூவிளம். ஆசிரியத்தளை.

யார்பதங் - கொண்டு - கூவிளம் - தேமா. ஆசிரியத் தளை அன்று.

கொண்டு - நின்குறை—தேமா - கூவிளம். ஆசிரியத் தளை.

நின்குறை - முடித்த —கூவிளம் - புளிமா ஆசிரியத் தளை.

முடித்த - பின்றை—புளிமா - தேமா. ஆசிரியத்தளை.

பின்றை - யென்குறை — கூவிளம்; ஆசிரியத் தளை.

யென்குறை - செய்தல் — கூவிளம் - தேமா - ஆசிரியத் தளை அன்று.

செய்தல் - வேண்டுமால்—தேமா - கூவிளம். ஆசிரியத் தளை.

வேண்டுமால் - கைதொழு—கூவிளம் - கூவிளம். நிரை யும் நேருமாயிருப்பதால் ஆசிரியத்தளையன்று.

கைத்தொழு - திரப்பல்—கூவிளம் புளிமா. ஆசிரியத் தளை.

திரப்பல் - பல்கோட்—புளிமா—தேமா. ஆசிரியத்தளை.

பல்கோட் - பலவின்—தேமா—புளிமா. ஆசிரியத்தளை யன்று

பலவின் - சார-புளிமா தேமா. ஆசிரியத்தளை.

சார - லவர்நாட்டு—தேமா புளிமாங்காய். இது ஆசிரி யத்தளையன்று. நிலைச்சீர் இறுதியில் நேரசையும் வருஞ்சீர் முதலில் நிரையசையும் நிற்பதால் ஆசிரி யத்தளை அமைவதற்கில்லை 'சார - லங்காட்டு' என்று சீர்கள் நிற்குமாயின், நிலைச்சீரின் ஈறும், வருஞ்சீர் முதலும் நேரசையாவதால், வருஞ்சீர் உரிச்சீராயினும் ஆசிரியத்தளையே. இதைச் சிறப்பில் ஆசிரியத்தளை என்பர். இருசீர்களும் இயற்சீராயிருத்தலே சிறப்புடைத்து

லவர்நாட்டு - நின்கிளை—புளிமாங்காய் — கூவிளம். ஆசிரியத்தளை யன்று. நிலைச்சீரின் ஈறும் வருஞ்

சீரின் முதலும் நேரசையா யிருப்பினும், நிலைச்சீர் உரிச்சீராய் இருப்பதால் ஆசிரியத்தளை அமைவதற்கு இல்லை.

நின்கிளை - ... கூவிளம் - புளிமா. ஆசிரியத்தளை.

மருங்கிற் - சேறி—புளிமா - தேமா. ஆசிரியத்தளை.

சேறி - யாயி—தேமா - தேமா. ஆசிரியத்தளை.

யாயி-னம்மலை—தேமா-கூவிளம்-ஆசிரியத்தளை.

னம்மலைக் - கிழவோர்க்—கூவிளம்-புளிமா. ஆசிரியத்தளை.

கிழவோர்க்-குரைமதி—புளிமா - கருவிளம். ஆசிரியத்தளையன்று. நேரும் நிரையுமாய்ச் சீர்கள் நிற்கின்றன

குரைமதி-யிம்மலைக்—கருவிளம்-கூவிளம், ஆசிரியத்தளையன்று.

யிம்மலைக்-கானக் - கூவிளம்-தேமா. ஆசிரியத்தளையன்று.

கானக்-குறவர்—தேமா-புளிமா. ஆசிரியத்தளையன்று.

குறவர்-மடமக —புளிமா - கருவிளம். ஆசிரியத்தளையன்று.

மடமக-ளேனல் — கருவிளம் - தேமா. ஆசிரியத்தளையன்று.

ளேனல்-காவ—தேமா-தேமா. ஆசிரியத்தளை.

காவ-லாயின—தேமா-கூவிளம்-ஆசிரியத்தளை.

லாயின-னெனவே—கூவிளம்-புளிமா ஆசிரியத்தளை.

நாம் எடுத்துக் காட்டாக எடுத்துக் கொண்ட செய்யுள் ஆசிரியப்பா எனப்படும். ஆசிரியப் பாவில் ஈரசைச்சீரே அதிகம் வரும். இடையிடையே உரிச்சீரும் இடம் பெறுவதுண்டு. ஆசிரியப்பாவில் அதிகம் வரும் உரிமைபற்றியே இயற்சீரை ஆசிரியவுரிச்சீர் என்று அழைக்கின்றனர். மேலே காட்டிய எடுத்துக் காட்டில் 'லைர்நாட்டு' என்னுஞ் சீரைத் தவிர மற்ற எல்லாச்சீர்களும் ஈரசைச்சீர்களே. இவ்வீரசைச்சீர்கள் ஆசிரியத்தளையாக ஒன்றிவர வேண்டுமென்பது ஆசிரியப்பாவின் இலக்கணம். இடையிடையே தளையொன்றாமல் வேற்றுத்தளை வருவதிலும் பிழையாகாது. பெரும்பகுதி ஆசிரியத்தளை பெற்று நடக்க வேண்டும் என்பதே விதி. இச்செய்யுளிலுள்ள 34 தளைகளில் 13 தவிர மற்றத் தளைகள் எல்லாம் ஆசிரியத் தளைகளே.

இயற்சீரீற்று மாமுன் நேரும். விளமுன் நிரையும் வருவது ஆசிரியத்தளை.

நேர் முன் நேர்வரின் நேரொன்றிய ஆசிரியத்தளை
நிரை முன் நிரைவரின் நிரையொன்றிய ஆசிரியத்தளை.
(முன் வலப்பக்கம்). இனி வெண்டளையின் இலக்கணத்தைப் பார்ப்போம்.

## வெண்டளை

வெண்பா என்னும் செய்யுளுக்குரிய தளை வெண்டளை (வெண்-தளை-வெண்டளை) வெண்பாவினுள் வெண்டளை தவிர வேறு தளைகள் வரலாகாது.

சீர்களில் இயற்சீரும் உரிச்சீரும் வெண்பாவில் வரலாம் ஆனால், உரிச்சீரில் தேமாங்காய், புளிமாங்காய், கூவிளங்காய், கருவிளங்காய் என்னும் காயில் (நேரசையில்) முடிகின்ற நான்கு சீர்களும் வரலாம். கனியில் (நிரையசையில்) முடிகின்ற உரிச்சீர்கள் வரலாகாது. எனவே

தான் காயில் முடிகின்ற மூவகைச்சீர்கள் வெண்பாவுரிச்சீர் என்றும் வெண்சீர் என்றும் அழைக்கப்படுகின்றன.

ஒரு வெண்பாவில், இறுதிச்சீர் தவிர, மற்றெல்லாச் சீர்களும் இயற்சீராய் இருக்கலாம். அல்லது வெண் சீரா இருக்கலாம். அல்லது இயற்சீரும், வெண்சீரும் கலந்து நடப்பினும் நடக்கலாம். இருவகைச் சீர்களும் வெண் பாவில் கலந்து வருவதே இயற்கை. ஆனால் சீர்கள், வெண்டளை விளையுமாறு ஒன்றையொன்று தொடர்தல் இன்றியமையாததாகும்

இயற்சீரின் ஈற்றசையும், வருஞ்சீரின் முதலசையும் நேருக்கு நேரும், நிரைக்கு நிரையுமாக ஒன்றிவரின் ஆசிரித் தளை என்று கூறினோம். அதன் எதிர்நடை வெண்டளை அதாவது நேருக்கு நிரையும், நிரைக்கு நேருமாகச் சீர்கள் (அதாவது நிலைச்சீரின் ஈறும், வருஞ்சீரின் முதலும்) மாறி நடப்பின் வெண்டளை விளையும்.

"மாமுன் நிறையும் விளமுன் நேரும்
வருவது இயர்சீர் வெண்டளை யாகும்."

என்பது சூத்திரம்.

நிலைச்சீர் இயற்சீராயின், வருஞ்சீர் இயற்சீராகவோ அல்லது உரிச்சீராகவோ இருக்கலாம். ஆனால், நிலைச் சீரும் வருஞ்சீர் முதலும் நேருக்கு நிரையும், நிரைக்கு நேருமாக இருக்கவேண்டும். அவ்வாறு இருப்பின் இயற்சீர் வெண்டளை.

வெண்பாவில், காயை ஈற்றிலுடைய உரிச்சீரும் வரலாம் என்று கூறினோம். நிலைச்சீர் காய்ச்சீராயின், வருஞ்சீர் முதலும் நேரசையாய் இருக்கவேண்டும். அவ்வா றிருப்பின் வெண்சீர் வெண்டளை. அதாவது நேருக்கு நேர் ஒன்றிவர வேண்டும்.

"காய் முன் நேர் வருவது வெண்சீர் வெண்டளை" என்பது சூத்திரம்.

எனவே, வெண்டளை, இயற்சீர் வெண்டளை என்றும் வெண்சீர் வெண்டளை என்றும் இருவகைப்படுகின்றன

தேமா--கருவிளங்காய்-இயற்சீர்
வெண்டளை, (மா முன் நிரை)
கருவிளங்காய்-கூவிளங்காய்-வெண்சீர்
வெண்டளை. (காய் முன் நேர்)

இதுவரை கூறிய, இவ்விருவிதமான வெண்டளைகளின் இலக்கணத்தைச் சுருக்கமாய்க் கூறுவோம்.

## 1. இயற்சீர் வெண்டளை

நிலைச்சீர் இயற்சீராய் இருக்கவேண்டும். வருஞ்சீர் எதுவாயினும், அதன் முதலசை, இயற்சீரின் ஈற்றசையோடு மாறுபட்டிருக்கவேண்டும். நிலைச்சீர் நேரசையை ஈற்றிலுடையதாயின், வருஞ்சீரின் முதலசை நிரையாய் இருக்க வேண்டும் நிலைச்சீரின் ஈற்றசை நிரையாயின், வருஞ்சீரின் முதலசை நேராயிருக்கவேண்டும். இவ்வாறு மாறி அமையும் வெண்டளை இயற்சீர் வெண்டளை வருஞ்சீரும் இயற்சீராயிருக்குமானால், அது சிறப்புடை இயற்சீர் வெண்டளையாகும் வருஞ்சீர் வெண்சீராயின், சிறப்பில் இயற்சீர் வெண்டளையாகும்.

## 2. வெண்சீர்வெண்டளை

நிலைச்சீர் நேரசையை ஈற்றிலுடைய வெண்சீராய் (மூவசைச் சீராய்) இருக்கவேண்டும். அதைத் தொடரும் வருஞ்சீர், அது எதுவாயிருப்பினும், அதன் முதல் அசை நேரசையாய் இருக்கவேண்டும். அப்பொழுது அமையும் தளை வெண்சீர்வெண்டளை. வருஞ்சீரும் வெண்சீராயின்,

அது சிறப்புடை வெண்சீர்வெண்டளையாகும். அல்லாக்கால் சிறப்பில் வெண்சீர்வெண்டளை.

குறிப்பு :— இயற்சீர் என்றால் இரண்டு அசைகளை யுடையசீர். உரிச்சீர், என்றால் மூன்று அசைகளையுடைய சீர். வெண்பாவுரிச் சீர், அல்லது வெண்சீர், அல்லது காய்ச் சீர் என்றால் நேரசையை ஈற்றிலுடைய மூவசைச்சீர் ஆசிரி யத் தளைக்கு எதிராய் நடப்பது வெண்டளை என்பன்த நேயர்கள் மறத்தலாகாது

யாம், மேலே கூறிய விதிகளை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளக் கீழ்வரும் குறிப்பு உதவக்கூடியதாகும் :—

இயற்சீர்வெண்டளை :—

| | |
|---|---|
| தேமா அல்லது புளிமா | புளிமா, கருவிளம்—<br>சிறப்புடை இயற்சீர்வெண்டளை.<br>கருவிளங்காய், புளிமாங்காய்-<br>சிறப்பில் இயற்சீர்வெண்டளை. |
| கருவிளம் அல்லது கூவிளம் | —கூவிளம், தேமா-<br>சிறப்புடை இயற்சீர் வெண்டளை.<br>கூவிளங்காய், தேமாங்காய்-<br>சிறப்பில் இயற்சீர் வெண்டளை. |

வெண்சீர்வெண்டளை :—

| | |
|---|---|
| கருவிளங்காய்,<br>தேமாங்காய்,<br>புளிமாங்காய்,<br>கூவிளங்காய் | —தேமா, கூவிளம்-<br>சிறப்பில் வெண்சீர்வெண்டளை.<br>கூவிளங்காய், தேமாங்காய்-<br>சிறப்புடை வெண்சீர்வெண்டளை. |

இனி ஒரு செய்யுளை எடுத்துக்கொண்டு, அதனில் வெண்டளை அமையும் விதங்களைக் கருதுவோம்.

" விளைபொருண்மே லண்ணல் விரும்பினையே
மீண்டெங்
கிளையழுகை கேட்பதற்கு முன்னே - விளைதேன்
புடையூறு பூந்தார் புனைகழலாய் போக்கிற்
கிடையூறு வராம லேகு. "

[இவ்வெண்பாவின் பொருள் :— "அண்ணலே, பெருகுகின்ற பொருளை ஈட்டும் பொருட்டு எம்மைப் பிரிந்து செல்ல விரும்பினால், விளைகின்ற தேன் ஊறும் பூமாலையையும், அலங்கரிக்கப்பெற்ற கழலையும் அணிந்தவனே! உனது செலவிற்கு இடையூறு ஏற்படாமல், எம் சுற்றத்தாரின் அழுகைக்குரல் கேட்பதற்கு முன்னே போய்விடு."]

மணம் புகுந்து இல்வாழும் மனைவி யொருத்தி, பொருள் வயின் பிரிய நினைத்த கணவனை விலக்கும் கருத்தினது செய்யுள்.

விளைபொருண்மே - லண்ணல்—கருவிளங்காய்-தேமா. நிலைச்சீர் வெண்சீர். அதன் ஈற்றசை நேர். வருஞ்சீரின் முதலசையும் நேர். எனவே, வெண்சீர் வெண்டளை. ஆனால் வருஞ்சீரும் வெண்சீராயிராமல், இயற்சீராயிருப்பதால், இது சிறப்பில் வெண்சீர் வெண்டளை.

லண்ணல் - விரும்பினையே — தேமா - கருவிளங்காய், நிலைச்சீர் இயற்சீர் அதன் ஈற்றசை நேர். வருஞ்சீரின் முதல் நிரையசையாக மாறி வருவதால் இயற்சீர் வெண்டளை. ஆனால், வருஞ்சீரும் இயற்சீரா யில்லாமையின், இது சிறப்பில் இயற்சீர் வெண்டளை.

விரும்பினையே - லீண்டெங் — கருவிளங்காய் - தேமா. எனவே, சிறப்பில் வெண்சீர் வெண்டளை

லீண்டெங் கிளையழுகை—தேமா-கருவிளங்காய். சிறப்பில் இயற்சீர் வெண்டளை

கிளையழுகை - கேட்பதற்கு — கருவிளங்காய்-கூவிளங்காய். நிலைச்சீர், வருஞ்சீராகிய இரண்டும் வெண்சீராய் இருப்பதால், இது சிறப்புடை வெண்சீர் வெண்டளை.

கேட்பதற்கு-முன்னே — கூவிளங்காய்-தேமா. சிறப்பில் வெண்சீர் வெண்டளை.

முன்னே-விளைதேன்—தேமா-புளிமா. இது சிறப்புடை இயற்சீர் வெண்டளை.

விளைதேன்-புடையூறு புளிமா-புளிமாங்காய். சிறப்பில் இயற்சீர் வெண்டளை.

புடையூறு-பூந்தார் — புளிமாங்காய் - தேமா. சிறப்பில் வெண்சீர் வெண்டளை.

பூந்தார் - புனைகழலாய் — தேமா- கருவிளங்காய். சிறப்பில் இயற்சீர் வெண்டளை.

புனைகழலாய் - போக்கிற் — கருவிளங்காய் - தேமா. சிறப்பில் வெண்சீர் வெண்டளை.

போக்கிற் கிடையூறு — தேமா-புளிமாங்காய். சிறப்பில் இயற்சீர் வெண்டளை.

கிடையூறு-வாராம—புளிமாங்காய்-தேமாங்காய். சிறப்புடை வெண்சீர் வெண்டளை.

வாராம-லேகு—தேமாங்காய்-தேமா. சிறப்பில் வெண்சீர் வெண்டளை.

நேயர்கள் தங்களுக்குத் தெரிந்த வெண்பாக்களை எடுத்துக்கொண்டு, வெண்டளை பிறழாமல் அலகிட்டுப் பார்த்தல் நல்ல பயிற்சி தரும். செய்யுளடிகளைச் சீர் களாகப் பிரித்தலை அலகிடல் என்பர்.

ஆசிரியத்தளை, வெண்டளை என்னும் இருவகைத் தளைகளையும் இதுவரை விளக்கி வைத்தோம். இனிக் கலித்தளையைப் பார்ப்போம்

## கலித்தளை

காய்ச்சீர் முன் நேரசை நிற்குமாயின் அது வெண்சீர் வெண்டளையாகும் என்று கூறினோம். நிரையசை நிற்பின் கலித்தளையாகும். வெண்சீர் வெண்டளையின் பிறழ்ச்சியைக் கலித்தளை என்று கொள்ளலாம்.

" காய்முன் நிறைவருவது கலித்தளையே, "

என்பது சூத்திரம். கலித்தளை கலிப்பாவிற் குரியது.

சுடர்கொண்ட-நறுநுதல்—காய்முன் நிரை. கலித்தளை.

சுடர்கொண்ட-கன்னுதல்—காய் முன் நேர். வெண்சீர் வெண்டளை.

எனவே, கலித்தளை அமைவதற்கு,

1. நிலைச்சீர் (மூவசைகளையுடைய) காய்ச்சீராய் இருக்க வேண்டும்.
2. வருஞ்சீர் எதுவாயினும், முதலசை நிரையசையாய் இருக்க வேண்டும்.

பூந்தண்டார்-புனைவேந்து—காய் முன் நிரை. எனவே கலித்தளை

பல்லுலகும்-பலவுயிரும்—காய் முன் நிரை. எனவே கலித்தளை,

ஆசிரியத்தளை வெண்டளைகளைப் போலவே, கலித்தளையும் சிறப்புடைக் கலித்தளை என்றும், சிறப்பில் கலித்தளை என்றும் இருவிதப்படும்.

இரண்டிற்கும் நிலைச்சீர் காய்ச்சீராய் இருக்க வேண்டும். வருஞ்சீரின் முதலில் நிரையசை இருத்தலும் அவசியம். ஆனால், வருஞ்சீரும் காய்ச்சீரா யிருக்குமானால், அத் தளை சிறப்புடைக் கலித்தளையாகும்.

வருஞ்சீர் கனியீற்று உரிச்சீராகவேனும், அல்லது இயற்சீராகவேனும் இருப்பின், அத் தளை சிறப்பில்கலித்தளையாகும்.

உதாரணம் :—

முருகவிழ்தா - மரைமலரோன் — நிலைச்சீர், வருஞ்சீராகிய இரண்டும் காய்ச்சீர். எனவே சிறப்புடைக் கலித்தளை.

மாவின்ற-தளிர்மிசை — நிலைச்சீர் காய்ச்சீர்; வருஞ்சீர் இயற்சீர். எனவே சிறப்பில் கலித்தளை

அணிமுரலும்-தணிமலர்மிசை — நிலைச்சீர் காய்ச்சீர்; வருஞ்சீர் கனிச்சீர். எனவே, சிறப்பில்கலித்தளை. நிலைச்சீர்.

தேமாங்காய்
புளிமாங்காய்
கருவிளங்காய்
கூவிளங்காய்

என்னும் சீர்களில் ஒன்றாக நிலைச்சீர் நிற்க, வருஞ்சீர்.

கருவிளங்காய்
புளிமாங்காய்

என்னும் சீர்களில் ஒன்றாயின், சிறப்புடைக் கலித்தளை ஆகும், ஆனால் வருஞ்சீர்,

கருவிளங்கனி
புளிமாங்கனி, அல்லது
புளிமா
கருவிளம்

[illegible] ஒன்றாயின், சிறப்பில் கலித்தளை ஆகும்.

இனிக் கலித்தளை அமைந்துள்ள செய்யுளொன்றை எடுத்துக்கொண்டு, அதனில் அமைந்துள்ள தளைகளைக் கருதுவோம்.

"கலைக்கோட்டு நுதற்குதலைச்
செங்கனிவாய்க் கருநெடுங்கண்
விலைக்கோட்டும் பேரல்குல்
மின்னுடங்கு மிடையாரை
முலைக்கோட்டு விலங்கென்றங்
குடனணுகி முன்னின்ற
கலைக்கோட்டுப் பெயர் முனியாற்
றுயர்நீங்கக் கருதினான்."

என்பது. கலித்தளையும் வெண்டளையும் விரவி வந்துள்ள வொரு கம்பராமாயணச் செய்யுள்.

[இதன் பொருள்: வில்லைப்போல் வளைந்த நெற்றியையும், மதலை பொழிகின்ற கொவ்வைக் கனிபோன்ற சிவந்த வாயையும், கரியபெரிய கண்களையும் விலைக்கு விற்கும் பெரிய அல்குல் பிரதேசத்தையும், மின்னல்போல் துவளும் இடையையும் உடைய கணிகையரை, முலையாகிய கொம்புகளையுடைய மிருகங்கள் என்று எண்ணி அவர்களோடு வந்து உரோமபாதன் என்னும் அரசன் முன்னின்ற கலைக்கோட்டு முனிவன் என்னும் பெயருடைய முனி

சிரேஷ்டனால், நீ தனது புத்திரனில்லாத் துயரத்தைத் தசரத சக்கரவர்த்தி நீக்கிக்கொள்ள எண்ணினான்.]

சிலைக்கோட்டு-நுதற்குதலை—புளிமாங்காய்-கருவிளங்காய். நிலைச்சீர் காய்ச்சீர். வருஞ்சீர் முதல் நிரையசை. ஆகையால், கலித்தளை. வருஞ்சீரும் காய்ச்சீராய் இருப்பதால் சிறப்புடைக் கலித்தளை.

நுதற்குதலைச்-செங்கனிவாய் — கருவிளங்காய் - கூவிளங்காய். வருஞ்சீர் முதல் நேரசையாதலால், கலித்தளை யன்று: சிறப்புடை வெண்சீர் வெண்டளை.

செங்கனிவாய்க் - கருநெடுங்கண் — கூவிளங்காய் - கருவிளங்காய், சிறப்புடைக் கலித்தளை.

கருநெடுங்கண் - விலைக்கோட்டும்—கருவிளங்காய் - புளிமாங்காய், சிறப்புடைக் கலித்தளை

விலைக்கோட்டும் - பேரல்குல் — புளிமாங்காய் - தேமாங்காய். சிறப்புடை வெண்சீர் வெண்டளை.

பேரல்குல் - மின்னுடங்கு —தேமாங்காய் - கூவிளங்காய். சிறப்புடை வெண்சீர் வெண்டளை.

மின்னுடங்கு-மிடையாரை-கூவிளங்காய் - புளிமாங்காய் சிறப்புடைக் கலித்தளை.

மிடையாரை-முலைக்கோட்டு - புளிமாங்காய் - புளிமாங்காய் சிறப்புடைக் கலித்தளை.

முலைக்கோட்டு - விலங்கென்றங்—புளிமாங்காய் - புளிமாங்காய். சிறப்புடைக் கலித்தளை.

விலங்கென்றங்-குடனனுகி — புளிமாங்காய்-கருவிளங்காய். சிறப்புடைக் கலித்தளை

குடனணுகி-முன்னின்ற — கருவிளங்காய்-தேமாங்காய். சிறப்புடை வெண்சீர் வெண்டளை.

முன்னின்ற-கலைக்கோட்டு — தேமாங்காய் - புளிமாங் காய் சிறப்புடைக் கலித்தளை.

கலைக்கோட்டுப்-பெயர்முனியாற் — புளிமாங்காய்-கரு விளங்காய். சிறப்புடைக் கலித்தளை

பெயற் முனியாற்-றுயர்நீங்கக்—கருவிளங்காய்-புளிமாங் காய். சிறப்புடைக் கலித்தளை.

றுயர்நீங்கக்-கருதினான்—புளிமாங்காய்-கருவிளம் காய் முன் நிரை வந்திருப்பதால் கலித்தளை. எனினும் வருஞ்சீர் காய்ச்சீராய் இல்லாமல் இயற்சீராய் இருப்பதால், சிறப்பில் கலித்தளை.

கலித்தளை கலிப்பாட்டிற்குரிய தளையேனும், அப் பாட்டில் வரும் எல்லாத் தளைகளும் கலித்தளைகளாகவே இருக்கவேண்டும் என்னும் நியதியில்லை. ஆசிரியத்தளை யும் வெண்டளையும் விரவி வரலாம் பாட்டில் அதிக மாகக் கலித்தளை வரவேண்டும் என்பதே விதி.

## வஞ்சித்தளை

மூவசைச்சீர்கள், காய்ச்சீர், கனிச்சீர் என இருவிதப் படுவதைக் கண்டோம். நேரசையை ஈற்றிலுடைய மூவசைச்சீர் காய்ச்சீர் என்றும், அது வெண்பாவிற்குரிய தாதலால், அதற்கு வெண்சீர், அல்லது வெண்பாவுரிச்சீர் என்ற பெயர் வந்ததென்றும், இயற்சீர் முன் நேர் வந்தால் வெண்டளையும், நிரை வந்தால் கலித்தளையும் ஆகு மென்றும் கூறினோம்.

கனியை நிரையை ஈற்றிலுடைய மூவசைச்சீரைக் கனிச்சீர் என்றும் அழைக்கின்றனர். இது பெரும்பாலும்

வஞ்சிப்பாவுக்குரியது. எனவே, இதை வஞ்சியுரிச்சீர் என்று வழங்குகின்றனர். இது தேமாங்கனி, புளிமாங்கனி, கருவிளங்கனி, கூவிளங்கனி என்னும் வாய்பாட்டினது.

இக்கனிச்சீர் நிலைச்சீராயின், அதன் பின்வரும் வருஞ்சீர் முதல் எதுவாயினும் (நேராயினும் நிரையாயினும்) வஞ்சித்தளை அமைந்துவிடும்.

"கனிமுன் நிரையும் நேரும் வருதல்
ஒன்றிய வொன்றா வஞ்சித் தளையே."

என்பது சூத்திரம்.

உதாரணம் :

மழைமுகிலெனு-குழல்விரிதரு-(கனிமுன்நிரை) வஞ்சித் தளை. (உரிச்சீர்)

கலைவீழ்தரு-நன்மடவார் — (கனிமுன்நேர்) வஞ்சித் தளை. (உரிச்சீர்)

பானுரையன—துகில்சேர் — (கனிமுன்நிரை) வஞ்சித் தளை. (இயற்சீர்)

கண்பார்வையைப்—போக்கி—(கனிமுன்நேர்) வஞ்சித் தளை. (இயற்சீர்)

இவ்வுதாரணங்களில், நால்வகைக் கனிச் சீர்களும் நிலைச்சீர்களாய் இருக்கின்றன. வருஞ்சீர்களில் நிரை, நேர் அசைகளைச் சீர் முதலாக உடைய உரிச்சீர் எனப் படும் மூவசைச்சீர்கள் இரண்டும், இயற்சீர் எனப்படும் ஈரசைச் சீர்கள் இரண்டும் நிற்கக் காண்கின்றோம். ஆகவே, நிலைச்சீர் கனிச்சீராயிருக்குமானால், வருஞ் சீரும் அதன் முதலசையும் எதுவாயிருப்பினும் வஞ்சித் தளை விளைந்துவிடும் என்பது வெளிப்படை.

எனவே, கனிச்சீரின்முன் நிரை வரின் ஒன்றிய வஞ்சித் தளை என்றும், நேர் வரின் ஒன்றாத வஞ்சித்தளை என்றும் வஞ்சித்தளை இருவிதப்படுகின்றது.

இவ்விருவிதமான வஞ்சித்தளையிலும், வருஞ்சீர் கனிச்சீராயின், அது சிறப்புடை வஞ்சித்தளையாகும். கனிச்சீரல்லாத மற்றச்சீர்கள் வருஞ்சீராயின் சிறப்பில் வஞ்சித்தளையாகும்.

நிலைச்சீர்,

" தேமாங்கனி, புளிமாங்கனி
கருவிளங்கனி, கூவிளங்கனி,"

என்னும் சீர்களாக நிற்க, வருஞ்சீர்,

" கருவிளங்கனி
புளிமாங்கனி,"

என்னும் சீர்களாயின், சிறப்புடை ஒன்றிய வஞ்சித்தளை ஆகும். வருஞ்சீர்,

" புளிமா, கருவிளம்
கருவிளங்காய், புளிமாங்காய்,"

என்னும் சீர்களாயின், சிறப்பில் ஒன்றிய வஞ்சித்தளை ஆகும். வருஞ்சீர்,

" கூவிளங்கனி
தேமாங்கனி,"

என்னும் சீர்களாயின், சிறப்புடை ஒன்றாத வஞ்சித்தளை. வருஞ்சீர்,

" தேமா, கூவிளம்,
கூவிளங்காய், தேமாங்காய்,"

என்னும் சீர்களாயின், சிறப்பில் ஒன்றாத வஞ்சித்தளை ஆகும்.

உதாரணமாக ஒரு செய்யுளை எடுத்துக்கொண்டு அதனிடம் வஞ்சித்தளைகள் அமைந்துள்ள விதத்தைக் காண்போம்.

" அஞ்சம்பையு மையன்றன தலகம்பையு மளவா
தஞ்சங்களை வெலலாகிய நயனங்களை யுடையாள்
துஞ்சுங்கனி வரிவண்டுகள் குழலின்படி சுழலும்
கஞ்சங்களை மஞ்சன்கழ னகுகின்றது கண்டாள் "

என்பது ஒரு கம்பராமாயணச் செய்யுள்.

[இதன் பொருள் :—மன்மதனது பஞ்சபாணங்களையும், இராமனது அலகுடைய அம்பையும் (கூர்மையால்) அளந்து, விஷங்களையெல்லாம் (கொடுமையால்) வெல்கின்ற கண்களையுடைய சீதாப்பிராட்டி, களிப்புடன் தூங்குகின்ற வரிவண்டுகள், புல்லாங்குழல்போல் ஒலிசெய்து, சுழலும் தாமரை மலர்களை இராமனது பாதங்கள் பரிகசித்துச் சிரிப்பதைக் கண்டாள்.]

அஞ்சம்பையு - மையன்றன - தேமாங்கனி-தேமாங்கனி. நிலைச்சீர் கனிச்சீராயிருப்பதால் வஞ்சித்தளை. வருஞ்சீர் முதலில் நேரசை இருப்பதால், ஒன்றாத வஞ்சித்தளை. இரண்டு சீர்களும் கனிச்சீராய் இருப்பதால், இது சிறப்புடை ஒன்றாத வஞ்சித்தளை.

மையன்றன-தலகம்பையு—தேமாங்கனி - புளிமாங்கனி. நிலைச்சீர் கனிச்சீராதலால் வஞ்சித்தளை. வருஞ்சீர் நிரையசை யாதலாலும் இரண்டு சீர்களும் கனியாய் இருத்தலாலும் சிறப்புடை ஒன்றிய வஞ்சித்தளை.

தலகம்பையு-மளவா—புளிமாங்கனி-புளிமா. நிலைச்சீர் கனியாதலால் வஞ்சித்தளை. வருஞ்சீர் முதல் நிரையாதலால், ஒன்றிய வஞ்சித்தளை. ஆனால்

வருஞ்சீர் இயற்சீராயிருப்பதால் சிறப்பில் ஒன்றிய வஞ்சித்தளை.

கஞ்சங்களை-வெலலாகிய—தேமாங்கனி - புளிமாங்கனி. சிறப்புடை ஒன்றிய வஞ்சித்தளை.

வெலலாகிய-நயனங்களை—புளிமாங்கனி-புளிமாங்கனி. சிறப்புடை ஒன்றிய வஞ்சித்தளை.

நயனங்களை - யுடையான் — புளிமாங்கனி - புளிமா. சிறப்பில் ஒன்றிய வஞ்சித்தளை.

துஞ்சுங்களி வரிவண்டுகள் — தேமாங்கனி - புளிமாங்கனி. சிறப்புடை ஒன்றிய வஞ்சித்தளை.

வரிவண்டுகள் - குழலின்படி — புளிமாங்கனி - புளிமாங்கனி. சிறப்புடை ஒன்றிய வஞ்சித்தளை.

குழலின்படி-சுழலும்—புளிமாங்கனி - புளிமா. சிறப்பில் ஒன்றிய வஞ்சித்தளை.

கஞ்சங்களே - மஞ்சன்கழ—தேமாங்கனி - தேமாங்கனி. இரண்டும் கனிச்சீர்களாதலால் சிறப்புடை வஞ்சித்தளை. ஆனால், வருஞ்சீர் முதல் நேரசையாதலால் சிறப்புடை ஒன்றாத வஞ்சித்தளை.

மஞ்சன்கழ - ளகுகின்றது—தேமாங்கனி - புளிமாங்கனி. சிறப்புடை ஒன்றிய வஞ்சித்தளை.

ளகுகின்றது - கண்டான்—புளிமாங்கனி - தேமா. இது, சிறப்பில் ஒன்றாத வஞ்சித்தளை.

நாம் உதாரணமாக எடுத்துக்கொண்ட கம்பராமாயணச் செய்யுளில் வஞ்சித்தளைகள் அமைந்துளவேனும், அது வஞ்சிப்பா வன்று. வெண்பா தவிர, மற்றப் பாக்களில் வஞ்சித்தளையும், வஞ்சிப்பாவில் மற்றத் தளைகளும் வரலாம். ஆனால், வஞ்சிப்பாவில் வஞ்சித்தளைகள் அதிகமாயிருக்க வேண்டும்

இதுவரை, யாம் தளைகளைப்பற்றிக் கூறியவைகளி லிருந்து, ஆசிரியத்தளை, வெண்டளை, கலித்தளை, வஞ்சித்தளை என்னும் நால்வகைத் தளைகளும்,

1. நேரொன்றிய ஆசிரியத்தளை (மா முன் நேர்)
2. நிரையொன்றிய ஆசிரியத்தளை (விள முன் நிரை)
3. இயற்சீர்வெண்டளை (மா முன் நிரை ; விள முன் நேர்)
4. வெண்சீர்வெண்டளை (காய் முன் நேர்)
5. கலித்தளை (காய் முன் நிரை)
6. ஒன்றிய வஞ்சித்தளை (கனி முன் நிரை)
7. ஒன்றாத வஞ்சித்தளை (கனி முன் நேர்)

என ஏழுவகையாதல் தெரியவரும். நிலைச்சீரும் வருஞ் சீரும் ஓரினத்தைச் சேர்ந்தவையாயின் அவைகளுக்கு இடையே அமையுந் தளை சிறப்புடைத்தளை எனவும், வெவ்வேறாயின் சிறப்பில்தளை எனவும் அழைக்கப் படுவதை உதாரணங்களுடன் விளக்கினோம்.

ஈரசை, மூவசைச் சீர்களுக்கு இடையே அமையும் தளைகளைப்பற்றி இதுவரை விளக்கினோம். எஞ்சியிருப் பவை, அசைச்சீர் எனப்படும். ஓரசைச்சீரும், பொதுச்சீர் என்றழைக்கப்படும் நாலசைச்சீருமாகும். அவைகளைப் பார்ப்போம்.

ஓரசைச்சீர், செய்யுள்களில் நிலைச்சீராய் நிற்பதில்லை. வெண்பாவின் ஈற்றுச் சீராய் நிற்பதே அதற்குரிய இடம். ஈற்றுச் சீரின்பின் வேறோர் சீரும் வருதற்கு இல்லையாத லால், தளையும் அமைவதற்கில்லை.

ஆனால், செய்யுளின் இடையே அசைச்சீர் அபூர்வமாய் வருவதுண்டு எனக்கொள்வாரும் உளர். உதாரணமாக,

" உரிமை யின்க ணின்மையால்
அரிமதர் மழைக் கண்ணாள்
செருமதி செய் தீமையால்
பெருமை கொன்ற வென்பவே, "

என்னுஞ் செய்யுளை எடுத்துக் கொள்வோம். இச் செய்யுளை அலகிடுங்கால், மழைக் என்பதும், செய் என்பதும், ஓரசைச் சீர்களாய் நிற்கின்றன. அவ்வாறு நிற்கையில் அத் தனி அசைகளை இயற்சீரின் ஈற்றசை போல்கொண்டு, தளை கொள்ளவேண்டும்.

மழைக் என்பது ஈரசைச்சீரின் ஈற்றசையாயின், அது நிரை யசை ஆகும். அதை அடுத்துள்ள கண்ணாள் என்பதின் முதலசை நேர். எனவே, மழைக்-கண்ணாள் என்னும் சீர்களுக்கு இடையே (நிரை முன் நேர்) இயற்சீர்வெண்டளை விளைந்ததெனக் கொள்ளவேண்டும்.

மூன்றாவது அடியிலுள்ள செய் என்பதை இயற்சீரின் ஈற்றசையாகக் கொண்டால், அது நேர் அசையாகும். அதை அடுத்துவரும் தீமையால் என்னும் சீரின் முதலும் நேர் அசை. எனவே, அவைகளுக்கு இடையே விளைவது நேரொன்றிய ஆசிரியத்தளை என்று கொள்ளவேண்டும்.

அசைச்சீரை, ஈரசையாகப் பாவித்துக்கொண்டது போலவே, நிலைச்சீராகும் பொதுச்சீரையும் உரிச்சீராகப் பாவித்துக் கொள்ளவேண்டும். நிரையசை ஈற்றிலுடைய பொதுச்சீரைக் கனிச் சீராகக் கொள்ளின் அதை அடுத்து வரும் சீர் எதுவாயினும் வஞ்சித்தளை அமையும் என்று கொள்ளலாம்.

இருள்செறிபொழிலிடை—மணம் விரிய—நிரையசையை ஈற்றிலுடைய இப்பொதுச்சீரைக் கனிச்சீராக

(அதாவது) நிரையை ஈற்றிலுடைய மூவசைச் சீராகக் கொள்ளின், மணம்விரிய என்னும் வருஞ் சீரின் முதல் நிரையாயிருப்பதால், ஒன்றிய வஞ்சித் தளையாகும்.

புதுமணம்புகுமொரு—மாதிவள்—நிலைச்சீரை, முன்னே கூறியபடி கனிச்சீராகக் கொண்டால், வருஞ்சீர்முதல் நேராதல் பற்றி, இதை ஒன்றாத வஞ்சித்தளை என்று கொள்ளவேண்டும்.

நேரசையை ஈற்றிலுடைய பொதுச்சீரை, நாம் காய்ச் சீராக (நேரை ஈற்றிலுடைய மூவசைச்சீராக) பாவித்துக் கொள்ளவேண்டும். அவ்வாறு கொள்ளின், வருஞ்சீர் முதல் நேராயின், வெண்டளையும் நிரையாயின் கலித்தளையும் விளையும் என்று கொள்க.

நாண்மலரோதி—வனிதையர்—காய் முன் நிரையாக இச்சீர்களை நாம் கொள்ள வேண்டுமாதலால், கலித்தளை.

புகர்முகயானைப்— பாகன்போல்—காய் முன் நேராகக் கொள்ள வேண்டுமாதலால், வெண்டளை ஆகின்றது. நிலைச்சீர் பொதுச்சீராய் இருப்பதால் இதை வெண்சீர்வெண்டளை என்பதற்கில்லை. பொதுச்சீர்வெண்டளை என்று அழைக்கலாம்.

குறிப்பு :—அசைச்சீர், வெண்பா தவிர மற்ற வகைச் செய்யுள்களில் இடம்பெறல் மிகமிக அருமை. பெரும் புலவர்கள் பொதுச்சீரைப் பெரும்பாலும் கையாள்வதில்லை. இலக்கியங்களில் இயற்சீரும், உரிச்சீருமே அதிகமாய் இடம் பெறக் காண்கிறோம்.

சீர்கள் தொடர்ந்து தளைகளாமாறு கண்டோம். இனி அத்தளைகளால் ஆகும் அடியின் இலக்கணத்தைக் கருதுவோம்.

---

குறிப்பு :— 'முன்' என்பதை வலப்பக்கம் என்று கொள்ளவேண்டும்.

# 5. அடி

எழுத்துக்களால் அசையும், அசைகளால் சீர்களும் சீர்கள் தொடரும் விதத்தால் தளைகளும், ஆமாறு கண்டோம். இனி, அத்தளைகளால் ஆகும் அடிகளின் இலக்கணத்தை அறிவோம்.

ஒரு செய்யுளடி அமைவதற்குக் குறைந்தது இரண்டு சீர்களாவது வேண்டும். இரண்டு முதல் பதினாறு சீர்கள் வரையில் வரும் செய்யுளடிகளையுடைய செய்யுள்களை நூல்களில் காணலாம் சீர்களின் எண்ணிக்கையை அனுசரித்துச் செய்யுளடிகள் வெவ்வேறு பேர்களைப் பெறுகின்றன.

அடிகள், குறளடி - சிந்தடி - அளவடி - நெடிலடி - கழிநெடிலடி என்று ஐந்து வகைப்படுகின்றன.

“ இருசீர் குறளடி, மூச்சீர் சிந்தடி
நாற்சீர் அளவடி, ஐஞ்சீர் நெடிலடி
அறுசீர் முதலன கழிநெடிலடியே, ”

என்பது சூத்திரம்.

1. இரண்டு சீர்கள் கொண்டது குறளடி.
2. மூன்று சீர்கள் கொண்டது சிந்தடி.
3. நான்கு சீர்கள் கொண்டது அளவடி (இதை நேரடி என்றுங் கூறுவர்,)
4. ஐந்து சீர்கள் கொண்டது நெடிலடி.
5. ஆறு சீர்களும், அதற்கு அதிகமும். (7, 8, 9, 10, 11, 12, 13, 14, 15, 16 சீர்கள்) கொண்டது கழிநெடிலடி.

புலமை மிக்கோரான பெரியோர் கழிநெடிலடிகளில் எட்டுச் சீர்களுக்கு மேற்பட்ட அடிகளைப் பாராட்டுவ தில்லை. பத்துச் சீர்களுக்கு மேற்பட்ட அடிகள் விரும்பத் தக்கனவும் ஆகா.

6, 7, 8 சீர்களைக்கொண்ட அடிகளைக் கழிநெடிலடி என்றும்; 9, 10 சீர்களைக்கொண்ட அடிகளை, இடையாகு கழிநெடிலடி என்றும்; 11, 12, 13, 14, 15, 16 சீர்களைக் கொண்ட அடிகளைக் கடையாகு கழிநெடிலடி என்றும் அழைக்கின்றனர். (கழி என்பது மிகுதிப் பொருளைக் குறிக்கும் ஒருரிச்சொல்.)

உதாரணம் ;—

குறளடி (இரண்டு சீர்)

“ நாடீர் நாடோறும்
வாடா மலர்கொண்டு
பாடீ ரவன்நாமம்
வீடே பெறலாமே.”

என்னும் இது திருவாய்மொழிப் பாசுரம். அடிதோறும் இரண்டு சீர்களையுடைய குறளடிகளாலான நான்கு அடி களைக்கொண்ட செய்யுள். (இது வஞ்சித்துறை என்னும் பாவகையினது.)

“ நகர மாய்மறைச்
சிகர மானதா
லகர மாயின
னிகரில் காசியே !”

என்ற இக்காசிக் கலம்பகச் செய்யுளும் இரண்டு சீர்களைக் கொண்ட குறளடிகளால் ஆனது.

சிந்தடி (மூன்று சீர்கள்.)

"அன்று மூல மாதியாய்
இன்று காறு மேழையேன்
நன்று தீது நாடலேன்
தின்று தீய தேடினேன்."

என்னும் இச்செய்யுள் மூன்று சீர்களைக்கொண்ட சிந்தடிகள் நான்கினால் ஆனது. (இது வஞ்சிவிருத்தம் எனப்படும் செய்யுள் வகையினது )

வெண்பா என்னும் செய்யுளின் ஈற்றடி சிந்தடியாகவே இருக்கும். நேரிசை ஆசிரியப்பாவின் ஈற்றயலடியும் எப்பொழுதும் சிந்தடியாகவே இருக்கும்.

அளவடி அல்லது நேரடி (நான்கு சீர்கள் )

திருந்துகோ லெல்வளை வேண்டியா னழவும்
அரும்பிணி யுறுநர்க்கு வேட்டது கொடாது
மருந்தாய்ந்து கொடுத்த வறவோன் போல
என்னை வாழி பலவே பன்னிய
மலைகெழு நாடனொடு நம்மிடைச் சிறிய
தலைப்பிரி வுண்மை யறிவான் போல
நீப்பநீங் காது வரின்வரை யமைந்து
தோட்பழி மறைக்கு முதவிப்
போக்கில் பொலந்தொடி செறீ யோனே.

["களவின் ஒழுகும் காலத்தில், அடிக்கடி காதலனைப் பிரிந்திருக்க நேர்வதால், அப்பிரிவினை ஆற்றாத தலைவி, தனது மெலியும் உடலின் நிலையைத் தலைவன் அறிந்தால் விரைவில் தன்னை மணந்துகொள்வான் என்ற எண்ணத்தில், அவன் புறத்தே வந்து நிற்பதை அறியாதவள்போல், தோழிக்குரைத்த மொழிகளைக்கொண்டது இச்செய்யுள். 'மெலிவுற்ற என் தோள்களிலிருந்து நான் அணிந்திருந்த,

வளைகள் கழன்றுவிட்டதால், என் தந்தையிடஞ் சென்று, என் தோள்களுக்குப் பொருத்தமான அழகிய ஒளிபொருந்திய வளைகள் வேண்டுமென்று அழுதேன். தீராத நோயுற்றவர்க்கு, அவர்கள் விரும்புவதைக் கொடுப்பதே தக்கதாக, அது செய்யாது, மருந்துகளை ஆய்ந்து கொடுத்த வைத்தியன்போல, என் தந்தையும், மலைநாடுடைய எனது தலைவனும் நானும் சிறிது பிரிந்திருக்க நேர்கின்ற உண்மையைத் தானும் ஒருவாறு அறிந்திருப்பவன் போல், கழற்றினும் விட்டகலாததாய் இறுகப் பற்றிக் கொண்டு, என் தோள்கள் மெலிகின்ற பழியைத் தோற்றுவிக்காத உதவியைச் செய்ய வல்ல மிகச் சிறிய வளைகளைச் செய்து செறித்தனன். ஆதலின் அவன் நெடிது வாழட்டும் "]

என்னும் இவ்வாசிரியப் பாவில் ஈற்றயல் தவிர மற்ற அடிகளெல்லாம் நான்கு சீர்களைக்கொண்ட அளவடிகள். ஈற்றயல் மாத்திரம் சிந்தடி

" சொல்லருஞ் சூற்பசும் பாம்பின் தோற்றம்போல்
மெல்லவே கருவிருந் தீன்று மேலலார்
செல்வமே போற்றலை நிறுவித் தேர்ந்தநூல்
கல்விசேர் மாந்தரி னிறைஞ்சிக் காய்த்தவே "

[இதன்பொருள்:— ஏமாங்கத நாட்டின் வயல்களில் நெற்பயிரானது சூல்கொண்டிருக்கிறது என்பது தெரியாமல், கருத்தரிக்கும் பச்சைப் பாம்பின் தோற்றம்போல், மெல்லக் கருவிருந்து கதிர் ஈன்று, புதுச் செல்வம் வரப் பெற்ற கீழ்க்குடிப் பிறந்த மக்களைப்போல் தலை நிமிர்ந்து, பிறகு முதிர்ந்த கதிரின் பாரத்தால் மெய்ப் பொருளை ஆராய்ந்த நூற்கல்வியில் பயிற்சியுடைய மாந்தரைப்போல் மிகவும் தலைசாய்ந்து வளைந்திருந்தது.]

என்னும் இச் சிந்தாமணிச் செய்யுள் நாலு சீர்களைக் கொண்ட அளவடி நான்கினாலான கலிவிருத்தம்.

நெடிலடி (ஐந்து சீர்கள்.)

கலிநிலைத்துறை, கட்டளைக் கலித்துறை முதலிய செய்யுள்கள் ஐந்து சீர்களையுடைய நெடிலடிகளால் அமையும்.

" காமம் யாவதுந் தருவது மப்பதங் கடந்தாற்
சேம வீடுறச் செய்வதுஞ் செந்தழன் முகந்த
ஓம வேள்வியி னுறுபத முய்ப்பது மொருவன்
நாம மன்னது கேணமோ நாராய ணாய "

[இதன் பொருள்:-விரும்பியவைகளை எல்லாம் கொடுப்பதும், அந்த நிலையைக் கடந்துவிட்டால் க்ஷேமமாகிய மோக்ஷத்தை அடையும்படி செய்வதும், சிவந்த நெருப்பில் சொரிந்து ஓமங்கள் செய்கின்ற யாகம் முதலியவைகள் கொண்டு சேர்க்கும் போக பூமிகளில் செலுத்துவதும் ஒருவனுடைய திருநாமம் அதுதான், நமோ நாராயணா என்பது—என்று பிரகலாதன் அவன் தந்தையான இரணியனுக்குக் கூறினான்.]

என்னும் இக் கம்பராமாயணச் செய்யுள் நெடிலடிகள் நான்கினைக்கொண்ட கலிநிலைத்துறை.

ஆழமன் னோவுடைத் திவ்வையர் வார்த்தை
யனங்கனைந்து
வீழமுன் னோக்கிய னம்பலத் தான்வெற்பி
னிப்புனத்தே
வேழமுன் னாய்க்கலை யாய்ப்பிற வாய்பின்னு
மென்றழையாய்
மாழைமென் னோக்கி யிடையாய்க் கழிந்தது
வந்துவந்தே.

[முதல்நாள் களவில் புணர்ந்த தலைவன், பிற்றைநாட்களில் அவன் குறியிடம் வரும்போதெல்லாம் தலைவி தோழி

யுடன் இருக்கக்கண்டு, தான் அவன் வந்ததற்குப் போலிக் காரணங்கூறி மறைக்க முயன்றவனாய்த் தான் வேட்டையில் துறத்திய, யானையும், மானும், முயலும் இவ்வழி வந்தனவோ என்று வினவி அகல்வதும், அதன்பின் கையுறையாகத் தழையும் கண்ணியும் கொணர்வதும், பிறகு தன் கருத்தைத் தெரிவித்துத் தோழியின் உதவி நாடுங் கருத்தில் நாணி நிற்பதுமாகிய நிகழ்ச்சிகளைக் கண்டு வியப்பெய்திய தோழி, அவன் வரவின் கருத்து யாதென அறியத் தலைப் பட்டதைக் கூறும் அழகிய திருக்கோவைச் செய்யுள் இது இதன் பொருள்: மன்மதன் முன் அழிந்து போகும்படி விழித்து நோக்கிய சிற்றம்பலத்தான் மலையிலுள்ள புனத் தருகே, முதலில் யானையாய், பிறகு மானாய், அதன்பின் முயலாய், அதன்பின் மெல்லிய தழையாய்க் குறைந்து குறைந்து மாவடுபோன்ற கண்ணையும் மென்மையான பார்வையுமுடைய இவளது (தலைவியினது) இடுப்பைப் போல் இவரது வார்த்தை ஒன்றுமில்லாமல் போய்விட்டதே—ஆகையால் இவர் வரவு ஆழமான கருத்துடையது].

என்னும் நெஞ்சை அள்ளும் இச்செய்யுள் நெடிலடிகள் நான்கு கொண்ட கட்டளைக் கலித்துறை.

கழிநெடிலடி

ஆறு சீர்கள் முதல் பதினாறு வரையில் உள்ள சீர்களால் அமைந்த அடிகள் கழிநெடிலடி என்று அழைக்கப் படும். எனினும் 6, 7, 8 *சீர்களை*யுடைய அடிகளுக்கே அப்பெயர் சிறப்பாகப் பொருந்தும். 9, 10 சீர்களையுடைய அடி இடையாகு கழிநெடிலடி ஆகும். 10 *சீர்களுக்கு* மேற் பட்ட அடி கடையாகு கழி நெடிலடி எனப்படும். சில செய்யுள்களை உதாரணமாகப் பார்ப்போம்.

நல்வினை யுடைய நீரார்
    நஞ்சுணி னமுத மாகும்
இல்லையே லமுது நஞ்சாம்

இன்னதால் வினைவி னாக்கம்
தொல்வல்யா னிவனை யென்றும்
இவன் கொல்லு மென்னை யென்றும்
அல்லன நினைத்தல் செல்லா
ரறிவினாற் பெரிய நீரார்.

[இதன் பொருள்: "நல்வினைப் பயனுடையவர் விஷத்தை உண்டாலும், அது அவர்களுக்கு அமிர்தமாகும் நல்வினை இல்லையாயின் அமிர்தமும் விஷமாய் முடியும், இருவினைகளின் பயன் இவ்வாறு இருத்தலால், அறிவுடைய பெரியோர், யான் ஒருவனைக் கெடுத்தழிப்பேன்", என்று முனைதலையும். "தன்னை ஒருவன் கெடுத்தழிக்க இயலும்" என்று வீணாக நினைத்தலையும் செய்யார்..]

என்னும் இது, ஆறு சீர்களினாலான அடிகளைக் கொண்ட ஆசிரிய விருத்தம். இதை அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தம் என்பர்.

பூதங்க ளல்ல பொறியல்ல வேறு
புனலல்ல வுள்ள மாதியின்
பேதங்க ளல்ல விவையன்றி நின்ற
பிறிதல்ல வென்ற பெருநூல்
வேதங் கிடந்து தடுமாறும் வஞ்ச
வெளியென்ப கூடன் மறுகிற்
பாதங்க ணோவ வளையிந்த னாதி
பகர்வாரை யாவு மவரே

[இதன் பொருள். மதுரைமாநகரின் தெருக்களில் தம் திருவடி வருந்த, வளையல், விறகு, மாணிக்கம், குதிரை முதலியவைகளை விற்றருளிய கடவுளின் தன்மையை ஆராய்ந்தறிய முயல்வோர், "பஞ்ச பூதங்களுமல்ல, இந்திரியங்களல்ல, புலன்களல்ல, மன முதலியவைகளின் பேதங்களுமல்ல, இவைகள் அல்லாமல் வேறாய் நிற்கின்ற ஆன்மாவுமன்று; என்று கூறுகின்ற பெரிய வேதங்களும் உண்மையை உணரமாட்டாமல் தடுமாறும்படி புரிகின்ற வஞ்சனையுடைய வெறும் வெளியே," என்பர்.)

என்னும் இப்பாசுரம் எழுசீர்களை உடைய கழிநெடிலடிகளால் ஆனது.

"அவசமுற் றுளநெகத் துயினெகப் பவளவா
யணிசிவப் பறவிழிக் கடைசிவப் புறநிறைக்
கவசமற் றிளநகைக் களிவரக் களிவருங்
கணவரைப் புணருவீர் கடைதிறந் திடுமினோ"

என்னும் கலிங்கத்துப் பரணியின் கடை திறப்புச் செய்யுள், எட்டுச் சீர்களாலான இரண்டு அடிகளைக் கொண்டது. எண்சீர்க்கழிநெடிலடி என்பர் இதை. எட்டுக்கு அதிகமான சீர்களைக் கொண்ட அடிகள் சிறப்புடையனவாகா.

"இடங்கை வெஞ்சிலை வலங்கை வாளியின்
எதிர்ந்த தாரையை யிலங்கு
மாழியின் விலங்கியோன்..."

என்னும் ஒரு பழம் பாட்டின் முதலடி ஒன்பது சீர்களினாலானது.

கொங்கு தங்கு கோதை யோதி மாத ரோடுங்
கூடி நீடு மோடை நெற்றி
வெங்கண் யானை வேந்தர் போந்து வேத கீத
நாத வென்று நின்று தாழ
அங்க பூர்வ மாதி யாய வாதி நூலின்
நீதி யோது மாதி யாய
செங்கண் மாலைக் காலை மாலை சேர்நர் சேர்வர்
சோதி சேர்ந்த சித்தி தானே.

என்னும் இப்பழம் பாட்டு பத்துச் சீர்களைக் கொண்ட நான்கடிகளாலானது.

பத்துக் கதிகமான சீர்களைக் கொண்ட அடிகளாலான பாக்களும் உள. அவை சிறப்புடையனவாகக் கொள்ளப் படுவதில்லை

பாக்களில் வஞ்சிப்பா இரண்டு சீர்களைக் கொண்ட குறளடிகளாலேனும், மூன்று சீர்களைக் கொண்ட சிந்தடிகளாலேனும் ஆகலாம். மற்ற ஆசிரியப்பா, வெண்பா, கலிப்பா என்னும் பாக்கள் நான்கு சீர்களையுடைய அளவடிகளாலேயே ஆகும். அய்ந்து சீர்களையுடைய நெடிலடிகளால் பெரும்பாலும் அமைபவை கலிநிலைத்துறை, கட்டளைக் கலித்துறை என்னும் செய்யுள்கள்,

ஆறு சீர்களையும், அதற்கு அதிகமான சீர்களையுங் கொண்ட அடிகளை ஆசிரிய விருத்தத்தில் காணலாம். செய்யுள்களில் பதினாறு சீர்களுக்கு அதிகமான சீர்களைக் கொண்ட அடிகளைப் புலவர்கள் அதிகம் அமைப்பதில்லை. எனினும் அடியொன்றிற்கு நாற்பத்தெட்டு சீர்களுடைய நான்கடிச் செய்யுளொன்று திவ்யகவி பிள்ளைப் பெருமாள் அய்யங்கார் பாடிய திருவரங்கக் கலம்பகத்தில்திருவரங்கனது புஜவர்ணனைச் செய்யுளாகக் காணப்படுகின்றது.

குறையும் மிகையுமின்றிச் செய்யுளடிகள் நடப்பதற்கு நான்கு சீர்கள் இருத்தலே நேரான அளவு என்பது ஆன்றோர் துணிபு. பெரும்பாலும் இலக்கிய நூல்களில் செய்யுள்கள் நாற்சீர் அடிகளால் அமைந்திருக்கக் காணலாம். நாற்சீரடியே சரியான அளவுடைய அடி என்று கருதப்படுவதால், அது அளவடி என்ற பெயர் பெறுவதாயிற்று. நேரடி என்றும் அது அழைக்கப்படும்.

**அடிவகை :**

6—16 சீர்கள் கொண்ட அடி கழிநெடிலடி.

6, 7, 8 சீர்களுடையவை, சிறப்புடைக் கழிநெடிலடி.

9, 10 சீர்களுடையவை, இடையாகு கழிநெடிலடி

10-க்கு அதிகமான அடிகளைக் கொண்டவை கடையாகு கழிநெடிலடி ஆகும்.

இனிச் செய்யுள் உறுப்புக்களில் ஒன்றான தொடை என்பதின் இலக்கணத்தைப் பார்ப்போம்.

# 6. தொடை

எழுத்துக்களாலாகும் சீர்கள் தளையுற அமைந்து, அடிகளாய்த் தொடர்ந்து, ஓசை நயமும் பொருட்சுவையுங் கொண்டு நடப்பது செய்யுள். செய்யுளின் அடிகளும், அடிகளிலுள்ள சீர்களும் ஒன்றையொன்று தொடுத்துச் செல்லும் அமைப்பினைத் தொடை என்பர். செய்யுளின் ஓசைக்கும் இனிமைக்கும் இத் தொடை இன்றியமையா உறுப்பாகும்,

இத்தொடையும்,

1. மோனைத் தொடை.
2. எதுகைத் தொடை.
3. முரண் தொடை.
4. இயைபுத் தொடை.
5. அளபெடைத் தொடை.

என ஐவகைப்படும். இவற்றுள் இயைபு ஒழிந்த மற்ற நான்கு தொடைகளும் அடியின் முதல் சீரின் கண்ணும், இயைபு இறுதிச் சீரின் கண்ணும் வருவதற்குரியன. "இறுவாய் ஒத்தல் இயைபெனப்படுமே," என்பது சூத்திரம். ஆங்கிலத்தில் வழங்கும் Rhyme என்பதும் இத் தொடையும் ஒன்றே என்னலாம். இத்தொடை பெரும் பாலும் இசைப்பாட்டிற் குரியதாகக் கருதப்படுகின்றது.

இத்தொடைகள் அடி முதல் சீரின்கண் வருவதோடு. அடியிலுள்ள சீர்களிலும் பொருந்தி வரலாம் அவ்வகைத் தொடைகளும், அடி, இணை, பொழிப்பு, ஒரூஉ, கூழை, மேற்கதுவாய், கீழ்க்கதுவாய், முற்று என்ற எண் வகை விகற்பங்களோடு சேர்ந்து நாற்பது வகையில் அமையலாம்.

இவையன்றி, அந்தாதித் தொடை, இரட்டைத் தொடை செந்தொடை என்ற பிற தொடைகளும் இருக்கின்றன. இவற்றுள், மோனை, எதுகை, என்னும் இவ்விரு தொடைகளும் செய்யுள் அமைப்பில் மிக முக்கியமான உறுப்புக்களாய்க் கருதப்படுவதால், அவற்றிற்குரிய இலக்கணத்தை முதலிற் கருதுவோம்.

## மோனை

"முதலெழுத்து ஒன்றுதல் மோனை யாகும்" என்பர். அதாவது ஒரு செய்யுளடியின் முதல் *சீரின்*கண்ணுள்ள முதலெழுத்து, மற்ற அடிகளின் முதலிலும் வருதல் மோனை

"மானிட ராக வரலரி.........
மானிட ராக மிலா..............
மானிட ராகமத் தா..........
மானிட ராக மலரடி..........."

என்பது திவ்ய கவி பிள்ளைப் பெருமான் அய்யங்கார் பாடிய திருவரங்கத் தந்தாதிச் செய்யுள். இப்பாசுரத்தின் ஒவ்வோரடியின் முதலிலும் மா என்னும் எழுத்தே வந்திருப்பதால், இதனில் மோனைத் தொடை அமைந்துள்ளது. இவ்வாறு, செய்யுளடிகளின் முதலெழுத்து ஒன்றி வருதலை அடிமோனை என்றழைப்பர். அடிமோனைத் தொடை பெற்றுச் செய்யுள்கள் நடப்பது மிக மிக அருமை. ஆனால், எல்லாச் செய்யுள்களிலும் அமையவேண்டும் என்று சொல்லப்படும் மோனை, *சீர்*மோனை என்ற பெயரினதாகும். அதாவது, செய்யுளடி யொன்றின் முதலில் வந்த எழுத்து, அவ்வடியின் கண்ணுள்ள *சீர்* ஒன்றிலேனும், அல்லது பல *சீர்*களிலேனும் முதலெழுத்தாய் அமைதலாகும். பெரும்பாலும் *சீர்*களின முதலெழுத்து ஒன்றி வருதலைத்தான் மோனை என்றழைக்கின்றனர்.

சில உதாரணங்களைப் பார்ப்போம் :

"கல்லாத மாந்தருக்குக்
கற்றறிந்தார் சொற்கூற்றம்."

என்னுஞ் செய்யுளடியின் முதல்சீரின் முதலெழுத்து க. மூன்றாஞ்சீரான 'கற்றறிந்தார்' என்பதின் முதலெழுத்தும் க. எனவே, இது மோனைத் தொடை அமைந்த அடியாகும். இவ்வடியில் மோனை யெழுத்து இரண்டு சீர்களில் வந்துளது.

"பித்த யானை பிணங்கிப் பிடியின்கண்,"

என்பதில் பி என்னும் முதலெழுத்து, வேறு இரண்டு சீர்களின் முதலெழுத்தாய் வந்திருந்ததால், மோனைத் தொடை பெற்ற அடியாகின்றது.

"மானும் மாதரும் மாமயின் மாட்சியும்,"

என்னும் அடியிலுள்ள எல்லாச் சீர்களின் முதலெழுத்தும் (மா-மா மா-மா) ஒன்றி நிற்பதால், இது முற்று மோனைத் தொடை பெற்ற அடியாகும்.

எனவே, செய்யுளின் ஒவ்வோரடியிலும் முதலில் நிற்கின்ற எழுத்து, அந்த அடியின் வேறோர் சீரிலோ, அல்லது பல சீர்களிலோ முதலெழுத்தாய் வர, அமைவது மோனைத் தொடை.

"செந்தாமரைப் பொகுட்டிற் செம்மாந்து வீற்றிருக்கும்
நந்தா விளக்கை நறுந்தா ரினங்கொழுந்தை
முந்தா வுலகு முயிரு முறைமுறையே
தந்தானை நோக்கினான் றன்னொப்பொன் றில்லாதான்."

என்னுங் கம்பராமாயணச் செய்யுளில், செ என்பது முதலடியிலும், ந என்பது இரண்டாமடியிலும், மு என்பது மூன்றாமடியிலும், த என்பது நான்காமடியிலும், மோனைகளாக வந்திருக்கின்றன.

மூன்றாமடியின் மூன்றாஞ்சீரான முயிரு என்பதிலுள்ள மு மோனை எழுத்தன்று நான்காஞ் சீரிலுள்ள முறைமுறையே என்பதின் முதல் முகரமே மோனை எழுத்து. (அச்சீரிலுள்ள இரண்டாவது மு மோனை எழுத்தன்று. ஏனெனில், அது சீர் முதல் முகரமன்று)

செய்யுளின் மூன்றாவது அடியைச் சந்திபிரித்து எழுதினால்,

"மூத்தா உலகும் உயிரும் முறைமுறையே,"

என்று நிற்கும். எனவே, மூன்றாமடியின் மூன்றாஞ் சீரின் முதலெழுத்து உகரமாகின்றது. எனவே, அது மோனை எழுத்து ஆகாமை அறிக. (புணர்ச்சியினால் மகர மெய்யின்மேல் உகரமேறி மு என்று நிற்பதால், அது மோனை எழுத்தாதற்கில்லை).

"தந்தாளை நோக்கினான் றன்னொப்......"

என்பது செய்யுளின் நாலாவது அடி. அந்த அடியின் முதலெழுத்து த. இதற்கு மோனை மூன்றாஞ்சீரின் முதல் எழுத்தான தகரம், அங்குள்ள றகரம், தகரந் திரிந்த றகரமே (நோக்கினான் — தன் — நோக்கினான் — றன், என்று புணர்ச்சியினால் விகாரப்பட்டு நிற்கின்றது). எனவே, அச்சீரின் முதலில் இயல்பாய் நிற்பது தகரமே. அது அடி முதல் தகரத்தோடு ஒன்றி நிற்பதால் மோனையாகின்றது.

"வந்துள வரசரை வழுத்தி நோக்கினான்,"

என்ற அடியை எடுத்துக் கொள்வோம். இந்த அடியின் முதலெழுத்து வ இரண்டாஞ்சீரான வரசரை என்பதின் முதலெழுத்தான வகரம் மோனை எழுத்தன்று. 'வந்துள - அரசரை', என்பதுதான் வகர உடன்படு மெய் பெற்றுப் புணர்ந்துளது. புணர்ச்சியால் நேர்ந்த

வகரத்தை நீக்கினால், சீர்முதல் நிற்பது அகரமாகும். எனவே, அது மோனை எழுத்து ஆகாமை வெளிப்படை.

அதற்கு அடுத்த சீராகிய வழுத்தி என்பதிலுள்ள வகரம் புணர்ச்சியாலன்றி இயல்பின் நிற்கும் வகரம். அது அடி முதல் வகரத்தோடு ஒன்றி நிற்பதால் மோனை எழுத்து. எனவே, அவ்வடி மோனைத் தொடை அமைந்த அடியாகிறது.

"யானையை வென்றா யாதி யாதலால்......"

என்பதை சந்தி பிரித்து எழுதினால்,

"யானையை வென்றாய் ஆதி ஆதலால்......"

என்று நிற்கும். எனவே, இந்த அடியில் மோனை அமையவில்லை.

"யானையை வென்ற வீரன் யாண்டுளன்... "

என்பது அடியாயின், மோனை அமையும் அடிமுதல் யாவும், 'யாண்டுளன்' என்பதிலுள்ள யாவும் இயல்பின் நிற்கின்ற எழுத்து, எனவே மோனை எழுத்தாகின்றது.

"துன்னிவந் துவந்த மாதர் துளங்கொளி
முறுவல் கோட்டி."

என்று மிவ்வடியில் இரண்டாஞ்சீரின் முதலிலுள்ளது மோனை எழுத்தன்று. வந்து-உவந்த என்பதுதான் வந்துவந்த என்று புணர்ந்து நிற்கின்றது. அது இயல்பின் நிற்கும் துகரம் அல்லாமையின் மோனை எழுத்து ஆதற்கில்லை. ஆனால் நாலாஞ்சீரின் முதலில் நிற்கும் து மோனை எழுத்து.

நல்லவர் சேர்வரே னன்னுந் தூய்மையே,"

என்னும் அடியின் முதல் நகரத்திற்கு மூன்றாஞ்சீரில் மோனை அமைந்துளது. "சேர்வரேல்—நன்னும் "

என்பதுதான் "சேர்வரேனன்னும்" என்று புணர்ந்து நிற்கின்றது. எனவே, இயல்பின் நிற்பது நகர மாதலால், அது மோனை எழுத்தாகின்றது.

சீரின் முதலில் நிற்கின்ற எழுத்து எதுவாயினும், உருவத்தைக் கண்டு மயங்காமல், புணர்ச்சி விகாரத்தா லன்றி, அச்சீரின் முதலுக்கு இயல்பின் உரித்தாகிய எழுத்தைக் கருத்தில் கொண்டே மோனை அமைவதை உணர்தல் வேண்டும். எனினும், சில சமயம் அடி முதல் எழுத்திற்கு வேறான சில எழுத்துக்களும் மோனை யாக வருவதுண்டு.

மோனையின் பொருட்டுச் சிற்சில எழுத்துக்களை ஆன்றோர் தனித்தனித் தொகுதிகளாகச் சேர்த்திருக் கின்றனர். அவ்வாறு தொகுக்கப்பெற்ற தொகுதியினுள் ளிருக்கும் ஒரு எழுத்து, அதே தொகுதியிலுள்ள மற்ற எழுத்துக்களுக்கு மோனையாகலாம். ஒரு தொகுதியிலுள்ள எழுத்து வேறு தொகுதியிலுள்ள எழுத்திற்கு மோனை யாகாது. இவ்வாறு ஒன்றற்கொன்று மோனையாகும்படி தொகுக்கப்பெற்ற எழுத்துக்களை இனவெழுத்துக்கள் என்றழைப்பர். அவை வருமாறு :—

உயிரெழுத்து—அ, ஆ, ஐ, ஔ - ஓரினம்.
இ, ஈ, எ, ஏ, யா - ஓரினம்.
உ, ஊ, ஒ, ஓ - ஓரினம்.

யா என்பது உயிர்மெய்யெழுத்தேனும் அது உயிரின் இனமாகக் கொள்ளப்படுகின்றது.

மெய்யெழுத்து - ஞ், ந் - ஓரினம்
ம், வ் - ஓரினம்
த், ச் - ஓரினம்.

ஒரு செய்யுளடியின் முதற்சொல்லின் முதலெழுத்து உயிர் அல்லது உயிர் மெய்யாய் இருக்கலாம். அடி முதல்

நிற்பது அகரவுயிராயின், அ அல்லது, ஆ, ஐ, ஔ என்னும் எழுத்துக்கள் மோனையாக வரலாம்.

அடி முதல் அகரநெடிலாயின், ஆ, அல்லது, அ, ஐ, ஔ என்னும் எழுத்துக்கள் மோனையாக வரலாம்.

ஐகாரத்திற்கு, ஐ அல்லது, அ, ஆ, ஔ மோனையாகலாம். ஔகாரத்திற்கு, ஔ அல்லது, அ, ஆ, ஐ மோனையாகலாம்.

இவ்வாறே இரண்டாவது தொகுதியிலுள்ள இ, ஈ, எ, ஏ, யா என்பவை ஒன்றற்கொன்று மோனையாகலாம்.

மூன்றாவது தொகுதியிலுள்ள உ, ஊ, ஒ, ஓ என்பவையும் ஒன்றற்கொன்று மோனையாகலாம்.

ஆனால், ஒரு தொகுதியிலுள்ள எந்த எழுத்திற்கும் வேறு தொகுதியிலுள்ள எந்த எழுத்தும் இனமாகாது.

"அருளிலார்க் கவ்வுலக மில்லை ....."

என்னும் அடியின் முதலில் நிற்பது அகர உயிர். உயிர் எழுத்து உயிரெழுத்தாகவே செய்யுளடியின் முதலில் தான் நிற்க இயலும். மற்ற விடங்களில் முன்னிற்கும் மெய்யின்மேல் ஏறியோ, அல்லது குற்றியலுகரத்தோடு புணர்ந்தோ, அல்லது உடன்படுமெய் பெற்றோதான் நிற்கும். எனவே, அகரத்திற்கு மோனையாக, அகர உயிரையோ, அல்லது அதன் இனமான எழுத்துக்களையோ அடியின் நடுவில் உயிரெழுத்தின் உருவத்தில் தேடிப் பயனில்லை. எனவே, மேலே காட்டிய அடியைப் பிரித்தால்,

"அருளிலார்க்கு அவ்வுலகம் இல்லை........"

என்று நிற்கும். எனவே, அடிமுதல் அகரத்திற்கு இரண்டாஞ்சீர் முதலான அ மோனையாகும்.

" ஆக்க மதர்வினாய்ச் செல்லு மசைவிலா
ஊக்க முடையா னுழை. "

என்னுமிச் செய்யுளின் முதலடியிலுள்ள ஆ விற்கு மோனையாக இரண்டாஞ்சீர் முதலிலும், நான்காஞ்சீர் முதலிலும் அ வந்துளது. இரண்டாமடியின் முதலெழுத்து ஊ. அதற்கு மோனையாக, இரண்டாஞ்சீர் முதலிலும், மூன்றாஞ்சீர் முதலிலும் உகரம் வந்துளது. செய்யுளைப் பிரித்து எழுதினால்,

" ஆக்கம் அதர்வினாய்ச் செல்லும் அசைவிலா
ஊக்கம் உடையான் உழை, "

என்று நிற்கும்.

ஆ, அ, அ—முதலடியில் மோனை எழுத்து மூன்று.

ஊ, உ, உ—இரண்டாமடி முற்றுமோனை. எல்லாச் சீர்களிலும் மோனை வந்துளது.

" அய்யப் படா அதகத்த துணர்வானைத்
தெய்வத்தோ டொப்பக் கொளல். "

இதைப் பிரித்து எழுதினால்,

" அய்யப் படா அது அகத்தது உணர்வானை
தெய்வத்தோடு ஒப்பக் கொளல். "

என்று நிற்கும். முதலடியிலுள்ள அய்காரத்திற்கு அகரம் மோனை.

" எவ்வந்தான் யாதேனுந் தீண்டுங்கோ லுள்ளரிக்கு
மௌவியத்திற் காட்செய்யார் மாட்டு. "

என்னுமிச் செய்யுள்,

" எவ்வந்தான் யாதேனுந் தீண்டுங்கொல் உள்ளரிக்கும்
ஔவியத்திற்கு ஆட்செய்யார் மாட்டு. "

எ, யா—முதலடியில் மோனை. ஒள, ஆ—இரண்டா மடியில் மோனை.

இனி, அடிமுதல் சொல்முதல் உயிர்மெய் எழுத்தாயின் மோனையாய் வரக் கூடியவை எவை என்று பார்ப்போம்,

உயிரும் மெய்யும் சேர்ந்து உயிர்மெய் யாவதால், மோனையாய் வரும் எழுத்தும், உயிருக்கு உயிரும் மெய்க்கு மெய்யுமாய்ச் சேர்ந்த உயிர்மெய்யெழுத்தாய் இருக்க வேண்டும்.

க (க்-அ) என்பது அடி முதலானால் மோனையாக வரும் உயிர்மெய்யில், ககரத்திற்கு க(க்-அ), கா(க்-ஆ) கை (க்-ஐ), கௌ (க்-ஒள) என்பவற்றிலொன்று மோனை யாக வரலாம்.

கி என்பது அடி முதலானால், கி, கீ, கெ, கே மோனை யாக வரலாம்.

கு என்பது அடி முதலானால், கு, கூ, கொ, கோ மோனையாக வரலாம்.

க என்பதற்குப் ப மோனையாகாது. உயிர் வரையில் மோனை அமைந்திருப்பினும், மெய் வேறாகையால் மோனையாகாமை உணர்க.

கி என்பதற்குக் கோ, மோனையாகாது. மெய் ஒன்றா யினும் உயிர் வேறாகின்றது.

> புன்னை நறுமலரின் பூந்தா திடையொதுங்கும்
> கன்னி யிளமேதிக் காற்குளம்பு—பொன்னுரைத்த
> கல்லேய்க்கு நாடன் கவறாடப் போயினான்
> கொல்லேற்றின் மேலேறிக் கொண்டு.

என்னுமிது ஒரு நளவெண்பாச் செய்யுள்.

இச்செய்யுளில்

ப- பூ என முதலடியிலும்,

க - கா என இரண்டாமடியிலும்,

க - க என மூன்றாமடியிலும்,

கொ - கொ என நான்காமடியிலும்,

மோனைகள் அமைந்திருப்பது காண்க.

"கொற்றக் கயற்கட் கொடியே யிருவேமு
மொற்றைத் துகிலா லுடைபுனைந்து—மற்றிந்தப்
பொற்றுகிலாற் புள்வளைக்கப் போதுவோ மென்று
[ரைத்தான்
பற்றகலா வுள்ளம் பரிந்து."

இதுவும் நளவெண்பாச் செய்யுள். இதனில் அமைந்துள்ள மோனை அமைவினைப் பார்ப்போம்.

இதன் முதலடி முதலில் இருக்கும் கோ என்பதற்கு, அவ்வடியின் மூன்றாஞ்சீரின் முதலான கோ மோனை. இரண்டாஞ்சீர் முதலான க மோனை அன்று. கோ என்பதும், க என்பதும் மெய்யளவில் ஒன்றினாலும், கொ என்பதிலுள்ள ஒகர உயிருக்கு க என்பதிலுள்ள அகரவுயிர் மோனை யன்றாதலின் ககரம் கொ என்பதற்கு மோனை ஆதற்கில்லை.

இரண்டாவதடியின் முதலெழுத்து மொ அன்று. "இருவேமும்-ஒற்றை" என்பதுதான் "இருவேமு மொற்றை," என்று புணர்ந்து நின்றது. எனவே அடி முதல் ஒ என்பதாகும். அவ்வடியின் மூன்றாஞ்சீரின் முதல் லு என்பதன்று. "துகிலால்— உடைபுனைந்து," என்பதுதான் "துகிலா - லுடைபுனைந்து," என்று புணர்ந்து நிற்கின்றது. எனவே சீர்முதல் உ ஆகும். ஒகரத்திற்கு உகரம் மோனை. இது இன மோனை.

மூன்றாமடியில் பொ - பு - பொ மோனை ; மெய்யும், இனத்தால் உயிரும் ஒன்றியிருப்பது காண்க.

நான்காமடியில் ப-ப, மோனை. பகர உயிர்மெய்க்குப் பகர உயிர்மெய்யே மோனையாயிற்று

மொழி முதலாய் வரக்கூடிய உயிர்மெய் எழுத்துக்களில், ஞந, மவ, தச என்பவை ஒன்றற்கொன்று இனம் பற்றி மோனையாக வரக்கூடும். எனவே,

"ஞகரத்திற்கு ஞகரமும் இனத்தால் நகரமும்
சகரத்திற்கு சகரமும் இனத்தால் தகரமும்
மகரத்திற்கு மகரமும் இனத்தால் வகரமும்."

மோனையாகலாம்.

"பூட்டாத விற்குனித்துப் பொங்கு முகிலெங்குந்
தீட்டாத வம்பு சிதறுமா—வீட்டமாய்க்
காணாக் கண்பரப்புந் தோகை கடும்பழிக்கு
நாணா தயர்த்தார் நமர்.

இந்த வெண்பாவின் முதலடியில், பூ என்பதற்குப் பொ என்பது மோனை. (ப் - ஊ, ப் - ஒ - பகரத்திற்குப் பகரமும், ஊகாரத்திற்கு ஒகரமும் மோனை.)

இரண்டாமடியில், தீ என்பதற்குச் சி மோனை, (த் - ஈ, ச் - இ - தகரத்திற்குச் சகரமும், ஈகாரத்திற்கு இகரமும் மோனை.)

மூன்றாமடியில், கா என்பதற்கு, மூன்றாஞ் சீர்களி லுள்ள இரண்டு ககரங்கள் மோனை. (கா - க - க )

நான்காமடியில், நா என்னும் எழுத்திற்கு மூன்றாஞ் சீரிலுள்ள நகரம் மோனை.

நிறைக்கோப மல்க நிறைமலர்ப்பூங் காயா
சுழற்கலவ மேல்விரித்த தோகை—தழற்குலவு
தீம்புகை யூட்டுஞ் செறிகுழலார் போலுங்கார்
யாம்பிரிந்தார்க் கென்னா மினி.

முதலடி, நி—மூன்றாஞ்சீர் நி—மோனை : இரண்டா
வதடி, சி—மூன்றாஞ்சீர் நி—மோனை.

(சகரத்திற்குத் தகரமும், உகரத்திற்கு ஒகாரமும் மோனை யாதல் அறிக) நாலாஞ் சீரிலுள்ள தகரம் மோனையன்று. (ச் த் மோனையாகுமேனும், உகரத்திற்கு அகரம் மோனை யாகாது.) எனவே சு வுக்கு த மோனையன்று.

மூன்றாமடியில் தீ என்பதற்கு செ மோனையாயிற்று. (தி - செ ஈ, - ஏ இனம்.)

நான்காமடியின் முதலில் இருப்பது யா யகரத்திற்கு யா மோனையாவதுடன், இ, ஈ, எ, ஏ, என்னும் உயிர் களும் மோனையாகக் கூடும். நாலாவது அடியைச் சந்தி பிரித்து எழுதினால், யாம் பிரிந்தார்க்கு - என்னாம் - இனி, என்றாகும். எனவே, யா-எ-இ மோனை. எல்லாச் சீர்களிலும் மோனை எழுத்து வந்திருப்பதால் இது முற்று மோனை.

அடி முதல் எழுத்திற்கு மோனையாய் எழுத்துக்கள் அவ்வடியின் சீர், அல்லது சீர்களின் முதலில் நிற்றல் மோனைத் தொடை அமைவதற்கு அவசியம் என்று இது காறும் கூறினோம். அவ்வாறு வருதலே சிறப்புடைத்து. அடியின் சீர்களின் முதலில் மோனை எழுத்துக்கள் வாராதிருக்கும் செய்யுள்களும் உள. அப்பொழுது, சீர் நடுவிலுள்ள எழுத்தையும் மோனையாகக் கொள்வதுண்டு. உதாரணங்கள் சில பார்ப்போம்.

" முகவொளியைப் பாவாய் பெறற்குமுண்ட கத்தோ
டிகலு மதியைய மில்லை."

இதன் முதலடி முதல் மு என்ற எழுத்து. " இதற்குப் பெறற்கு முண்டோ " என்ற மூன்றாஞ்சீரின் இடையிலுள்ள மு மோனை. இரண்டாமடியில் இ - இ (ட்-இ, ம-இ) மோனை.

" நீல மால்வரை தவழ்தரு கதிர்நிலாக் கற்றை."

என்ற செய்யுளடியில் நீ என்பதற்குக் " கதிர் நிலாக் ' என்னுஞ்சீரின் இடையிலுள்ள நி மோனை,

" எங்கணா யகற்கினி யாவ தாங்கொலோ,"

என்ற அடியில் எ என்பதற்கு யா மோனையாகக் கூடுமாகையால், இரண்டாஞ்சீரின் நடுவிலுள்ள கி என்பதில் நிற்கும் இ என்பதை மோனையாகக் கொள்ளும் அவசியம் இல்லை.

ஓசை யின்பம் காரணமாக மோனைத் தொடை செய்யுளடிகளில் விரும்பப்படுகின்றன. எனினும், அகநானூறு, புறநானூறு, பத்துப்பாட்டு, நற்றிணை, குறுந்தொகை, அனைய சங்கச் செய்யுள்களில் மோனை என்பது இன்றியமையா உறுப்பாகக் கொள்ளப் பெறவில்லை.

" நாளன்று போகிப் புள்ளிடை தட்பப்
பதனன்று புக்குத் திறனன்று மொழியினும்
வறிது பெயர்குவ ரல்லர் நெறிகொளப்
பாடான் றிரங்கு மருவிப்
பீடுகெழு மலையற் பாடி யோரே,"

என்னுமிது ஆசிரியப்பா வகையினதான ஒரு புறநானூற்றுச் செய்யுள்.

[மலையமான் திருமுடிக்காரி என்னும் வள்ளலைப் புகழ்ந்து கபிலர் பாடிய செய்யுள் இது. நல்லது அல்லாத நாளில் புறப்பட்டாலும், பறவை முதலிய சகுனங்கள்

கெட்டவையாயிருந்து தடுத்தாலும், அவனைக் காணச் சென்ற சமயம் நேரானதாக இல்லாமற் போனாலும், வரிசையாக ஓசை நிறைந்து ஒலிக்கும் அருவியையுடைய பெருமை பொருந்திய மலையையுடைய திருமுடிக்காரியைப் பாடியவர்கள், ஒருபோதும் பரிசில் பெறாமல் வறிதே திரும்ப மாட்டார்கள். அதாவது, நாள், சகுனம், சமயம் சொற்சோர்வு, யாவும் பொய்க்கும்படி தன்னை அடைந்தார்க்கு அளிக்கும் வள்ளல் காரி, என்பது கருத்து.]

இச் செய்யுளின் ஓரடியிலேனும் மோனை அமையக் காண்கிலம்.

"தாமே செல்ப வாயின் கானத்துப்
புலந்தேர் யானைக் கோட்டிடை யொழிந்த
சிறுவீ முல்லைக் கொம்பிற் றாஅய்
இதழ்றழிந் தூறுங் கண்பனி மதரெழிற்
பூணக வன்முலை நனைத்தலுங்
காணா கொல்லோ மாணிழை நமரே!"

என்பது நயம் செறிந்த ஒரு குறுந்தொகைச் செய்யுள்.

[மாவளத்தார் என்னும் புலவர் பாடிய பாட்டு இது பிரிந்து சென்ற தலைவனை நினைந்து இரங்கும் தலைவிக்கு அவனது பாங்கி, "அழியல்," என்று கூறித் தேற்றிய செய்தியது இச் செய்யுள். இதன் பொருள் : பெருமையுடைய ஆபரணங்களை உடையவளே, நம் தலைவர் உன்னை விட்டுத் தனியே செல்பவராயின், அவர் செல்லும் வழியிலுள்ள காட்டின்கண் கிளைகளின்மீது படர்ந்து முல்லைக் கொடியின் சிறுமலர்கள் இதழ் தெறித்து ஒழுகிய தேன், உணவு தேடி அவண் வந்த யானையின் தந்தத்தின்மேல் விழுவதைக் கண்டதும், தனது பிரிவினை நினைத்து வருந்தும், உனது கண்ணீர், செறித்த அழகினையுடைய தாய் நகைகளை அணிந்து, சூதாடு கருவி போன்ற உனது அழகிய முலையினை

நனைக்கும் நிலையைத் தம் நினைவில் கொள்ளாமல் இருப்பரோ—இருக்கமாட்டார். உடனே மீண்டு வருவார் ]

இந்தச் செய்யுளின் ஓரடியில்கூட மோனை அமைந்திலது. எனினும் சங்கப் பாட்டுக்கள் எல்லாம் மோனையின்றிப் பாடப்பெற்றவை என்று கொள்ளவேண்டா. அவைகளில், மோனை பெற்றும் சில அடிகள் நடக்கக் காண்கின்றோம். ஆனால், இவைகளுக்குப் பிற்காலத்தினவாகிய மணிமேகலை, சிலப்பதிகாரம் அனைய நூல்களின் பெரும் பகுதி, மோனையுடைய அடிகளால் அமைந்திருக்கக் காண்கின்றோம். உதாரணமாக ஒரு செய்யுளைப் பார்ப்போம்.

"ஒருதனி நின்றா யுன்றிற மறிந்தேன்
வளரிள வனமுலை மடந்தை மெல்லியல்
தளரிடை யறியுந் தன்மையள் கொல்லோ
விளையா மழலை விழைந்து மெல்லியல்
முளையெயி றரும்பி முத்துநிரைத் தனகொல்
செங்கய னெடுங்கண் செவிமருங் கோடி
வெங்கணை நெடுவேள் வியப்புரைக் குங்கொல் .."

என்பது மணிமேகலை என்னும் நூலிலிருந்து எடுத்த சில அடிகள். எல்லா அடிகளிலும் மோனைத் தொடை அமைந்திருக்கக் காண்கின்றோம். திருக்குறள் நாலடியார் என்னும் நூல்களில் மோனைக்கு முக்யத்வம் கொடுக்கப்படவில்லை.

காலஞ் செல்லச் செல்ல, ஓசை நயங்கருதி மோனை செய்யுள்களில் இடம் பெறலாயிற்று. ஆசிரியப்பாவின் பின், பயிலலாகிய வெண்பா, கட்டளைக்கலித்துறை, விருத்தம் முதலிய பாக்களில் மோனைத் தொடை அமைய வேண்டுமென்பது முறையாயிற்று. வெண்டளை பெற்று அய்ந்து சீர்களையுடைய அடிகள் நான்கு கொண்ட

கட்டளைக் கலித்துறையாலான திருக்கோவை, தஞ்சை வாணன் கோவை நூல்களில், செய்யுளடிகள் எல்லாம் மோனையுடன் கூடியனயாகும்.

விருத்தப்பாக்களில் மோனையில்லையாயின், அது குற்றமாகக் கருதப்படும். சிந்தாமணி, சூளாமணி, கந்த புராணம், கம்பராமாயணம், பெரியபுராணம், திருவிளை யாடற்புராணம் அனைய பெருங்காப்பியங்கள் மோனை அமைந்த விருத்தங்களாலும், விருத்தக் கலித்துறைகளாலும் பாடப்பெற்றவை.

"சீறடிய கிண்கிணி சிலம்பொடு சிலம்ப
வேறுபடு மேகலைகள் மெல்லென மிழற்றச்
சேறுபடு கோதைமிசை வண்டுதிசை பாட
நாறுமலர்க் கொம்புநடை கற்பதென வந்தாள்."

என்னுமிது சிந்தாமணியிலுள்ள ஒரு கலிவிருத்தம். முதலடியில், 1, 3, 4 சீர்களில் மோனை வந்துளது. இரண்டாவதடியில் எல்லாச் சீர்களிலும் மோனை அமைந்துள்ளது. எனவே, முற்றுமோனை. மூன்றாமடி யிலும் நான்காமடியிலும் சீர் முதலில் மோனை அமைய வில்லை. ஆனால் சீர்களின் இடையில் மோனை எழுத் துக்கள் ஓசை நயம் விளைத்து நிற்கின்றன. அவ்வாறு சீரின் நடுவில் நிற்கும் மோனை எழுத்துக்கள் பெரும்பாலும் ஒரு சொல்லின் முதலெழுத்தாய் இருக்கக் காணலாம். கம்பர் கவிக்கரசாவதை, அவரது பாசுரங்களில் அமையும் மோனைகளில் காணலாம்,

"தாதையைக் கொன்றான் பின்னே
தலைசுமந் திருகை நாற்றிப்
பேதைய னென்ன வாழ்ந்தாய்
என்பதோர் பிழையுந் தீர்ப்பாய்
சீதையைப் பெற்றே னுன்னைச்
சிறுவனு மாகப் பெற்றேன்

ஏதெனக் கரிய தென்றான்
இறுதிநாற் கெல்லை கண்டான்

என்னுமிது, தூது வந்த அங்கதனைத் தன் வசப்படுத்திக் கொள்ள நினைத்த இராவணன் உரைத்த செய்தியை விஷயமாகக் கொண்ட கம்பராமாயணச் செய்யுள். இச் செய்யுளில் முக்கியமான சொற்களில் மோனை அமைந்திருக்கும் சிறப்பை நேயர்கள் காணலாம்.

செய்யுளின் இனிமையை மிகுவித்தற்குரிய உறுப்புகளில் ஒன்றான மோனைத் தொடையின் இலக்கணத்தைப் பார்த்தோம் இனி எதுகைத் தொடையின் இலக்கணத்தை அறிவோம்.

## எதுகை

முதல்சீரின் முதலெழுத்தோடு மற்றச் சீர்களின் முதலெழுத்து ஒன்றிவரின் மோனைத் தொடை அமையும் என்று கூறினோம். முதல்சீரின் இரண்டாவது எழுத்தோடு மற்றச் சீர்களின் இரண்டாவது எழுத்து ஒன்றிவரின், அதை எதுகைத் தொடை என்று அழைப்பர்.

செய்யுளின் அடிகள் தோறும் முதலெழுத்து ஒன்றி வருதல் ஒருவகை மோனை என்றும், செய்யுளின் ஓரடியிலுள்ள சீர்கள்தோறும் முதலெழுத்து ஒன்றிவரல் மற்றோர் வகை மோனை என்றும், ஓரடியின் சீர்களில் அமையும் மோனையே சிறந்ததாகக் கருதப்படுகின்றதென்றும் கூறினோம், அடிகளில் வரும் மோனையை அடிமோனை என்றுங் கூறலாம்.

இரண்டாவது எழுத்து ஒன்றுவதால் அமையும் எதுகை தொடை செய்யுளின் அடிகளிலும், ஓரடியிலுள்ள சீர்களிலும் வரலாம். அடிதோறும் அமையும் எதுகைத் தொடையே செய்யுளுக்கு இன்றியமையாததாகக் கருதப்படுகின்றது.

இலக்கிய நூல்களில், அடி எதுகையும், சீர்மோனையுமே பயின்றுவரக் காண்கின்றோம். எதுகை, மோனை என்னுங் கால் குறிக்கப்படுபவை அடிஎதுகையும் சீர்மோனையுமே ஆகும். சீர்கள் தோறும் எதுகை அமையச் செய்யுள்கள் அதிகம் இயற்றப்படுவதில்லை.

செய்யுளின் சிறப்பிற்கு அடி எதுகை இன்றியமையாத உறுப்பாகும், தீண்டாமல் என்பது ஓரடியின் முதல் சீராயின், அதற்கு வேண்டாமை என்பது எதுகையாகும். தீண்டாமல், வேண்டாமை என்பவற்றில் இரண்டாவது எழுத்து ஒன்றியிருப்பது காண்க. இப்படியே.

கல்வி—செல்வம்
சொல்ல—மெல்ல

என்பவற்றில் இரண்டாவது எழுத்தான லகர மெய்யும்,

பைந்தார்—ஐந்தூர்
நைந்தான்—மைந்தா

என்பவற்றில் இரண்டாவது எழுத்தான நகர மெய்யும் ஒன்றி நிற்பதால் எதுகை ஆகின்றன.

இரண்டாவது எழுத்து எப்பொழுதும் மெய்யெழுத்தாகத்தான் இருக்கவேண்டும் என்பதில்லை. உயிர் மெய்யெழுத்தாகவும் இருக்கலாம்.

வாரணம்—நாரதன்
தாரணி—வீரமும்

என்பவற்றில் ர என்னும் உயிர்மெய் எழுத்து இரண்டாவது எழுத்தாய் ஒன்றி நின்று எதுகை ஆகின்றது,

எழுவாய்—மழுவாய்
தழுவா—தொழுதே

என்பவற்றில் இரண்டாவது எழுத்தாய் ழு என்றும் உயிர் மெய் எதுகையாய் நிற்கின்றது.

எதுகை அமைவதற்கு இரண்டாவது எழுத்து ஒன்றுவதுடன் முதலெழுத்தும் அளவொத்ததாய் இருக்கவேண்டும். தூதர் என்பதற்கு மாதர் எதுகையாகும்; ஆனால் மதர் என்று நிற்பின் எதுகையாக முடியாது.

"வஞ்சியை யெங்குங் காணாத்
துயரிடை மறந்தா னென்னச்
செஞ்சிலை யுரவேன் தேடித்
திரிகின்றா னுள்ளந் தேற
அஞ்சொலா ளிருந்தாள் கண்டேன்
என்றயான் அரக்கன் கொல்லத்
துஞ்சினா ளென்று சொல்லத்
தோன்றினேன் தோற்ற மீதால்,"

என்ற கம்ப ராமாயணச் செய்யுளில், அடிதோறும் முதலெழுத்துக் குறிலாயிருக்க, அதற்கடுத்த ஞகரமெய் எதுகையாக ஒன்றிநிற்றல் காண்க.

"மாதா வும்நம் சுற்றமு நாடு மறையோரும்
ஏதானாரோ வென்று தளர்ந்தே யிறுவாரைத்
தாதாய் காணச் சால நினைந்தேன் தளரயாள்வேம்
போதா யையா பொன்முடி யென்னைப் புனைவிப்பாய்

என்ற கம்பர் செய்யுளில், அடிதோறும் நெடிலாக, அதை அடுத்துவரும் தா என்பது ஒன்றி எதுகையாதல் காண்க.

சீர்தோறும் முதலெழுத்து ஒன்றி நிற்பதால் அமையும் சீர்மோனையும், அடிதோறும் இரண்டாவது எழுத்து ஒன்றி நிற்பதால் அமையும் அடியெதுகையுமே செய்யுள்களுக்குச் சிறப்பைத் தருவனவாகும். மேலே காட்டிய உதாரணச் செய்யுள்களில் அடி எதுகை அமைந்திருப்பது காண்க.

எதுகை அமைய வந்த எழுத்தே அடிதோறும் வரவேண்டும் என்று கூறினோம். ஆனால் சில சமயம்

எழுத்துக்கள் சிறிது வேறுபட்டும் எதுகையாவது உண்டு. அதாவது ஒரு எழுத்தின் வர்க்கத்தைச் சேர்ந்த எழுத்துக்களும், அல்லது இனத்தைச் சேர்ந்த எழுத்துக்களும் எதுகை ஆகலாம்

"பொறுத்த லிறப்பினை யென்று மதனை
மறத்த லதனினு நன்று."

[நம்பால் ஒருவன் செய்த தீங்கின் மிகையை அதற்குப் பதிலாக ஒன்று செய்யக்கூடிய காலத்தும் பொறுத்துக் கொள்ளல் நலம் செய்த தீங்கை மறுத்தல் பொறுத்தலிலும் மிக நல்லது. இறப்பு தீங்கின் மிகை.]

இச் செய்யுளில், இரண்டாவது எழுத்துக்களான, று-ற என்பவை வேறு வேறாயினும், இரண்டும் றகர வருக்கத்தைச் சேர்ந்தவையாதலால் எதுகை ஆயின. இவ்வாறு வருவதை வருக்கை எதுகை என்பர்.

ஏகித் தனிச்சென் றெதிரெய் தலுறும்
காகுத் தனையெய் தியகாலை யின்வாய்
வேகத் தொடுவீ ரர்விடைத் தெழலும்
ஓகைப் பொருளுண் டெனவோ தினனால்

என்ற இச் செய்யுளில், கி, கு, க, கை என, ஒரு வருக்கத்தைச் சேர்ந்த வேறு வேறு எழுத்துக்கள் எதுகையாயின. ஆனால் முதல் எழுத்து அளவொத்து இருத்தல் அவசியம்.

ஆயிர வாயிர கோடி யாய்வரும்
தீயுமிழ் கடுங்கணை மனத்திற் செல்வன்
பாய்வன புகுவன நிருதற் பல்லுயிர்
ஓய்வன நமன்றமர் கால்க ளோயவே.

என்னுமிச் செய்யுளில், முதல் இரண்டடிகளில் யி, யு என்பவை வருக்கம்பற்றி எதுகையாயின. பின்னிரண்டு அடிகளில் இரண்டாவது எழுத்தாய் நிற்பது அரை மாத்

திரையுடைய யகர மெய் எனினும், ஒரு மாத்திரை அளவுடைய யிகர, யுகரங்களுக்கு யகரமெய் வருக்கம் எதுகையாய் நிற்பது காண்க. இவ்வாறும் யதுகை அமைவதுண்டு.

வருக்கம் அல்லாமல், ஒரே இனத்தைச் சேர்ந்த எழுத்துக்களும் எதுகையாக வருவதுண்டு. அவ்வாறு வருவதை இன எதுகை என்பர்.

" ஒருமையு ளாமைபோ லைந்தடக்க லாற்றின்
எழுமையு மேமாப் புடைத்து."

இதனில். ரு வுக்கு ழு எதுகையாயது. அவ்விரு எழுத்துக்களும் இடையினத்தைச் சேர்ந்தவை. எனவே, அவை இனத்தால் எதுகையாயின.

" தீயினாற் சுட்டபு ணுள்ளாறு மாறாதே
நாவினாற் சுட்ட வடு."

இதனில், இடையினத்தைச் சேர்ந்த யகர, வகரங்கள் எதுகையாயின.

" கணைகொடுதி யாழ்கோடு செவ்விதாங் கன்ன
வினைபடு பாலாற் கொளல்."

இதனில், மெல்லினததைச் சேர்ந்த ணகர னகரங்கள் எதுகையாயின.

" காட்சிக் கெளியன் கடுஞ்சொல்ல னல்லனேல்
மீக்கூறு மன்ன நிலம்."

வல்லினத்தைச் சேர்ந்த டகர, கரங்கள் இதில் எதுகையாயின.

வருக்கத்தால், இனத்தால் ஒன்றாதவிடத்தும், உயிரோசை ஒன்றி நிற்பதால் எதுகை அமையலாம்.

அணுவைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக்
குறுகத் தறித்த குறள்.

இச் செய்யுளின் அடிகளிலுள்ள ணு, று என்னும் எழுத்துக்கள், வர்க்கத்தாலும், இனத்தாலும் ஒன்றாதவை. எனினும் அவ்விரண் டெழுத்துக்களிலும் உள்ள உயிர் உகரமாதலால், உயிரின் ஒற்றுமைபற்றி அவை ஒன்றற் கொன்று எதுகையாகக் கொள்ளப்படுகின்றன. இப்படி வரும் எதுகையை உயிரெதுகை என்பர்.

அடிகளின் இரண்டாவது எழுத்து ஒன்றாமலும், வருக்க, இன ஒற்றுமை இல்லாமலும் இருக்கையிலுங்கூட நெடிலோசையின் ஒற்றுமைபற்றி எதுகை அமையக் காண்கின்றோம்.

" ஆவா வென்றே அஞ்சினர்...
கூகூ வென்றே...
மாமா வென்றே...
ஏகீர் நாகீர் என் செய்தும்..."

என்னும் இச் செய்யுளின் முதல் இரண்டடிகளிலுள்ள வா, கூ, என்பவை, வர்க்கம், இனம், உயிர் என்னும் எவ்வகையினாலும் ஒன்றாதவை. பின்னடிகளிலுள்ள மா, கீ என்பவையும் அத்தகையவே. எனினும், நெடிலோசை பற்றி வா, கூ வும். மா, கீ யும் எதுகைகளாயின.

இவையன்றிச் சிலவிடங்களில், இரண்டாவது எழுத்து ஒன்றாதபோதும், மூன்றாவது எழுத்து ஒன்றி நிற்பது பற்றி எதுகை கொள்ளப்படுவதுண்டு.

" பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனில் "

இதனில் இரண்டாவது எழுத்துக்களாகிய யகர மெய்யும் னகர மெய்யும் ஒருவிதத்திலும் ஒவ்வாதவை. எனினும்,

மூன்றாவது எழுத்தான மை ஒன்றிவரல்பற்றி எதுகை ஆகின்றது.

"பவழமும் பொன்னுங் குவைஇய முத்தின்
திகழரும் பீன்றது புன்னை."

இதனில், இரண்டாவது எழுத்து உயிரினால் ஒன்றியிருப்ப துடன், மூன்றாவதான ழகரமும் ஒன்றி எதுகை அமைந் துள்ளது.

நிற்க, முதலெழுத்திற்கும், எதுகையாக வரும் இரண் டாவது எழுத்திற்கும் இடையில், ய், ர், ல், ழ் என்னும் மெய்களில் ஒன்று நின்றாலும், ஓசை யொத்து ஒலித்தலால், எதுகை கெடுவதில்லை.

"மெய்ப்போதி னங்கைக் கணியன்னவன்
மென்பளிங்கில்
பொய்ப்போது தாங்கிப் பொலிகின்றதன்
மேனி நோக்கி
இப்பாவை யெங்கோற் குயிரன்னவ
ளென்னவுன்னிக்
கைப்போதி னோடுநெடுங் கண்பனி
காரநின்றாள்."

என்னும் செய்யுளின் முதலிரண்டடிகளில், இரண்டாவது எழுத்தாக யகரமெய் நிற்பினும், அதை அடுத்துள்ள பகர மெய் மற்றெல்லா அடிகளிலுமுள்ள இரண்டாவதெழுத் தோடு ஒன்றி எதுகையாகின்றது. இதை, யகர ஒற்றிடை வந்த ஆசிடை எதுகை என்பர். ஆசு என்பது சேர்ப்பது என்னும் பொருளது.

"வாழ்கின்றோ மென்று மகிழன்மின் வாணாளும்
போகின்ற பூளையே போன்று."

இதனில் ழகரமெய் இடையில் ஆசாக வந்துளது. முதலடியின் மூன்றாவது எழுத்தான கி என்பது, இரண்டாவது அடியிலுள்ள கி யோடு ஒன்றி எதுகையாகின்றது.

" ஆவே றுருவின வாயினும் ஆபயந்த
பால்வே றுருவின வல்லவாம்..."

இதனில் இரண்டாவது அடியில் லகரமெய் ஆசாக இடையே வந்துள்ளது

இந்த ய், ர், ல், வ், ழ் என்னும் மெய்களன்றி, வேறு சில மெய் யெழுத்துக்களும் ஆசாக வரலாம். எனினும், அவ்வாறு வருதல் மிக மிக அருமை.

இனிச் சிலவிடங்களில், எழுத்து இல்லாக்காலையிலும், ஒலியின் இயைபு பற்றி எதுகை நயம் அமையக்கூடும். ஐ என்பதில் யகர ஒலி இருப்பதால், ஐக்கு, யகரம் எதுகை யாவதுமுண்டு.

" உய்யா ளுயர்கோ சலைதன் னுயிரோ
அய்யா .. ...
மெய்யார்
கைகே சிகருத்து........."

என்ற செய்யுளில், ஈற்றடியிலுள்ள, கை, மற்ற அடிகளிலுள்ள யகர மெய்க்கு ஒலியின் ஒற்றுமையால் எதுகை ஆனமை காண்க.

" கை நெரித்து வெய்துயிர்ப்ப ........
மையரிக்கண் .........."

இதன் முதலடியிலுள்ள யகர ஒலியே, இரண்டாமடியின் இரண்டாவது எழுத்தான யகரத்திற்கு எதுகையாயிற்று. இவ்வாறு வருதலை ஒலியெதுகை என்பர்.

இதுவரை, யாம் கூறி வந்தது அடியெதுகை. அடிகளி லுள்ள சீர்களிலும், இரண்டாவது எழுத்து ஒன்றுவதால் எதுகை அமையலாம். சீர்களில் வரும் எதுகையைச் சீரெதுகை என்னலாம். அடிகளிற் போலவே சீர்களிலும், இரண்டாவது எழுத்து ஒன்றியும், இன, வர்க்க ஒற்றுமை யாலும், ஆசிடை பெற்றும், எதுகை அமையக்கூடும்.

" கஞ்சங்களை மஞ்சன்கழல் நகுகின்றது கண்டாள்,"

என்ற அடியில் 1, 2 சீர்களில் எதுகை வந்துள்ளது

" கங்குல்வந்த திங்களன்ற கங்களங்க மில்லையே,"

என்னுமடியில் 1, 2, 3 சீர்களில் எதுகை வந்துள்ளது.

" வஞ்சியென நஞ்சமென வஞ்சமகள் வந்தாள்,"

இதில், 1, 2, 3 சீர்களில் இரண்டாவது எழுத்துக்கள் ஒன்றியும், 4-வது சீரில் இனவெழுத்துப் பெற்றும் எதுகை அமைந்துள்ளது. நாலு சீர்களிலும் எதுகை அமைந் திருப்பதால், இதை முற்றெதுகை என்னலாம்

செய்யுளின் இனிமைக்குக் காரணமாவதால் மோனை யும், எதுகையும் செய்யுளுக்கு இன்றியமையா உறுப்புக்களா கின்றன. மேலும், செய்யுள்களை விரும்பி ஓதுவதற்கும், பொருளைத் தொடர்ந்து அனுபவிப்பதற்கும் இத் தொடை கள் உதவுகின்றன.

கம்பரனைய பெருங் கவிகள் இத்தொடைகளை ஓதுவார் வியத்தற்குரிய முறையில் கையாளுகின்றனர். மோனையும், எதுகையும், செய்யுளின் பொருளுக்குரிய முக்கியமான சொற்களில் அமைதலே சிறப்புடைத்தாகும்.

" எந்தைநல் கூர்ந்தா ளிரப்போர்க்கீந் தென்றவன்
மைந்தர்தம் மீகை மறுப்பரோ— பைந்தொடீ
நின்று பயனுதவி நில்லா வரம்பையின்கீழ்க்
கன்று முதவுங் கனி. "

என்னும் வெண்பாவில், கருத்தை நிறுவுதற்கு வேண்டிய வான சொற்களே மோனைக்கும் எதுகைக்கும் இடமா யிருப்பது புலப்படும்.

" வீமன் மடந்தை விழிமுடியக் கண்டறியா
வாம நெடுந்தோள் வறியோர்க்—கேமம்
கொடாதா ரகம்போற் குறுகிற்றே மெய்ம்மை
விடாதான் திருமேனி வெந்து, "

என்னும் வெண்பாவில் பொருளை நிறுவுதற்குரிய சொற்களில் எதுகை, மோனைத் தொடைகள் அமைந்திருப்பது காண்க. மோனை எதுகைகளை முக்கியமான சொற்களில் அமைப்பதில் கவிக்கரசு கம்பர் தனித்திறமை வாய்க்கப் பெற்றவர்.

" தூதுவ னொருவன் தன்னை யிவ்வழி விரைவிற் [றூண்டி
மாதினை விடுதி யோவென் றுணர்த்தவே மறுக்கு [மாகில்
காதுதல் கடனென் றுள்ளங் கருதிய தறனு மஃதே
நீதியு மஃதே யென்றான் கருணை னிலைய [மன்னான். "

என்ற செய்யுளிலுள்ள எதுகை மோனைச் சொற்களை எடுத்துத் தொடுத்தாலும் பொருள் கூடும் பெருமையை நேயர்கள் காணலாம்.

" தூதுவனை தூண்டி.........
மாதினை மறுக்குமாகில்...
காதுதல் கடன்...
நீதியும்............நிலையமன்னான் "

என்ற சொற்கள், செய்யுளின் பொருளைத் தெரிவிப்பதா கின்றன.

இத் தொடைகள் வேறோர் வகையிலும் ஓதுவார்க்கு உதவ வல்லன அதாவது, செய்யுளுக்குப் பொருள் செய்யவும் பதங்களைச் சரியானபடி பிரிக்கவும் இத் தொடைகள் துணையாதல் கூடும்.

" கொடுத்த மைந்தரைக் கொண்டு சிந்தைமுந்
தெடுத்த சீற்றம்விட் டினிது வாழ்த்திமேல்
அடுத்த வேள்விபோய் முடித்து நாமென
நடத்தன் மேயினா னவைக்க ணீங்கினான் "

இச் செய்யுளின் நான்காவது அடியை,

" நடத்தன் மேயினான் நவைக்கண் நீங்கினான் "

என்றும்,

" நடத்தன் மேயினான் அவைக்கண் நீங்கினான், "

என்றும் பிரிக்கலாம். அவைக்கண் என்று பிரித்தால் மோனை அமையாதாகையால், நவைக்கண் என்று பிரிப்பதே சிறக்கும்.

எதுகை அமைத்தலில் ஒரு சம்பிரதாயம் உளது. கண்டார் என்பது முதலடியின் முதற் சொல்லாயின், மற்ற அடிகளில் எதுகையாக வருபவை. பண்டோர், தண்டார், கொண்டார என்று வேறு வேறு சொல்லாய் இருக்க வேண்டும். கண்டார், கண்டார் என்று வரலாகாது. அப்படிச் சொற்கள் செய்யுளடிகளில் வருமானால் அவை வெவ்வேறு விதமாகப் பிரிந்து வெவ்வேறு பொருள்களைத் தருவனவாக வேண்டும்.

" கண்டகனாவின் பொருள்போல யாவும்பொய் [காலனென்னும்
கண்டகனாவி கவர்வதுவேமெய் கதிநெல்கெனக்
கண்டகனா விப்பொழுதே செல்கென்றருள் காரரங்கற்
கண்டகனா யின்புறக் கண்டு வாழ்த்திக் கடிதுய்மினே'

என்னும் செய்யுள் அன்னதற்கு உதாரணம்.

தொடைகளில் முக்கியமானவையான மோனை எதுகைகளைப் பற்றிய இலக்கணத்தைப் பார்த்தோம் இனி, எஞ்சி நிற்கும் முரண் தொடை, இயைபுத் தொடை, அளபெடைத் தொடை என்பவற்றின் இலக்கணத்தைப் பார்ப்போம்.

## முரண் தொடை

செய்யுள் நடையைச் சுவை செய்யும் பொருட்டு வரும் தொடைகள் எதுகை, மோனை, முரண், இயைபு, அளபெடை என்பவை. இவற்றில் ஒலியால் நயம் பயக்கும் மோனை எதுகைத் தொடைகளின் தன்மையைக் கண்டோம். இனி முரண் தொடையின் இலக்கணத்தை அறிவோம்.

முரண் என்பது எழுத்தைத் தழுவியதன்று. எனவே, எழுத்துக்களின் ஒலி ஒற்றுமையை இது ஆதாரமாகக் கொண்டதன்று. சொல்லும் பொருளும் மாறுபடத் தொடுப்பது முரண்தொடை.

"உறங்கு வதுபோலுஞ் சாக்கா டுறங்கி
விழிப்பது போலும் பிறப்பு."

இதனில், முதலடியின் முதற்சொல் உறங்குவது என்பது. அதற்கு எதிர்ப்பதமான விழிப்பது என்பது இரண்டாவது அடியின் முதலில் வந்துள்ளது. இவ்விரு சொற்களும் ஒன்றற்கொன்று மாறுபட்டவை. இச் செய்யுளில் எதுகை இல்லை. ஆனால் முரண் அமைந்துள்ளது.

இந்த முரண்தொடை மோனை எதுகைகளைப்போல் செய்யுளடிகளின் முதற் சீரிலும் வரலாம். அல்லது ஓரடியிலுள்ள சீர்களிலும் வரலாம்.

"சிற்றின மஞ்சும் பெருமை சிறுமைதான்
சுற்றமாச் சூழ்ந்து விடும்"

இதனில் பெருமை சிறுமை என்ற சொற்கள் மாறுபடமுரணி ஓரடியின் சீர்களில் நிற்கின்றன.

இந்த முரண் நோய்-மருந்து என்பனபோல் ஒன்றற் கொன்று நேர்ப் பகையாய் இருக்கலாம்.

அல்லது, இம்மை-மறுமை, காலை மாலை, தலை-கால் தெற்கு-வடக்கு என்பனபோல், ஒன்றின் இருபுற எல்லை களும் ஒன்றற்கொன்று முரண்களாகலாம்.

அல்லது, கருமை-செம்மை என்பன போன்ற நிற பேதங்களால் முரண் விளையலாம்.

அல்லது, மண்-விண் என்பன போன்ற பூத பேதங்க ளால் முரண் விளையலாம்.

"கருங்குழலார் செங்கையினால் வெண்கவரி......"

என்ற அடியில் கருமை, செம்மை, வெண்மை என்னும் நிறங்கள் ஒன்றற்கொன்று முரணாயின.

பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில் ஆகியவை மாறுபட நிற்கும்பொழுதும் முரண் அமையலாம்:

அமுதம்—நஞ்சு; நீர்—நெருப்பு—பொருள்முரண்.

சுவர்க்கம்—நரகம்; மேல்—கீழ்; வலம்—இடம்—இடமுரண்.

காலை—மாலை—பகல்—இரவு—காலமுரண்,

தலை—கால், மார்பு—முதுகு—சினை முரண்,

நன்மை—தீமை: சிறுமை—பெருமை—குணமுரண்,

ஆக்கல்—அழித்தல்; புகழ்தல் — இகழ்தல்—தொழில் முரண்.

முரண் சிற்சில சமயம் அர்த்த சம்பந்தமில்லாமல் சொல்லளவில் அமைவதுங் கூடும்.

"செஞ்சொற் கேளா வெள்ளை மதியினர்."

என்பதில் செம்மையும், வெண்மையும் முரணாகின்றன. இம்முரண் நிறம் பற்றியதன்று. எனவே, இது சொல்லள வாய் விளைந்த முரணாகும்.

சொல்லால் அல்லாமல் பொருளாலும் முரண் விளைவது முண்டு.

"யானைப் படையைப் பூனை வென் றன்ன."

என்பதில், யானைக்கும் பூனைக்கும் சொல்லளவில் முரண் இலது, ஆனால், பெரிய யானையைச் சிறிய பூனை வென்றது என்ற முரணுடைய பொருள் :அதனுள் அடங்கி நிற்பதால், முரண் தொடையாகின்றது.

சொல்லும், பொருளும் முரண்பட்டு நிற்பதும் உண்டு.

"நன்றுந் தீதும் பிறர்தர வாரா."

என்பதில், நன்று, தீது என்பவை சொல்லளவில் எதிர்ப் பதங்க ளாவதன்றிப் பொருளாலும் முரண்பட நிற்கின்றன.

முரண்தொடை அமையச் சொல்லும் பொருளும் மாறுபட நிற்றல் அவசியம். "மொழியினும் பொருளினும் முரணுதல் முரணே," என்பது தொல்காப்பியம். தலை, கால் என்பவை ஒன்றற்கொன்று எதிரான பதங்களாயினும் அவை வாக்கியத்தில் மாறுபட நிற்கும்போதுதான் முரண் விளையும். காலும், தலையும் உடையவன் மனிதன்," என்னுங்கால் முரண் அமைவதற்கில்லை. "காலால் இட்ட வேலையைத் தலையால் செய்வேன்." என்னும்பொழுது தான் சொற்கள் முரணி நின்று, முரண் தொடை ஆகும்.

" அழிவதூஉ மாவதூஉ மாகி வழிபயக்கும்
ஊதியமுஞ் சூழ்ந்து செயல்."

என்பதில். "அழிவது-ஆவது" என்னும் எதிர்ச் சொற்கள் மாறுபட நின்று முரண்தொடை ஆகின்றன.

" இன்பத்து ளின்பம் விழையாதான் துன்பத்துள்
துன்ப முறுத லிலன்."

இதனில் இன்பம், துன்பம் என்னும் பதங்கள் முரணி நிற்கின்றன.

" இனிய வுளவாக வின்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று."

இதில், இனிய - இன்னாத; கனி - காய் என்பவை முரணி நிற்கின்றன. இக் குறளில், மோனை, எதுகை, முரண் ஆகிய மூன்று தொடைகளும் அமைந்திருப்பது காண்க. இதனால், செய்யுளின் நயம் சிறப்பதாகின்றது.

இம் முரண் தொடைக்கும், அணிகளில் ஒன்றாகிய விரோத அணிக்கும் அதிக வேற்றுமையில்லை என்று பெரும்பாலும் கருதப்படுகின்றது. ஊன்றி நோக்கினால், இரண்டிற்கும் இடையேயுள்ள வேற்றுமை புலப்படும். சொல்லேனும், அல்லது பொருளேனும், அல்லது சொல்லும் பொருளுஞ் சேர்ந்தேனும் மாறுபட்டு நிற்பது முரண் என்று கூறினோம். ஆனால், விரோத அணியில், முரண் மொழிகள் தத்தமக்குரிய பொருள்களைச் சார்ந்து நிற்ப தோடு, ஒரே விஷயத்தின் அங்கங்களாக அமையக் காண லாம். உதாரணமாக ஒரு செய்யுளை எடுத்துக்கொள் வோம்.

" கோல நிறம்விளர்ப்பக் கொங்கை முகங்கருக
நீல நிறமயிர்க்கா னின்றெறிப்ப - நூலென்னத்

தோன்றாத நுண்மருங்குல் தோன்றச் சுரிகுழலாள்
ஈன்றாள் குழவி யிரண்டு."

என்பது நளவெண்பாச் செய்யுள். இதில், வெண்மை, கருமை, நீலம், தோன்றாத, தோன்ற என்பவை முரண் மொழிகள் அவை தத்தமக்குரிய பொருளைத் தழுவி நிற்ப தோடு, 'தமயந்தி கருக்கொண்டாள்' என்னும் ஒரு கருத்தின் அங்கங்களாக அமைந்து, இறுதியில் ஒற்றுமை அடை கின்றன. விரோத அணியில், முரணி நிற்கும் சொற்கள் யாதேனும் ஒருவகையில் ஒற்றுமை அடைய வேண்டும் என்பது அவ்வணிக்குரிய இன்றியமையா இலக்கணம்.

சோலை பயிலுங்குயின் மழலை சோர்ந்தடங்க
ஆலு மயிலினங்க ளார்த்தெழுந்த ஞாலம்
குளிர்ந்த முகில்கறுத்த கோபஞ் சிவந்த
விளர்த்த துணைபிரிந்தார் மெய்.

[சோலையில் சஞ்சரிக்கும் குயில்கள் (கார்காலம் வர) தம் மழலைச் சொற்களை மிழற்றாமல் அடங்க, ஆடும் மயிற்கூட்டங்கள் ஆரவரித்து எழுந்தன. பூமி குளிர்ந்தது. மேகம் கறுத்தது இந்திரகோபப் பூச்சிகள் சிவந்தன. காதலரைப் பிரிந்து தனித்திருக்கும் பெண்களின் உடம்பு வெளுத்தது.]

இச் செய்யுளில், அடங்கல், எழுதல், கறுத்தல், சிவத்தல், வெளுத்தல் ஆகிய முரண்கள், இறுதியில் கார்காலச் செய்திகளின் தன்மையாக ஒற்றுமைப்பட்டு முடியக் காண்கின்றோம்.

காலையு மாலையுங் கைகூப்பிக் கால்தொழுதால்
மேலை வினையெல்லாங் கீழவாம்—கோலக்
கருமான்றோல் வெண்ணீற்றுச் செம்மேனிப்
பெருமானைச் சிற்றம் பலத்து. [பைந்தார்ப்

[அழகிய கரிய யானைத் தோலையும், வெண்மையான விபூதியையும், சிவந்த மேனியையும், பசுமையான மாலையையும் உடைய சிவபெருமானைச் சிதம்பரத்தில், நாம் காலையும் மாலையும் கைகூப்பி அவரது காலைத் தொழுதால் முன்னைய ஜென்மவினைகள் எல்லாம் கீழாகிவிடும்—அழிந்துவிடும் என்பது கருத்து.]

இச் செய்யுளிலும், காலை, மாலை என்பவை தொழுதல் என்பதோடும், மேல், கீழ் என்பவை ஆதல் என்பதோடும், கருமை, வெண்மை, செம்மை, பசுமை என்பவை பெருமானோடும் சேர்ந்து ஒற்றுமை அடைகின்றன முரண்பட நிற்கும் சொற்கள், இறுதியில் ஒரு கருத்தினுள் ஒற்றுமைப்பட்டு நிற்கையில்தான் விரோத அணி அமையும்.

விரோத அணிக்கு உதவியாக முரணுடைய சொற்கள் வரலாம். ஆனால் முரணுடைய சொற்கள் வரும்போதெல்லாம். விரோத அணி அமையவேண்டும் என்பதில்லை. முரணோடு சொற்கள் நிற்குமாயின் முரண்தொடை, அம்முரணில் ஒரு கருத்தொற்றுமை தோன்றுமாயின் விரோத அணி. இந்த அணியைத் தமிழில், முரண்விளைந்தழிவணி என வழங்குவதுமுண்டு. இந்தப் பெயரே, முரண்தொடை வேறு, விரோதவணி வேறு என்பதைக் குறிக்கப் போதுமானதாகும்

## இயைபுத் தொடை

சீரின் முதல் எழுத்து ஒன்றிவரின் மோனை என்றும் இரண்டாவது எழுத்து ஒன்றிவரின் எதுகை என்றுங் கண்டோம். மோனையும் எதுகையும் எழுத்தைப் பற்றியவை. மூன்றாவதாகக் கூறிய முரண்தொடையோ சொல்லையும், பொருளையும் பற்றியது.

இயைபுத்தொடை. மோனை எதுகைகளைப்போல் எழுத்தையும், முரணைப்போல் சொல்லையும் பற்றி இரு

விதத்திலும் அமையும் இயல்பினது. ஆனால் ஒரு வித்தியாசம் உளது. ஒரு செய்யுளின் பல அடிகளிலேனும், அல்லது ஓரடியின் *சீர்*களிலேனும் முதலெழுத்தோடு, மற்ற அடி அல்லது *சீர்*களின் முதல் எழுத்து ஒன்றுவது மோனை. இயைபுத்தொடையோ அடிகளிலும், *சீர்*களிலுமுள்ள இறுதியெழுத்தைப் பற்றியது. அதாவது இறுதி ஒன்றி வருவது இயைபு. இறுதிச் சொல்லும் ஒன்றி வரலாம்.

முத்தணி யணிவரும் மணியணி முனிவாரும்
பத்தியி னிமிர்சொம்பொற் பலகலன் மகிழ்வாரும்
தொத்துறு தொழின்மாலை சுரிகுழ லணிவாரும்
சித்தர திரைதோயுஞ் செந்துகில் புனைவாரும்

என்னுஞ் செய்யுளின் ஈற்றுச்சீரின் ஈற்றெழுத்தான மகர மெய் எல்லா அடிகளின் ஈற்றிலும் ஒன்றி நிற்பதால் இயைபுத்தொடை அல்லது வாரும் என்ற மூன்றெழுத்தும் ஒன்றிய இயைபு என்றுங் கொள்ளலாம்.

இவ்வாறு அடிதோறும் ஈற்றிலுள்ள எழுத்தேனும் சொல்லேனும் ஒன்றி வருவதன்றி ஓரடியினுள்ளும் ஈற்றெழுத்தோ, சொல்லோ ஒன்றிவரினும் இயைபே.

பவள வுலக்கை கையாற் பற்றித்
தவள முத்தங் குறுவாள் செங்கண்
தவள முத்தங் குறுவாள் செங்கண்
குவளை யல்ல கொடிய கொடிய.

இதனில் கடைசி யடியின் ஈற்றிலுள்ள கொடிய என்னுஞ் சொல், அதன் முன்னும் (இடப்புறமும்) வந்திருப்பதால் இயைபு ஆகும்.

"அகிலிடும் புகை யட்டிலிடும் புகை,"

என்னுமடியின், ஈற்றிலுள்ள புகை, அதற்கு அயலிலுள்ள சீரின்முன் (இடப்புறத்தில்) ஒன்றி வந்துள்ளது. இவ்வாறு வரினும் இயைபே.

" கல்லைத்தான் மண்ணைத்தான் காய்ச்சித்தான்
குடிக்கத்தான்......... "

என்னுமடியின் ஈற்றிலுள்ள னகரமெய் மற்றெல்லாச் சீர்களின் ஈற்றிலும் ஒன்றி நிற்பதால் இயைபு ஆகின்றது.

" மொய்த்துடன் தவழு முகிலே பொழிலே."

இதன் ஈற்று லே என்னும் எழுத்து அதன் அயலிலுள்ள சீரின் ஈற்றிலுள்ள லே என்பதோடு ஒன்றுவதால் இயைபு.

முதலெழுத்தைப் பற்றியது மோனை. ஈற்றெழுத்தைப் பற்றியது இயைபு. இந்த இயைபுத் தொடையானது, அமையும் வகை பற்றி நான்கு விதப்படும்—

1. ஒரு அடியின் ஈற்றெழுத்தோடு, மற்ற அடிகளின் ஈற்றெழுத்து ஒன்றல்.
2. ஒரு அடியின் ஈற்றெழுத்தோடு அவ்வடியின் சீர்களிலுள்ள ஈற்றெழுத்து ஒன்றல்.
3. ஒரு அடியின் ஈற்றுச் சொல்லோடு மற்ற அடிகளின் ஈற்றுச் சொல் ஒன்றல்.
4. ஒரு அடியின் ஈற்றுச் சொல்லோடு அவ்வடியின் சீர்களிலுள்ள சொற்கள் ஒன்றல்.

மேலே செல்லுமுன் ஒன்று கூற விரும்புவோம். சொற்களால் ஒன்றி வருகின்ற இயைபுத் தொடைக்கும், அணிகளில் ஒன்றாகிய பின்வருநிலை அணிக்கும் ஒரு வகையில் ஒற்றுமையுளதேனும், இரண்டிற்கும் இடையே வேற்றுமையும் உளது. ஒன்றை நேயர்கள் மற்றொன்றாய் மயங்கிருக்கும் பொருட்டு இவற்றிற்கிடையேயுள்ள ஒற்றுமை வேற்றுமைகளைச் சிறிது விளக்குவோம்.

பின்வருநிலை அணிக்குரிய இலக்கணம் வருமாறு:

1. செய்யுளில் வந்தவொரு சொல், மீண்டும் அப் பொருளிலேயே சில முறை வருவாயின், சொற் பொருள் பின்வருநிலை அணி ஆகும்.

2. ஒரு முறை வந்த சொல், வேறு வேறு பொருளில் செய்யுளில் வருவாயின், அப்பொழுது சொற் பின்வருநிலை அணி.

3. ஒரே பொருளுடைய வேறு வேறு சொற்கள் செய்யுளில் வரின் பொருள்பின் வருநிலை அணி.

ஒரே பொருடைய வேறு வேறு சொற்கள் உவமை வாயிலாக வேறு வேறு பொருளை அடுத்து நிற்றல் உவமைப்பொருட் பின்வருநிலை அணி.

இவ்வாறு, பின்வருநிலை அணி நான்கு வகைப்படும். இயைபுத் தொடையும் நான்கு வகையில் அமையக்கூடும் என்பதைக் கண்டோம். "ஒரு அடியின் ஈற்றுச் சொல் லோடு மற்ற அடிகளின் ஈற்றுச் சொற்கள் ஒன்றியிருத்தல், ஒரு அடியின் ஈற்றுச் சொல்லோடு ஒன்றிய சொற்கள் அவ்வடியின் சீர்களில் வருதல்" ஆகிய வகைகளில் அமையும் இயைபுத் தொடை, சொல்பொருள் பின்வருநிலை யணியும், சொல்பின்வருநிலை யணியும் ஆகலாம். ஆனால் மேலே கூறிய இருவகைப் பின்வருநிலை யணிகளும் எப்பொழுதும் மேலே கூறிய இருவகை இயைபுத் தொடை யாகும் என்று எண்ண வேண்டா.

பின்வருநிலையணி அமைவதற்குச் சொற்கள் செய் யுளின் எந்த விடத்திலேனும் இருக்கலாம். இயைபுக்கோ, ஒன்றிவரும் சொற்களில் ஒன்று செய்யுளடியின் ஈறாய் இருக்கவேண்டும். மேலும், அச்சொற்கள் புணர்ச்சி விகாரத்தால் எழுத்துக்கள் திரியாமல், ஈற்றுச் சொல்லின்

உருவத்தில் இருத்தல், அவசியமாகும். அவ்வாறில்லாக் கால் இயைபுத் தொடை அமையாது.

உதாரணம் :

" நீரிடை யுறங்குஞ் சங்கம் நிழலிடை யுறங்குமேதி
தாரிடை யுறங்கும் வண்டு தாமரை யுறங்குஞ்செய்யாள்
தூரிடை யுறங்கு மாமை துறையிடை யுறங்கு மிப்பி
போரிடையுறங்கு மன்னம் பொழிலிடை யுறங்குந்தோகை

என்ற செய்யுளில் உறங்கும் என்ற சொல் பல விடங்களில் வந்துள்ளது. செய்யுளடியின் கடையில் அச்சொல் வரவில்லை இயைபு அமைய, அடியின் ஈற்றுச் சொல் லோடு மற்ற அடிகளின் ஈற்றுச் சொல் ஒன்றல், அல்லது அடியின் ஈற்றுச் சொல்லோடு ஒன்றிய சொற்கள் சீர்களில் வரல் அவசியமாதலால், இது பின்வரு நிலையணி ஆகுமே அல்லாமல். இயைபுத் தொடை ஆகாது.

" கடவுளைக் காணப் பெற்றேன்
கைதொழு தேத்தப் பெற்றேன்
மடமைகள் தீரப் பெற்றேன்
மம்மர்தோ யறுக்கப் பெற்றேன்
படைமத னோடப் பெற்றேன்
பாவங்கள் விலகப் பெற்றேன்
கடைவழிக் கதியும் பெற்றேன்
பேரின்பம் பெற்றேன் பெற்றேன்."

இதில் பெற்றேன் என்ற அடியீற்றுச் சொல் அடிதோறும் ஒன்றி முடிவதால் இயைபுத் தொடை. மேலும் அது, ஒவ்வோரடியின் சீரிலும் ஒன்றி வந்துளது. எனவே, இரு வகையிலும் இயைபு அமைந்த செய்யுள் இது. நிற்க, பெற்றேன் என்ற சொல், செய்யுளின் பல விடங்களில் ஒரே பொருளில் வந்திருப்பதால், இது சொற்பொருள் பின்வரு நிலையணியும் ஆகும்.

" ஆலைவாய்க் கரும்பின் றேனு
மரிதலைப் பாளைத் தேனும்."

என்பது ஒரு செய்யுளின் முதலடி:

" சோலைவாய்க் கனியின் றேனுங்
பொழியிழி யிறாலின் றேனு."

என்பது இரண்டாவது அடி!

இதில், முதலடியின் ஈற்றுச் சொல் தேனும் என்பது. இரண்டாவதடியின் ஈற்றுச் சொல் றேனு என்று புணர்ச்சியால் வேறுபட்டு நிற்கின்றது. மேலும், அடியின் ஈற்றுச் சொல்லான தேனும் என்பதோடு, அவ்வடியின் சீரிலுள்ள றேனு என்ற சொல், புணர்ச்சி விகாரம் அடைந்திருப்பதால் ஒன்றியது ஆகாது. இரண்டாவது அடியிலும், ஈற்றுச் சொல்லான றேனு என்பதோடு, அவ்வடியின் சீரிலுள்ள றேனுங் என்பது ஒன்றியதாகாது. இயைபுத் தொடைக்குச் சொற்கள் உருவந் திரியாது இருத்தல் அவசியம். எனவே இதில் இயைபு அமைய வில்லை. மற்று, இதில் அமைந்திருப்பது சொல் பொருட்டு பின்வருநிலையணி, அடியின் ஈற்றில் நின்ற எழுத்தாலும். உருவ வேறுபாடடையாச் சொல்லாலும் ஒன்றித் தொடுப் பது இயைபுத்தொடை என்று கொள்ளவேண்டும்.

குறிப்பு : மோனை அமைவதுபோல், வருக்க எழுத்துக் களாலும், இன எழுத்துக்களாலும் இயைபுத்தொடை அமைதல் கூடுமோ, கூடாதோ என்று யாப்பிலக்கண நூல்களிலிருந்து எம்மால் தெளிந்துகொள்ள முடியவில்லை, அமையலாம் என்றே நினைக்கின்றோம்.

### அளபெடைத்தொடை

மெய், உயிர் எழுத்துக்கள் தமக்குரிய மாத்திரைக்கு அதிகமாக அளபெடுத்து ஒலிப்பது அளபெடை. அதன்

இலக்கணத்தை எழுத்தியலில் விரிவாகக் கூறியுள்ளோம். இவ்வளபெடை நயமுற அமையும்படி தொடுப்பது அளபெடைத்தொடை.

தொடைகளில் இயைபுத் தொடை ஒன்றுதான் செய்யுளடியின் இறுதிச் சீரையும், இறுதி எழுத்தையும் பற்றி அமையும். மற்ற மோனை, எதுகை, முரண் தொடைகளைப்போல், அளபெடைத்தொடையும், அடியின் முதற் சீரையும், அச்சீரின்கண்ணுள்ள எழுத்தையும் பற்றி அமைவதாகும்.

"ஒஓ வினிதே யெமக்கிந்நோய் செய்தகண்
தாஅ மிதற்பட்டது,"

என்ற செய்யுளில், முதற்சீராய் நின்று அளபெடுத்த ஓ என்னும் எழுத்திற்கிணங்க, இரண்டாவது அடியின் முதலிலும் தா என்பது அளபெடுத்து ஒன்றியது. இப்படி ஓரே எழுத்து அளபெடுத்துச் செய்யுளடியின் முதற்சீராய் ஒன்றுவதைத் தனிநிலை அளபெடைத் தொடை என்பர்.

இப்படித் தனி எழுத்துத்தான் அளபெடுத்து ஒன்ற வேண்டும் என்பதில்லை. ஒன்றிற்கு அதிகமான எழுத்துக்களால் அமைந்த முதற்சீரின் எந்தவெழுத்தும் அளபெடுத்து ஒன்றி வரலாம்.

"பாஅல் புளிப்பினும் பகலிருளினும்
நாஅல் வேத நெறிதிரியினும்"...(புறநானூறு)

என்பதில் ஒன்றிற்கு அதிகமான எழுத்துக்களையுடைய முதல் சீர்களின் முதலெழுத்துக்கள் அளபெடுத்து ஒன்றியுள்ளன. இதை, முதல்நிலை அளபெடைத் தொடை என்பர்.

முதல் சீரின் நடுவெழுத்து அளபெடுத்தும் ஒன்றிநிற்கலாம்.

"சினை இய வேந்தன் செல்சமங் கடுப்பத்
துணை இயமாலை துன்னுதல்"...(குறிஞ்சிப் பாட்டு)

இவ்வாறு நடுவெழுத்து அளபெடுத்து ஒன்றுவதை இடை நிலை அளபெடைத் தொடை என்பர்.

முதல் சீரின் ஈற்றெழுத்தும் அளபெடுத்து ஒன்றி வரலாம்.

"மகாஅ ரன்ன மந்தி மடவோர்
நகாஅ ரன்ன நளிநீர் முத்தம்"...(சிறுபாணாற்றுப் படை)

இப்படிச் சீறு அளபெடுத்து ஒன்றி வருவதை இறுதி நிலை அளபெடைத் தொடை என்பர்.

"மேஎல் விசும்பு விழையாக் கயமைதான்
கீஇழ் குனியுங் கிடந்து."

மேல் கீழ் அளபெடுத்து ஒன்றின. மேலும் அவை முரணியும் நிற்கின்றன. எனவே, இதை முரண் அள பெடைத் தொடை என்னலாம்.

இதுவரை, செய்யுளடிகள் தோறும் அமையும் அள பெடைத் தொடையைப் பார்த்தோம், அடியின் முதல் சீருடன், மற்றோர் சீர் அளபெடுத்து ஒன்றுவதும் அள பெடைத் தொடையே.

"வெரூஉப் பறை நுவலும் பரூஉப்பெருந்
தடக்கை," (பொருநராற்றுப் படை)

என்னுமடியில் முதற்சீரிலும், அவ்வடியின் மற்றோர் சீரிலும் உயிர் அளபெடுத்து ஒன்றியிருப்பது காண்க. இதுவும் அளபெடைத் தொடையே.

"உறாஅ தவர்போற் சொலினுஞ் செறார் அர்சொல்
ஒல்லை யுணரப் படும்."

என்ற குறட்பாவில், முதல்சீருட் ஈற்றுச் சீரும் அளபெடுத்து ஒன்றின. எனவே, அளபெடைத் தொடை,

உயிரேபோல், மெய்யெழுத்துக்களும் அளபெடுத்து ஒன்றுவதால், அளபெடைத் தொடை அமையக்கூடும்.

"இலங்ங்கு வெண்பிறைசூ டீசனடி யார்க்கு
கலங்ங்கு நெஞ்சமிலை காண்."

இதில் ஙகரமெய் ஈரடியிலும் அளபெடுத்து ஒன்றியதால், அளபெடைத் தொடை அமைந்துளது.

"அம்ம்ம் பவள்ள் வரிநெடுங்க ணாய்வஞ்சிக்
கொம்ம்ம் பவள்ள் கொடிமருங்குல் கோங்கின்
அரும்ம்ம் பவள்முலை யொக்குமே யொக்கும்
கரும்ம்ம் பவள்வாயிற் சொல்."

என்னுமிச் செய்யுளின் நான்கடிகளிலும் மகர மெய் அளபெடுத்து ஒன்றியுளது. எனவே. அளபெடைத் தொடை. மேலும், முதலிரண்டடிகளின் இரண்டாஞ்சீரின் ஈற்று ளகர மெய்யும் அளபெடுத்துளது. அதனாலும் இது அளபெடைத் தொடை.

ஆய்தம் அளபெடுப்பதாலும் அளபெடைத்தொடை அமையலாம்.

"எஃஃகிலங்கிய கையரா யின்னுயிர்
வெஃஃகு வார்க்கில்லை."

இதன் ஈரடியிலும் ஆய்தம் அளபெடுத்துளதால் அளபெடைத்தொடை.

இதுகாறும் விளக்கப்பெற்ற அவ்வகைத் தொடைகளிலும், எதுகையும் மோனையும் மிகவும் முக்கியமானவை.

முரண் தொடையும் செய்யுள்கள் பலவற்றில் வரக் காண்கின்றோம். இயைபுத் தொடையும், அளபெடைத் தொடையும் அருகிலேயே வருகின்றன.

மேலே கூறிய தொடைகளன்றி, இரட்டைத்தொடை அந்தாதித்தொடை, செந்தொடை என்ற மூவகைத் தொடைகளும் இருக்கின்றன. இனி அவற்றைக் கருதுவோம்

## இரட்டைத் தொடை

செய்யுளின் ஓரடி முழுவதும் வந்த சொற்களே, ஒரே பொருளிலேனும், அல்லது வேறு வேறு பொருளிலேனும், சீர்களாய் வருமாயின் அதை இரட்டைத்தொடை என்பர்.

வாழுமே வாழுமே வாழுமே வாழுமே
கூழேனு மீவார் குடி.

முதலடியின் நான்கு சீர்களிலும் வாழுமே என்னுஞ் சொல் வந்திருப்பதால், இது இரட்டைத் தொடை ஆகும்.

" மாயுமே மாயுமே மாயுமே மாயுமே
ஈயாதார் ரீட்டுந் திரு."

### இரட்டைத் தொடை

" ஒக்குமே யொக்குமே யொக்குமே யொக்கும்
விளக்கினிற் சீரெரி யொக்குமே யொக்கும்
குளங்கொட்டிப் பூவி னிறம்."

இதன் முதலடி ஈற்றுச் சீரின் ஏகாரம் குறைந்திருப்பினும் இரட்டைத் தொடையே. முதலடியின் ஈற்றுச் சொல்லும் இரண்டாவது அடியின் ஈற்றுச் சொல்லும் ஒன்றில் நிற்ப தால் இயைபுத் தொடையும் இது பெற்றதாகும்.

பல பொருள்களில் ஒரு சொல், சீர்களில் வரினும் இரட்டைத் தொடையே,

" ஓடையே யோடையே யோடையே யோடையே
கூடல் பழனத்துங் கொல்லி மலைமேலும்
மாறன் மதகளிற்று வண்பூ நுதன்மேலும்
கோடலங் கொல்லைப் புனத்துங் கொடுங் குழாய்
நாடி யுணர்வார்ப் பெறின்."

இதில் ஒடையே என்ற சொல் நீரோடை, மலைவழி நெற்றிப் பட்டம், ஒரு வகைச் செடி என்ற பொருள்களில் வந்துளது.

கூடல் பழனத்தும் ஓடையே—நீரோடை,
கொல்லி மலைமேலும் ஓடையே—மலைவழி,
மாறன் மதகளிற்று வண்பூ நுதன் மேலும்
ஓடையே—நெற்றிப் பட்டம்,
கோடலம் கொல்லைப் புனத்தும் ஓடையே
—ஒருவகைச் செடி,

இச் செய்யுள் இரட்டைத் தொடை அமைந்த செய்யுள்.

## அந்தாதித் தொடை

செய்யுளடி யொன்றின் இறுதியிலுள்ள எழுத்தேனும், அசையேனும், சீரேனும் அடுத்த அடியின் முதலாமாறு தொடுப்பது அந்தாதித் தொடை. ஒரு செய்யுளின் ஈற்றடியேனும், அல்லது ஈற்றுச் சீர், அசை, எழுத்தேனும் அடுத்த செய்யுளின் ஆதியாவதும் அந்தாதித் தொடையே.

" அடியஞ் சீரு மசையு மெழுத்தும்
முடிவு முதலாச் செய்யுள் மொழியின ஃ(து)
அந்தாதித் தொடையென் றறியல்வேண்டும்."

என்பது சூத்திரம்.

உதாரணம் :

" வேங்கையஞ் சார லோங்கிய மாதவி
விரிமலர்ப் பொதும்பர் கெல்லியன் முகமதி
திருந்திய சித்தையைத் திறைகொண் டனவே,"

என்னுமிச் செய்யுளின் முதலடி முதலெழுத்தும் கடையடியின் ஈற்றெழுத்தும் வே ஆகவே, ஆதி அந்தமாயிற்று. அதனோடு, ஒவ்வொரு அடியின் ஈற்றெழுத்தும் அடுத்த அடியின் முதலெழுத்தாய் நிற்பதும் காண்க.

பேதுற விகந்த பெருந்தண் காவிரி
விரிதிரை தந்த வெறிகமழ் வாசம்
சந்தனக் குழம்பு முலைமிசைத் தடவிய
வியனறுங் கோதைக்கு மெல்லிதா நுசுப்பே.

அந்தம் ஆதி.—விரி, விரி,—சம், சந்,—விய, விய,
ஆதி அந்தம்.—பே, பே,

(முதலடி முதல்—கடையடி ஈறு)

திவ்ய கவி பிள்ளைப் பெருமாள் அய்யங்கார் பாடிய திருவரங்கத்தந்தாதி, திருவேங்கடத்தந்தாதி: பொய்கையாழ்வார் அருளிச் செய்த திருவந்தாதி; திருவரங்கத்தமுதனார் அருளிச் செய்த ஸ்ரீராமானுஜ நூற்றந்தாதி முதலிய நூல்களில் அந்தாதித் தொடை அமைந்திருக்குஞ் சிறப்பினைக் காண்க.

## செந்தொடை

மோனை, எதுகை முதலிய தொடைகள் பெறாமல் அசையும் சீரும் இசை கெடாவழி அமைந்து இன்பம் பயக்க வல்ல செய்யுள்களும் சிலவுள. தொடைகளின் துணை

யின்றி, இயற்கை யழகுடன் விளங்கும் செய்யுள்களைச் செந்தொடைச் செய்யுள் என்பர்.

"நெருப்பி னன்ன செந்தலை யன்றில்
இறவி னன்ன கொடுவாய்ப் பெடையொடு
தடவி னோங்குசினைக் காட்சியிற் பிரிந்தோர்
கையற நரலு நள்ளென் யாமத்துப்
பெருந்தண் வாடையும் வாரார்
இஃதோ தோழிநங் காதலர் வரவே!"

என்ற இச் செய்யுளில், எதுகை, மோனை, முரண், இயைபு அளபெடை, அந்தாதி, இரட்டையாகிய எழுவகைத் தொடைகளில் எதுவொன்றும் வந்திலது எனினும் செய்யுளோ இயற்கை அழகுடனும், சுவை குறையாச் செம்மையுடனும் விளங்குகின்றது. செய்யுள் இவ்வாறு அமையுமாயின் செந்தொடை.

## தொடை விகற்பம்

இரட்டை, அந்தாதி, செந்தொடை ஆகிய மூவகைத் தொடைகளும், அமையும் இட வேறுபாடு பற்றி விகற்பப் படுவதில்லை. மற்ற, மோனை, எதுகை முதலிய தொடை கள், எவ்வெந்தச் சீர்களில் அமைந்து நிற்கின்றன என்ப தற்கு ஏற்ப விகற்ப மடையலாம்.

அதாவது, தொடைகள் யாம் கூறிய இலக்கணங் களுக்கு இணங்கிச் செய்யுளடிகள் தோறும் அமையலாம்; அல்லது ஓரடியின் கண்ணுள்ள சீர்களிலும் அமையலாம். அடிக்கு அடி தொடை அமைந்தால், அதை அடித்தொடை அல்லது முதல்தொடை என்பர். சீர்களில் அமையுந் தொடைகளுக்கு, அவை நிற்கும் இடங்கருதிப் பல்வேறு பெயர்களை ஆன்றோர் கொடுத்திருக்கின்றனர்.

செய்யுள்களில், 2, 3, 4. 5. 6 சீர்களையுடைய அடிகளும், ஆறுக்கும் அதிகமான சீர்களையுடைய அடிகளும் வருமென்று முன்னரே கூறியுள்ளோம். ஆனால் நான்கு சீர்களையுடைய அளவடியே மிகையும் குறையும் இல்லாத சிறந்த அடியாகக் கருதப்படுகின்றது. அவ்வளவடியைக் கருத்திற்கொண்டே தொடை விகற்பங்கள் வகுக்கப் பெற்றுள்ளன

தொடைவிகற்பங்கள், அடி, இணை, பொழிப்பு, ஒரூஉ, கூழை, மேற்கதுவாய், கீழ்க்கதுவாய், முற்று என எட்டு வகைப்படும். இவ்வெட்டு வகை விகற்பங்களும் அய்வகைத் தொடைகளுடன் சேர்ந்து நாற்பது வகைப்படுகின்றன. அய்வகைத் தொடைகளில், இயைபுத்தொடை மாத்திரம் அடியின் இறுதிச் சீரைப் பற்றியது. மற்ற நான்கு வகைத் தொடைகளும் அடியின் முதல் சீரைப் பற்றியவை. மோனை, எதுகை முதலிய அய்வகைத் தொடைகளும், அவை கொள்ளும் விகற்பங்களுக்கு ஏற்றபடி,

"அடிமோனை, இணைமோனை, பொழிப்புமோனை,
ஒரூஉ மோனை, கூழைமோனை, மேற்கதுவாய்
கீழ்க்கதுவாய்மோனை, முற்றுமோனை," [மோனை,

என்றும்,

அடி எதுகை, இணை எதுகை......

என்றும்,

அடி முரண், இணைமுரண் ....

என்றும்,

அடி இயைபு, இணை இயைபு ....

என்றும்,

அடி அளபெடை, இணை அளபெடை .. ..

என்றும் பெயர் பெறுகின்றன.

## அடி

**அடி மோனை** :—ஓரடியின் முதலில் வந்த எழுத்து மற்ற அடி அல்லது அடிகளில் ஒன்றிவரல்.

**அடி எதுகை** :—முதலடி முதற்சீரின் இரண்டாவது எழுத்து மற்ற அடிகளில் ஒன்றிவரல்,

**அடி முரண்** :—"இரவு, பகல்; மேல், கீழ்," என்பன போன்ற முரணுடைய சொற்கள் அடிமுதல் நிற்றல்.

**அடி இயைபு** :—ஓரடியின் ஈற்றுச் சொல் அல்லது எழுத்து மற்ற அடியின் ஈற்றிலும் நிற்றல். (இது, ஆங்கிலத்தில் Rhyme என்பது போன்றது )

**அடி அளபெடை** :—அடிகளின் முதற்சீர் அளபெடுத்து நிற்றல்.

இனி, ஒரு அடியின் சீர்களில் வரும் தொடை விகற்பகங்களைப் பார்ப்போம்.

## இணை

**இணை மோனை**:—அளவடியின் 1, 2 *சீர்*களில் மோனை அமைதல். (முதலெழுத்து ஒன்றி நிற்றல்.)

**இணை எதுகை** :—அளவடியின் 1, 2 *சீர்*களில் எதுகை அமைதல் (இரண்டாவது எழுத்து ஒன்றி நிற்றல்.)

**இணை முரண்** :...அளவடியின் 1, 2 *சீர்*களில் சொற்கள் முரண்பட நிற்றல்.

**இணை இயைபு** ; அளவடியின் ஈற்றுச்சீர் இரண்டும் 4, 3 *சீர்கள்*. ஒரே சொல்லாய் ஒன்றியிருத்தல், *சீர்*களின் ஈற்றெழுத்துக்கள் (பெருமை, சிறுமை என்பனபோல்) ஒன்றியிருந்தாலும் இணை

இயைபே. மற்றத் தொடைகளுக்கு அடியின் முதற் சீரை நோக்குகின்றோம். இயைபுக்கு அடியின் ஈற்றுச் சீரை முதலாகக் கொண்டு, அதற்குமுன் (இடப்புறம்) நிற்கும் *சீர்களைக்* கருதி விகற்பங்களை உணர வேண்டும்.

இணை அளபெடை : அடியின் முதல் இரண்டு *சீர்கள்* அளபெடுத்து நிற்றல்.

## பொழிப்பு

பொழிப்பு மோனை: அளவடியின் 1, 3 *சீர்களில்* மோனை அமைதல். எண்வகைத் தொடை விகற்பங்களில் பொழிப்பே சிறப்புடையதாகக் கருதப் படுகின்றது.

பொழிப்பு எதுகை : செய்யுளின் முதல் *சீரின்* இரண்டாவது எழுத்தும், மூன்றாவது *சீரின்* இரண்டாவது எழுத்தும் ஒன்றிவரல்.

பொழிப்பு முரண்: அளவடியின் 1, 3 *சீர்களில்* சொற்கள் முரணி நிற்றல்.

பொழிப்பு இயைபு : அளவடியின் 4, 2 *சீர்களின்* ஈற்றெழுத்து அல்லது சொல் ஒன்றி நிற்றல். (ஈற்றுச் *சீரை* முதலாகக் கொண்டால், அடியின் இரண்டாவது *சீர்* மூன்றாவதாகும்.)

பொழிப்பு அளபெடை: அடியின், 1, 3 *சீர்களில்* எழுத்து அளபெடுத்து நிற்றல்.

ஒரூஉ மோனை: அடியின் 1, 4 *சீர்களில்* மோனை வரல்' (முதலெழுத்து ஒன்றி நிற்றல்.)

ஒரூஉ எதுகை: 1, 4 *சீர்களில்* எதுகை வரல். (இரண்டாவது எழுத்து ஒன்றி நிற்றல்.)

ஒரூஉ முரண்: 1, 4 *சீர்களில்* சொற்கள் முரணி நிற்றல்.

ஒரூஉ இயைபு: 4, 1 *சீர்களில்*, அதாவது ஈற்றுச் சீராக வந்த சொல்லே அதற்கு நான்காவதான சீரில் (அடியின் முதற்சீரில்) ஒன்றிவரல், முதற் சீரோடு நான்காவது சீர் ஒன்றியது என்று சொல்லக் கூடாது. இயைபுக்குக் கடைசிச் சீரை முதல் சீராகக் கருதவேண்டும்.

ஒரூஉ அளபெடை: 1, 4 *சீர்களில்* எழுத்து அளபெடுத்து நிற்றல்.

## கூழை

கூழை மோனை: 1, 2, 3 *சீர்களில்* மோனை அமைதல்.

கூழை எதுகை. 1, 2, 3 *சீர்களில்* எதுகை அமைதல்,

கூழை முரண்: 1, 2, 3 *சீர்களில்* சொற்கள் முரணி நிற்றல்.

கூழை இயைபு: 4, 3, 2 *சீர்களில்* சொல்லோ எழுத்தோ ஒன்றல் (ஈற்றுச் சீரை முதல் சீராகக் கொண்டால், இரண்டாகவும் 4, மூன்றாகவும் ஆகும் என்பது காண்க)

கூழை அளபெடை: 1, 2, 3 *சீர்களில்* எழுத்து அளபெடுத்து நிற்றல்.

## மேற்கதுவாய்

மேற்கதுவாய் மோனை ; 1, 3, 4 *சீர்களில்* மோனைவரல்.

மேற்கதுவாய் எதுகை: 1, 3, 4 *சீர்களில்* எதுகை வரல்.

மேற்கதுவாய் முரண்; 1, 2, 3 *சீர்களில்* சொற்கள் முரணி நிற்றல்.

மேற்கதுவாய் இயைபு: 4, 2, 1 சீர்களில் எழுத்தோ சொல்லோ ஒன்றல். ஈற்றுச் சீரை முதல் சீராகக் கொண்டால், 2, மூன்றாவதாகவும், 1, நான்காவ தாகவும் அமையும். அடியின் இரண்டாஞ்சீர் தவிர மற்றவைகளில் தொடை அமைதல் மேற்கது வாய்.

மேற்கதுவாய் அளபெடை: 1, 3, 4 சீர்களில் எழுத்து அளபெடுத்தல்.

## கீழ்க்கதுவாய்

கீழ்க்கதுவாய் மோனை: 1, 2, 4 சீர்களில் மோனைவரல்.

கீழ்க்கதுவாய் எதுகை: 1, 2, 4 சீர்களில் எதுகை வரல்.

கீழ்க்கதுவாய் முரண்: 1, 2, 4 சீர்களில் முரண் வரல்.

கீழ்க்கதுவாய் இயைபு: 4, 3, 1 சீர்களில் இயைபு வரல் (4 முதல் சீர். 3, இரண்டாஞ் சீர், 1, நாலாஞ்சீர். 3 ஒழிய மற்றச் சீர்களில் தொடை வரல் கீழ்க்கது வாய்).

கீழ்க்கதுவாய் அளபெடை: 1, 2, 4 சீர்களில் எழுத்து அளபெடுத்தல்.

## முற்று

அளவடியின் எல்லாச் சீர்களிலும் (1, 2, 3, 4) மோனை எதுகை. முரண், இயைபு, அளபெடை ஆகிய தொடைகள் அமையுமாயின், அவ்விகற்பம் முற்று எனப்படும்.

இயைபு மாத்திரம் 4, 3, 2, 1 சீர்களில் அமையும், இயைபு இறுதிச் சீரைப் பற்றியதாதலால், 4-வது முதல் சீராகவும், 3-வது இரண்டாஞ் சீராகவும், 2-வது மூன்றாஞ் சீராகவும், 1-வது நான்காஞ்சீராகவும் கொள்ளப்படும்.

"மணிநிரு மண்ணு மலையு மணிநிழல்
காடுமுடைய தரண்,"—முற்றுமோனை

"வல்லோ ரெல்லாம் நல்லோ ரல்லர்,"—முற்றுஎதுகை
"நீருமாய் நிலனு மாய்த் தீயுமாய் வளியு மாய்"—
முற்றுமுரண்.

"புயலே குழலே மயிலே யியலே."

இதில் முற்றியைபு அமைந்திருப்பது காண்க. ஈற்றுச் சீரின் ஈற்றெழுத்தோடு, மற்ற மூன்று சீர்களின் ஈற்றெழுத்தும் ஒன்றி நடக்கின்றது.

குறிப்பு: கடைச்சீரின் ஈற்றெழுத்தன்றி, அச்சீராய் அமைந்த சொல்லே மற்ற மூன்று சீர்களிலும் நிற்குமாயின் அப்பொழுது அது முற்றியைபு ஆகாமல் இரட்டைத் தொடையாய் விடும்.

"வாழுமே வாழுமே வாழுமே வாழுமே
கூழேனு மீவார் குடி."

என்ற உதாரணத்தில் முதலடியின் ஈற்றுச் சீரின் ஈற்றெழுத்தை நோக்கின் முற்றியைபுத் தொடையாகும். சீர்களை நோக்குமிடத்து, ஓரடி முழுவதும் வந்த சொல்லே வந்திருப்பதால் இரட்டைத் தொடையாகும்.

"ஆஅ னாஅ நீஇ னீஇர்,"

இதில் நான்கு சீர்களும் அளபெடுத்திருப்பதால் முற்றளபெடை.

இதுவரை யாம் கூறி வந்தவை] செய்யுளுறுப்புக்களுக்குரிய இலக்கணமாகும். நேயர்கள், தாங்கள் பயின்றுள செய்யுள்களில் தொடை முதலிய உறுப்புக்களைக் கண்டறிதல் நல்ல பயிற்சி தரும்.

செய்யுள் என்னும் கட்டிடத்திற்கு எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை என்பவை இன்றியமையா உறுப்புக் களாகும். எனவே, செய்யுளின் இலக்கணங்கூறு முன் இவ்வுறுப்புக்கள் பற்றி யாம் இதுவரை கூறியவற்றை, மீண்டுமோர் முறை சுருக்கி வரைதல் பயனுடையதாகும் என்று நினைக்கின்றோம்.

## உறுப்பியல் சுருக்கம்

செய்யுள் என்பது எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை என்னும் ஆறு வகையான உறுப்புக்களைக் கொண்டது.

எழுத்து:

உயிர், மெய் உயிர்மெய், குறில், நெடில், ஆய்தம், வல்லினம், மெல்லினம், இடையினம், குறுக்கம், அளபெடை முதலியன யாப்பிலக்கணத்தில், குறில், நெடில், ஒற்று அல்லது மெய் என்ற மூவகை எழுத்துக்களில் அடங்கிவிடும்.

அசைகள் நேர், நிரை என்று இருவிதப்படும். தனிக் குறில் அல்லது தனிநெடில் தனித்தேனும், மெய்யோடு சேர்ந்தேனும் நிற்பின் நேர் அசையாகும்.

அ, ஆ:—நேரசை.
அல், ஆல்—நேரசை.
நேர்ந், துய்த்—நேரசை.

இரு குறில், அல்லது குறில் நெடில் தனித்தேனும் மெய்யோடு சேர்ந்தேனும் நிற்பின் நிரை அசையாகும்.

அணி, அணா—நிரையசை
அணில், கலாம்—நிரையசை

அசைகளால் ஆவது சீர். சீர்கள் அசைச்சீர், இயற் சீர், உரிச்சீர், பொதுச்சீர் என நான்கு வகைப்படும்.

அசைச்சீர்: ஓரசையே சீராய் நிற்பது அசைச்சீர். இது வெண்பாவின் ஈற்றில் நிற்கும் இயல்பினது. நாள், மலர் என்ற வாய்பாட்டால் அழைக்கப்பெறும். (நேர்—நாள்; நிரை—மலர்.)

இயற்சீர்: இரண்டு அசைகளால் ஆகும் சீர் இயற்சீர், தேமா, புளிமா, கூவிளம், கருவிளம் என்ற வாய் பாட்டால் அழைக்கப்பெறும் இச்சீரை ஆசிரிய உரிச்சீர் என்றும் மாச்சீர், விளச்சீர் என்றும் அழைப்பதுண்டு.

உரிச்சீர்: மூன்று அசைகளால் ஆகும் சீர் உரிச்சீர். தேமாங்காய், புளிமாங்காய், கூவிளங்காய், கரு விளங்காய் என்னும் வாய்பாட்டால் அறியப்படும் இச்சீரை, வெண்பா உரிச்சீர் என்றும், வெண்சீர் என்றும், காய்ச்சீர் என்றும் அழைப்பதுண்டு. தேமாங்கனி, புளிமாங்கனி, கருவிளங்கனி, கூவிளங்கனி என்ற வாய்பாட்டால் அறியப்படும் உரிச்சீரை வஞ்சி யுரிச்சீர் என்றும், கனிச்சீர் என்றும், வஞ்சிச்சீர் என்றும் அழைப்பதுண்டு.

பொதுச்சீர்: நான்கு அசைகளால் ஆவது பொதுச்சீர். இச்சீரைப் புலவர்கள் அதிகம் கையாளக் காண் கிலம்.

## தளை

சீரோடு சீர் இணைதலைத் தளை என்றழைக்கின்றனர். அத்தளையும், ஆசிரியத்தளை, வெண்டளை, கலித்தளை, வஞ்சித்தளை என்று நான்கு வகைப்படும்.

ஆசிரியத்தளை: நிலைச்சீர் இயற்சீராக, அதன் ஈற்றசை யோடு வருஞ்சீர் முதல் அசை ஒன்றல் ஆசிரியத் தளை, (நேர் முன் நேரும், நிரை முன் நிரையும் வரல்) (முன், வலப்புறம்.)

வெண்டளை: இயற்சீர் விகற்பமும், வெண்சீர் (காயை ஈற்றிலுடைய உரிச்சீர்) ஒன்றலும் வெண்டளை. அதாவது, தேமா, புளிமா முன் நிரையும், கருவிளம் கூவிளம் முன் நேரும்வரின் இயற்சீர் வெண்டளை —(முன், வலப்புறம்) காய்ச்சீர் முன் நேர் வரல் வெண்சீர் வெண்டளை.

கலித்தளை: காய்ச்சீரின் முன் நிரைவரின் கலித்தளை, (முன் என்பது வலப்புறத்தைக் குறிக்கும்.)

வஞ்சித்தளை: நிலைச்சீர் கனிச்சீராக (கனியை ஈற்றிலுடைய மூவசைச்சீராக வருஞ்சீர் முதலசை எதுவாயினும் வஞ்சித்தளை கனி முன் நிரைவரின் ஒன்றிய வஞ்சித்தளை, நேர்வரின் ஒன்றாத வஞ்சித்தளை.

குறிப்பு: தளைகொள்வதற்கு நிலைச்சீரின் ஈற்றசை யையும் வருஞ்சீரின் முதலசையையும் நோக்கவேண்டும். அதாவது, நிலைச்சீர் இயற்சீரா, அல்லது உரிச்சீரா என்றும் வருஞ்சீர் முதலசை நேரா, நிரையா என்றும் பார்த்தல் அவசியம். வரும் சீர் எவ்வகைச் சீர் என்று பார்க்க வேண்டா.

அடி :

இரண்டு, மூன்று, நான்கு முதலிய பல சீர்களைக் கொண்டு நடப்பது அடி. 2. சீர், குறளடி; 5. சீர், சிந்தடி; 4. சீர், அளவடி; 5. சீர், நெடிலடி ; 5 சீர்களுக்கு மேற் பட்டவை கழிநெடிலடி

தொடை :—

சீர்களின் சொல்லையும் எழுத்தையும் அழகுறத் தொடுப்பது தொடை. அத்தொடையும் எதுகை, மோனை முரண், இயைபு அளபெடை என அய்வகைப்படும்.

**மோனை** :— முதல் சீரின் முதலெழுத்து, மற்றச் சீர்களின் முதலெழுத்தோடு ஒன்றல்.

**எதுகை** :— முதல் சீரின் இரண்டாவது எழுத்து மற்றச் சீர்களின் இரண்டாவது எழுத்தோடு ஒன்றல்.

**முரண்** :— முதல் சீரின் சொல்லோடு, மற்றச் சீர்களின் சொல் முரணி நிற்றல்.

**இயைபு**:— ஈற்றுச் சீரின் ஈற்றெழுத்து, அல்லது ஈற்றுச் சொல், மற்றச் சீர்களின் ஈற்றெழுத்து அல்லது ஈற்றுச் சொல்லோடு ஒன்றியிருத்தல். இது இசைப் பாட்டிற்குரியது.

**அளபெடை** :— முதல் சீரின் எழுத்தொன்று அளபெடுத்திருக்க, மற்றச் சீர்களிலும் அளபெடுத்து ஒன்றுதல்.

இவ்வைந்து தொடைகளும், செய்யுளடியில் அமைந்திருக்கும் இடம்பற்றி அடி, இணை, பொழிப்பு. ஒரூஉ, கூழை மேற்கதுவாய், கீழ்க்கதுவாய், முற்று என எட்டு வகைப் படும். ஓரடியிலுள்ள சீரிலும் வேறோரடியிலுள்ள சீரிலும் அமையும் தொடை அடித்தொடை எனப்படும். மற்றவை அடியின் கண்ணுள்ள சீர்களில் அமைபவை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| அளவடியின் | 1, | 2, | 0, | 0 | — இணை. |
| ,, | 1, | 0, | 3, | 0 | — பொழிப்பு. |
| ,, | 1, | 0, | 0, | 4 | — ஒரூஉ, |
| ,, | 1, | 2, | 3, | 0 | — கூழை. |
| ,, | 1, | 0, | 3, | 4 | — மேற்கதுவாய். |
| ,, | 1, | 2, | 0, | 4 | — கீழ்க்கதுவாய். |
| ,, | 1, | 2, | 3, | 4 | — முற்று. |

இயைபுத் தொடைக்கு மாத்திரம் ஈற்றுச் சீரை முதல் சீராகக் கொள்ள வேண்டும்.

## பிறதொடைகள்

யாம் மேலே கூறிய தொடைகள் அல்லாமல், விகற்பம் ஏற்காத தொடைகளும் சில உள. அவை, இரட்டைத் தொடை, அந்தாதித்தொடை, செந்தொடை என்பவை ஓரடியின்கண், ஒரு சீரிலே வந்த சொல்லே மற்றெல்லாச் சீர்களிலும் வரின் இரட்டைத்தொடை. ஓரடியின் இறுதிச் சீர் அல்லது அசை மற்ற அடியின் முதலில் வரின் அந்தாதித்தொடை. தொடை யாதும் அமையாவிடத்தும் செய்யுள் ஓசை நயம் குன்றாமல் நடக்குமாயின் செந்தொடை.

நிற்க, இலக்கணிகளில் ஒரு சாரார், கடைச்சீர், இடைச்சீர்களை நோக்கியும் சில விகற்பங்கள் கூறுகின்றனர். அவற்றின் பெயரையும் அமைப்பையும் மாத்திரம் அறிந்தால் போதும்.

கடையடி, கடையிணை, கடைக்கூழை, இடைப்புணர், பின் என்பவை அவை.

1. கடை அடி:— (மோனை எதுகை முதலியன) :— ஓரளவடியின் ஈற்றுச் சீருக்கும், மற்றோரடியின் ஈற்றுச் சீருக்குமாய் அமைபவை.

2. கடையிணை :— (மோனை எதுகை முதலியன) :— ஓரடியின் கடையிரு சீர்களில் (3, 4) அமைபவை.

3. கடைக் கூழை :— முதல் சீரொழிந்த மற்ற 2, 3, 4 சீர்களில் அமைபவை.

4. இடைப் புணர் :—அடியின் 2, 3, சீர்களில் அமைபவை.

5. பின் :— அடியின், 2, 4 சீர்களில் அமைபவை.

குறிப்பு :— இத் தொடைகளைக் கொள்ள நாம் கடைச்சீரை முதல் சீராகப் பாவித்துக் கொள்ள வேண்டும்.

இத்துடன் யாப்பியலின் முதல் பாகமான உறுப்பிலக்கணம் முற்றும்.

# செய்யுளியல்

## 1. பாக்கள்

ஓசை சிறக்கச் செய்யப்படுவது செய்யுள். உயரிய பொருளைத் தன்னிடங் கொண்டிருப்பதோடு, ஓதுவோர் கேட்போர் மனம் மகிழச் செய்யும் இனிமையையும் செய்யுள் தன்னிடத்தே கொண்டிருத்தல் அவசியம். செய்யுளுக்கு இனிமையைத் தருவது ஓசை.

ஓசையின் வேறுபாட்டால் செய்யுள்களும் பல வகைப் படும். செய்யுளை வரைவது என்பது இக்காலத்திய வழக்கம். முன்னையில் புலவர்கள் பிறர் கேட்கப் பாடுவதே வழக்கமாயிருந்தது. எனவே தான், செய்யுளைப் 'பா' என்று அழைத்தனர் போலும்!

பிறர் கேட்கப் பாடப்படுவது பாவாதலால் அதற்கு ஓசை நயம் இன்றியமையாத தாயிற்று. பாக்களும் ஓசைக்கு ஏற்ற படி வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா என்று வேறுபடலாயின. ஒரு விஷயத்தைக் கூறும் ஒரு பாவினை இருவேறு பாக்களில் அமைத்து, அப்பாக்களைத் தனித்தனி நாம் ஓதிப் பார்த்தால் ஒலி வேற்றுமை நன்கு புலப்படும். உதாரணமாகப் புகழேந்தியார் பாடிய வெண்பா ஒன்றை எடுத்துக் கொள்வோம்.

"காமர் கயல்புரளக் காவி முகைநெகிழத்
தாமரையின் செந்தேன் தளையவிழப் —பூமடத்தை
தன்னாட்டம் போலுந் தகைமைத்தே சாகரஞ்சூழ்
தன்னாட்டின் முன்னாட்டு நாடு."

என்னும் இச் செய்யுளையே, பொருள் வேறுபாடு இல் லாமல் வேறு வகைப் பாவாக அமைத்து விடலாம்.

"கயலினம் புரளக் காவிகண் மலர
மையறு நளினத் தேன்றனை யவிழ
நிலமா தென்னும் நல்லாள்
வலக்கண் போன்றதவ் வளங்கெழு பதியே!"

என்பது, புகழேந்தியாரின் வெண்பாக் கருத்தைத் தன்னிட கொண்டதான ஆசிரியப்பா. இதைசே வேறு வகைப் பாவிலும் அமைத்து விடலாம்.

"கயற்கூட்டம் புரண்டோட முகைக் குவளை
கட்டவிழ
மையறுசீர் மரைமலர்த்தேன் தனை நெகிழப்
புவிமடந்தை
நயனம்போற் பெருமையினாற் நிகழ்ந்திடுமால்
கடல்புடைசூழ்
நலமுடைய படிதனிலே முதனாட்டும்
நாடிதுவே"

என்னுமிது, அதே விஷயத்தைத் தன்னிடங் கொண்டு துள்ளி நடக்கும் ஓசையைக் கொண்ட பாவாகின்றது.

இம் மூன்று பாவையும் வாய்விட்டு ஓதிப் பாருங்கள். இம்மூன்று பாக்களும், ஒரே விஷயத்தைத் தெரிவித்து நிற்கின்றனவெனினும், ஓசையால் வேறுபடுவனவாகும். இவ்வொலி வேறுபாடும், பாக்களில் அமைந்துள்ள தளை களால் ஏற்படுகின்றது.

புகழேந்தியின் இவ் வெண்பாவை, விஷயம் வேறு படாமல், வேறோர் வகைப் பாவாகவும் அமைத்துவிடலாம்.

"கயல்புரள்வன புனலிடங்களும்
முகைவிரிவன கயிரவங்களும்
தேனவிழ்வன மரைமலர்களும்

பொலிதலால்,
புவிமகள் நயனம் போலும்
கவின்பெறு நிடதச் சேமதன் னாடே!"

என்னுமிது இருவித ஓசைகளையுடைய பாவாகும். இதன் முதல் மூன்றடிகளில், தூங்கலோசையும், பின்னிரண்டடிகளில் ஒருவனை அழைத்து ஒரு விஷயத்தைக் கூறுவது போன்ற அகவலோசையும் அமைந்திருக்கக் காணலாம்.

ஆகவே, செய்யுள்களில் அமையவல்ல ஓசை, செப்பலோசை, அகவலோசை, துள்ளலோசை, தூங்கலோசை என நான்கு வகைப்படும். இவ்வோசைகள் ஒவ்வொன்றும் மூன்று வகைப்படும். அவையாவன:

1. செப்பலோசை:

(1) ஏந்திசைச் செப்பலோசை
(2) தூங்கிசைச் செப்பலோசை
(3) ஒழுங்கிசைச் செப்பலோசை

2. அகவலோசை:

(1) ஏந்திசை அகவலோசை
(2) தூங்கிசை அகவலோசை
(3) ஒழுகிசை அகவலோசை

குறிப்பு: தூங்கிசையும், தூங்கலோசையும் வேறு வேறானவை. எழுச்சியும், விரைவுமின்றிக் கனத்ததும் நீண்டதுமான ஓசையுடையது தூங்கலோசை. தூங்கிசை என்பது செப்பலோசை. அகவலோசைகளுக்குள் அடங்கியதாய் அவைகளின் விகற்பமாய் நிகழும் இயல்பினது.

3. துள்ளலோசை:

(1) ஏந்திசைத் துள்ளலோசை
(2) அகவல் துள்ளலோசை
(3) பிரிந்திசைத் துள்ளலோசை

4. தூங்கலோசை :

(1) ஏந்திசைத் தூங்கலோசை
(2) அகவல் தூங்கலோசை
(3) பிரிந்திசைத் தூங்கலோசை

குறிப்பு : அகவலோசையும், அகவல் துள்ளல் ஓசையும் வேறு வேறானவை.

செப்பலோசை : இது வெண்பாவிற்குரிய ஓசை. வெண்டளையால் விளையும் ஓசை இது. "நானொன்று கூறுகின்றேன். கேட்பவர் கேளுங்கள்," என்பது போன்ற தொனியில் கூறல் செப்பலோசை.

அகவலோசை : இது ஆசிரியப்பாவிற்குரியது. ஆசிரியத்தளையால் ஏற்படும் ஓசை இது. இந்த ஓசையை அழைத்துக்கூறல் என்னலாம். ஒருவனை அழைத்து, உரையாடல் போன்றல்லாமல், விஷயத்தைப் பல படி விரித்து உரைத்தல் போன்றது அகவலோசை ஆகும்.

துள்ளலோசை : இது கலிப்பாவிற்குரிய ஓசை. ஓசை உயர்ந்தும் தாழ்ந்தும் துள்ளி நடக்கும் ஓசை துள்ளலோசை. கலித்தளையாலும், வெண்டளையோடு கலந்த கலித்தளையாலும், இடையிடையே பல தளைகள் விரவி வருவதாலும் இவ்வோசை ஏற்படும்.

தூங்கலோசை : வஞ்சிப்பாவிற்குரிய ஓசை இது. எழுச்சியும் விரைவுமின்றி இடையிடையே தாழ்ந்து ஒலிக்கும் ஓசையாகும். ஒன்றிய ஒன்றாத வஞ்சித்தளைகள் விரவி வருவதால் உண்டாகும் ஓசை தூங்கலோசை.

இனி இவ்வோசைகள் ஒவ்வொன்றிலுமுள்ள உட்பிரிவுகளைப் பார்ப்போம்.

செப்பலோசை :

ஏந்திசைச் செப்பலோசை—வெண்சீர் வெண்டளையால் வரும் ஓசை.

தூங்கிசைச் செப்பலோசை—இயற்சீர் வெண்டளையால் வருவது.

ஒழுகிசைச் செப்பலோசை—இயற்சீர், வெண்சீர் வெண்டளைகள் கலந்து வருவது

அகவலோசை :

ஏந்திசை அகவலோசை—நேரொன்றிய ஆசிரியத்தளையால் வருவது.

தூங்கிசை அகவலோசை—நிரையொன்றிய ஆசிரியத் தளையால் வருவது.

ஒழுகிசை அகவலோசை—இருவித ஆசிரியத் தளைகளும் கலந்து வருவது

துள்ளலோசை :

ஏந்திசைத் துள்ள லோசை—கலித்தளையால் வருவது.

அகவல் துள்ளலோசை—வெண்சீர் வெண்டளையும் கலித்தளையும் விரவி வருவது.

பிரிந்திசைத் துள்ளலோசை—கலித்தளையோடு பிற தளைகளும் விரவி வருவது.

தூங்கலோசை :

ஏந்திசைத் தூங்கலோசை—ஒன்றிய வஞ்சித் தளையால் வருவது.

அகவல் தூங்கலோசை—ஒன்றாத வஞ்சித் தளையால் வருவது.

பிரிந்திசைத் தூங்கலோசை—இருவித வஞ்சித் தளை களும் விரவி வருவது.

குறிப்பு : ஒலி, ஓசை, என்பவை ஒரு பொருளுடைய பல சொற்கள். திருக்குறள், நளவெண்பா, நன்னெறி, நல்வழி நீதிநெறி விளக்கம் ஆகியவை செப்பலோசையுடைய வெண் பாக்கள். புறநானூறு, அகநானூறு, குறுந்தொகை, நற்றிணை, மணிமேகலை ஆகியவை அகவலோசையுடைய ஆசிரியப்பாக்கள். கலிப்பாவிலோ, கலித்தொகை என்னும் நூல் தவிர வேறு நூலில்லை. கலித்தொகையோடு, கலம் பகங்களின் முதல் செய்யுளாய் வரும் கலிப்பாக்களுந்தான் இப்பொழுது கிடைக்கக் கூடியன. தூங்கலோசைக்கு இடனாயது வஞ்சிப்பா. நிறையீற்று மூவசைச் சீர்களும், நான்கசைச் சீர்களுங் கொண்டு குறளடி, சிந்தடிகளால் நடப்பது வஞ்சிப்பா.

செப்பலோசை, அகவலோசை, துள்ளலோசை, தூங்கலோசை என்னும் நான்குவித ஓசைகளுக்கு ஏற்பச் செய்யுள்களும் நான்குவித அமைப்பினை உடையனவா கின்றன. வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா என்பவை அவை. இந் நான்குஞ் சிறப்புடைய பாக்களாகக் கருதப்படுகின்றன. இவைகளல்லாமல் செப்பலோசையை முதலிலும், அகவலோசையை இறுதியிலும் பெற்று நடக்கும் பாவும் சிலவுள. இத்தகைய பாவினை மருட்பா என்பர். அது அத்துணைச் சிறப்புடைய பாவாகக் கருதப் படுவதில்லை. ஆகவே பாக்கள்,

1. வெண்பா 3. கலிப்பா
2. ஆசிரியப்பா 4. வஞ்சிப்பா

என நான்கு வகைப்படும். மருட்பா என்னும் சிறப்பில் பாவையும் சேர்த்துப் பாக்கள் ஐவகையின என்றுங் கொள்வதுண்டு.

இப்பாக்கள் செய்யுள்களின் ஒருவகைப் பிரிவு. மற்றோர் வகைப் பிரிவும் உளது. அதைப் பாவினம் (பா-இனம்) என்று வழங்குவர். இப்பாவினம் தாழிசை, துறை, விருத்தம் என மூன்று வகைப்படும். இப் பாவினங்கள், பாக்களின் இலக்கணத்தை முற்றிலும் பெறாது போயினும், ஒருவாறு அவைகளை ஒத்து நடப்பதால், இப்பெயர் பெற்றனபோலும்! மருட்பாவிற்கு இனம் இல்லை. மற்றவை, தனித்தனி, "தாழிசை, துறை, விருத்தம்" என்னும் மூவகை இனங்களை உடையவை. அவைகளாவன :

1. வெண்டாழிசை (வெண்-தாழிசை)

2. வெண்டுறை (வெண்-துறை)

3. வெளிவிருத்தம்-இம்மூன்றும் வெண்பா என்னும் பாவைச் சேர்ந்தவை.

1. ஆசிரியத்தாழிசை

2. ஆசிரியத்துறை

3. ஆசிரியவிருத்தம்-இம்மூன்றும் ஆசிரியப்பா என்னும் பாவைச் சேர்ந்தவை.

1. கலித்தாழிசை

2. கலித்துறை

3. கலிவிருத்தம் - இம் மூன்றும் கலிப்பா என்னும் பாவைச் சேர்ந்தவை.

1. வஞ்சித்தாழிசை

2. வஞ்சித்துறை

3. வஞ்சி விருத்தம்-இம் மூன்றும் வஞ்சிப்பா என்னும் பாவைச் சேர்ந்தவை.

கற்பவர்க்கும் கேட்பவர்க்கும் நற்பயன் விளைக்கும் விஷயங்களைக் கொண்டதாய், இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல், என்னும் நால்வகைச் சொற்களானும், வித்தகப் பெரியோர்களால் எதுகை, மோனை, முரண் முதலிய தொடைகளும், தன்மை, நவிற்சி, உவமை, உருவகம் முதலிய அணிகளும் அமையச் செய்யப்பட்டது செய்யுள் என்பர். நால்வகைப் பாவும், பன்னிரு பாவினங்களும் சேர்ந்து செய்யுள் வகை பதினாறு ஆகும். மருட்பாவையும் சேர்த்துப் பதினேழாகவும் கொள்ளலாம்.




மேலே குறித்த படம் பாவையும் பாவினப் பிரிவுகளையும் கற்றோர் மறவாமல் காத்துக்கொள்ள உதவும். மருட்பா என்னும் சிறப்பில் பா, இனம் பெறுவதில்லை.

## 2. வெண்பா

ஓசைக்கு ஏற்றபடி செய்யுள்கள் நான்கு வகை அமைப்பினை உடையனவாகின்றன என்றும், அவைதாம், வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா என்பவை என்றும் முன்னரே கூறியுள்ளோம். இந் நால்வகைப் பாக்களில் வெண்பா என்பது பாக்களில் சிறந்ததாகக் கருதப் படுகின்றது. இனி, நாம் இவ்வெண்பாவின் இலக்கணத்தைப் பார்ப்போம்.

பாலன் தனதுருவா யேழுலகுண் டாலிலையின்
மேலன்று கண்டுயின்றாய் மெய்யென்ப—ராலன்று
வேலைநீ ருள்ளதோ விண்ணதோ மண்ணதோ
சோலைசூழ் குன்றெடுத்தாய் சொல்.

என்பது ஒரு வெண்பா.

[சோலை சூழ்ந்த கோவர்த்தன மலையை எடுத்தவனே நீ பாலனாய் உருவெடுத்து ஏழுலகத்தையும் உண்டு ஆலிலையின்மேல் அந்நாள் துயின்றாய் என்பது உண்மையென்று உலகத்தார் உரைக்கின்றனர். ஆனால் அந்த ஆலிலை அன்றைய தினம் கடலிலா, ஆகாயத்திலா அல்லது பூமியிலா, எங்கிருந்தது சொல் !—(உலகமெல்லாம் உன் வயிற்றுள் அடங்கியது என்றால் அந்த ஆலிலை மாத்திரம் எப்படி உனக்குப் புறத்ததாய் இருக்க இயலும்!) என்பது பாசுரப் பொருள். ]

இச் செய்யுளை வாய்பாட்டில் வரைவோமாயின், அப்பொழுது,

" தேமா கருவிளங்காய் கூவிளங்காய் கூவிளங்காய்
தேமாங்காய் கூவிளங்காய் தேமாங்காய்-தேமாங்காய்
கூவிளம் கூவிளம் கூவிளம் கூவிளம்
கூவிளம் கூவிளங்காய் நாள், "

என்று நிற்கும்.

" நற்கொற்ற வாயி லுறுங்குவளைத் தார்கொண்டு
சுற்றும்வண் டார்ப்பப் புடைத்தானே – பொற்றேரான்
பாலைநல் வாயின் மகள் "

என்ற இதுவும் ஒரு வெண்பாவே. இதை நேயர்கள் வாய் பாட்டில் வரைந்து கொள்ளல் நலம்.

" பருவரலும் பைதலுங் காணான்கொல் காமன்
ஒருவர்க ணின்றொழுகு வான் "

என்பதும் ஒரு வெண்பாவே.

மேலே காட்டிய உதாரணச் செய்யுள்களை ஆராய்ந்து பாருங்கள். அவைகளில் அமைந்துள்ள தளைகள் எல் லாம் வெண்டளைகளாக இருக்கக் காணலாம். ஓரடியின் கண்ணுள்ள சீர்களன்றி ஒவ்வொரு அடியின் ஈற்றுச்சீரும், அடுத்த அடியிலுள்ள முதல் சீருங்கூட வெண்டளை பெற்று நடக்கக் காண்பீர். எனவே, வெண்பாவில் வெண்டளை தவிர வேறு எவ்வகைத் தளைகளும் வரக் கூடாது என்பது தெரிய வரும்.

மேலும், செய்யுள்களின் ஈற்றடியைப் பாருங்கள். மற்ற அடிகள் நான்கு சீர்களைக் கொண்ட அளவடிகளா யிருக்க, ஈற்றடி மாத்திரம் மூன்று சீர்களைக்கொண்ட சிந் தடியாய் இருக்கின்றது. எனவே, வெண்பாவின் ஈற்றடி எப்பொழுதும் சிந்தடியாக இருக்கவேண்டும்.

மீண்டும், ஈற்றடியின் ஈற்றுச்சீரைப் பாருங்கள். முதல் செய்யுளின் ஈற்றுச்சீர், சொல் என்ற ஓரசைச்சீரால் முடிந்துளது. இரண்டாவது செய்யுளின் ஈற்றுச்சீர் மகன் என்பது மூன்றாவது செய்யுளின் ஈற்றுச்சீர் வான் என்பது. வெண்பாவின் ஈற்றில் நிற்கும் அசைச்சீர் நேரசையாயின், அதை நாள் என்ற வாய்பாட்டாலும், நிரையசையாயின் அதை மலர் என்ற வாய்பாட்டாலும் வழங்குவர்

வெண்பாவின் ஈற்றுச்சீர், காடு, புரண்டு, அழுது, கதவு, மலைவு என்றும் நிற்பதுண்டு. கதவு, மலைவு என்பவை தவிர மற்றவை குற்றியலுகரச் சொற்கள். இவ்வாறு ஒலி குறைந்த உகரத்தை ஈற்றிலுடைய ஈரசைச் சீர்களை ஆன்றோர் ஓரசைச் சீர்களாகவே கொள்கின்றனர். நாள், மலர் என்பவைகளினின்று இவைகளை வேறு பிரித்துக் காட்டும் பொருட்டுக் குற்றியலுகரத்தை ஈற்றிலுடைய நேரசைச் சீரை நேர்பு என்றும், நிரையசைச் சீரை நிரைபு என்றும் அழைக்கின்றனர். கதவு என்பதின் ஈற்று உகரம் முற்றியலுகரமாயினும் அதுவும் நிரை அசையாகவே கொள்ளப்படுகின்றது. நேர்பு அசையைக் காசு என்றும், நிரைபு அசையைப் பிறப்பு என்றும் அழைப்பர். இனி நாமும் அவ்வாறே அழைப்போம்.

ஆகவே, வெண்பாவிற்குரிய பொது இலக்கணம் வருமாறு :

1. வெண்டளை தவிர வேறுவகைத் தளை வெண்பாவில் வரலாகாது.

2. ஈற்றடி முச்சீர்களாலான சிந்தடியாகவும், ஏனைய அடிகள் நான்கு சீர்களாலான அளவடிகளாகவும் இருக்க வேண்டும்.

3. ஈற்றடியின் ஈற்றுச்சீர், நாள், மலர்; அல்லது காசு, பிறப்பு என்னும் வாய்பாடுகள் ஒன்றினால் ஆனதா யிருக்க வேண்டும்.

4. செப்பலோசை பாவில் அமைந்திருக்க வேண்டுவது அவசியம்.

5. ஒரு வெண்பாச் செய்யுள், இரண்டு, மூன்று, நான்கு அடிகளையும், அதற்கு அதிகமான அடிகளையும் கொண்டதாக இருக்கலாம். எடுத்துக் காட்டாக மேலே காட்டப்பெற்ற வெண்பாக்கள் இரண்டு, மூன்று, நான்கு அடிகளால் அமைந்தவை.

6. ஓரசைச் சீர்களும், ஈரசைச் சீர்களும் மூவசைச் சீர்களில் சிலவும் வெண்பாவில் வரக்கூடிய சீர்கள். ஓரசைச்சீர் வெண்பாவின் ஈற்றில் இடம் பெறும். மற்ற விடங்களில் அது வாராது.

7. தேமா, கருவிளம், கூவிளம், புளிமா என்ற நால் வகை இயற்சீர்களும் (ஈரசைச் சீர்களும்) வெண்பாவில் வரும். ஈற்றுச்சீர் இயற்சீராயின், அது தேமா (காசு), புளிமா (பிறப்பு) என்ற சீர்களாய் இருக்கும். கருவிளம் கூவிளம் என்ற சீர்கள் ஈற்றில் இடம் பெறா. (குற்றியலு கரத்தை ஈற்றிலுடைய காசு, பிறப்பு என்னும் இயற்சீர்கள் அசைச்சீர்களாகக் கருதப்படுகின்றன என்றும், சில போது அது முற்றியலுகரத்தையும் ஈற்றில் கொண்டு நிற்பதுண்டு என்றும் முன்னரே கூறியுள்ளோம்.)

8. மூவசைச் சீர்கள் எட்டில், தேமாங்காய், புளிமாங் காய், கருவிளங்காய், கூவிளங்காய் என்னும் நேரசையை ஈற்றிலுடைய மூவசைச் சீர்களே வெண்பாவில் வரும். எனவேதான், காய்ச்சீர்களுக்கு வெண்பா வுரிச்சீர் அல்லது வெண்சீர் என்ற பெயர் வரலாயிற்று.

9. தேமாங்கனி, புளிமாங்கனி, கருவிளங்கனி, கூவிளங்கனி, என்னும் கனிச் சீர்களும் பொதுச் சீர் என்று அழைக்கப்பெறும் நாலசைச் சீர்களும் வெண்பாவில் வாரா.

மேலே கூறிய விதிகளுக்கு இணங்கி அமைவது வெண்பா. ஒரு வெண்பாவில் எல்லாவித இயற்சீர்களும் வரலாம். அல்லது, ஈற்றுச்சீர் தவிர மற்றெல்லாச் சீர்களும் வெண்சீராயிருக்கலாம். அல்லது, இருவகைச் சீர்களும் கலந்து வரலாம். நூல்களில் பெரும்பாலும், இருவகைச் சீர்களுங் கலந்தே வருகின்றன.

தளைகளில், வெண்டளை தவிர வேறு தளைகள் வெண்பாவில் வரலாகாது என்பதை நேயர்கள் மறத்தலாகாது.

வெண்டளையால் விளைவது செப்பலோசை. இது வெண்பாவிற்குரிய ஓசை. இவ்வோசை, ஏந்திசைச் செப்பலோசை, தூங்கிசைச் செப்பலோசை, ஒழுகிசைச் செப்பலோசை, என்று சீர், தளைகளின் தன்மைக்கு ஏற்றபடி வேறுபடும்.

1. வெண்பாவின் எல்லாச் சீர்களும் வெண்சீராயின் அமையுந்தளை வெண்சீர் வெண்டளை வெண்சீர் வெண்டளையால் விளைவது ஏந்திசைச் செப்பலோசை ஆகும்.

2. வெண்பாவின் எல்லாச்சீர்களும் இயற்சீராயின் அமைவது இயற்சீர் வெண்டளை- இயற்சீர் வெண்டளையால் விளைவது தூங்கிசைச் செப்பலோசை ஆகும்.

3. இயற் சீரும் வெண்சீரும் விரவிவரின், இருவிதத் தளைகளும் பாவில் அமையும். அவ்வாறு அமைவதால் விளையுந்தளை ஒழுகிசைச் செப்பலோசை ஆகும்.

ஆகவே, இயற்சீர்களேனும், வெண்சீர்களேனும் பெற்று, வெண்டளை பிறழாமல், அளவடிகள், இரண்டு மூன்று, நான்கு, அல்லது பலவடிகள் பெற்றதாய், ஈற்றடி சிந்தடியாகி, அவ்வடியும் நாள், மலர்: அல்லது காசு, பிறப்பு என்னும் வாய்பாடுகள் ஒன்றினால் முடியும் செய்யுள் செப்பலோசை சிறந்திசைக்கும் வெண்பா ஆகின்றது.

வெண்பாவிற்குரியதான செப்பலோசையின் விகற்பங்களை — அவை மிக மிக நுண்ணியவாதலால் — எழுதி புணர்த்தல் எளிதன்று. பெரும் புலவர்களால் பாடப்பெற்ற நல்ல வெண்பாக்களை வாய்விட்டு அடிக்கடி ஓதிப் பழகினாலன்றி ஒலி வேறுபாடுகளைப் புரிந்து கொள்ள முடியாது. எனினும், ஓதுவாருக்கு உதவியாகும் பொருட்டு ஒலி விகற்பங்களை யாம் அறிந்தபடி சிறிது விளக்குவோம் ஏந்திசைச் செப்பலோசை: வெண்சீர் வெண்டளையால் விளையும் ஓசை இது. ஒரு விஷயத்தை எடுத்துக்கூறி, "ஐய, இதனை நீ உணர்ந்து கொள்க", என்பது போன்ற தொனியது இவ்வோசை. இவ்வோசைக்கு இடனாகிய வெண்பாவில் பெரும்பாலும் சொற்கள் ஒன்றையொன்று தொடர்ந்து ஒரு கருத்தைச் செலுத்திக் கொண்டு போகும். உதாரணமாகப் புகழேந்தியார் செய்யுள் ஒன்றை எடுத்துக் கொள்வோம்.

மற்றொடுத்த தோள்பிரிந்து மாயாத வல்வினையேன்
பெற்றெடுத்த நன்மக்காள் போந்தேகும் கொற்றவனை
நீரேனுங் காண்குதிரோ வென்றழுதா ணின்குழற்குக்
காரேனு மொவ்வாதாள் நைந்து.

என்பது ஒரு நளவெண்பாச் செய்யுள். எல்லாச் சீர்களும் வெண்சீராய் அமைய வேண்டிச் சொற்கள் சிலவற்றை மாற்றியுள்ளோம். இச் செய்யுளில் வெண்சீர் வெண்டளைகளால் ஏந்திசைச் செப்பலோசை அமைந்திருப்பது செய்யுளை வாய்விட்டு ஓதிப் பார்த்தால் புலப்படும்

விஷயத்தை எடுத்துத் தொடர்ச்சியாய்க் "கேட்பவர் கேண்மின்" என்ற தொனியில் எடுத்துக் கூறுவது போன்ற ஓசை வாய்ந்திருப்பது தெரியவரும்.

தூங்கிசைச் செப்பலோசை : இயற்சீர் வெண்டளையால் விளையும் ஓசை இது. இது ஏந்திசைபோல் தொடர்ந்து ஒலிப்பதின்றி, இடையிடையே தாழ்ந்து தாழ்ந்து ஒலிக்குந் தன்மையது. கூறவரும் விஷயம் ஒன்றேயாயினும், தொடர்புடைய வேறு கருத்துக்கள் சேர வருங்கால், இரண்டிற்கும் இடையில் ஒலி தூங்கி நடப்பதாகும், இத் தூங்கல் ஓரடிக்கும் மற்றோரடிக்கும் இடையிலேனும், அல்லது சீர்களுக்கு இடையிலேனும் நேரலாம். இரண்டொரு உதாரணங்களைப் பார்ப்போம்,

" கேட்டினு முண்டோ ருறுதி கிளைஞரை
நீட்டி யளப்பதோர் கோல்,"

என்ற குறள் வெண்பா இயற்சீர் வெண்டளைகளினாளாயது இதை ஓதிப் பாருங்கள். ஒன்றை எடுத்தியம்பும் செப்பலோசையும், அது இடையிடையே தாழ்ந்து ஒலிப்பதும் புலப்படும். உறுதி கிளைஞரை என்னுமிடத்தில் ஒலி தூங்கி, அல்லது தாழ்ந்து ஒலிப்பதை ஓதிப் பழகிய செவி உணரும்.

" வேட்ட பொழுதி னவையவை போலுமே
தோட்டார் கதுப்பினா டோள்,"

என்பதில், முதலடிக்கும் இரண்டாவது அடிக்கும் இடையில் ஓசை சிறிது தூங்கி நடப்பது காண்க.

" மதியு மடந்தை முகனுமறியாப்
பதியிற் கலங்கிய மீன்."

என்பதில், ஒவ்வொரு சீரின் இடையிலும் ஒலி தூங்கித் தூங்கி ஒலிப்பது, வாய்விட்டு ஓதிப் பார்த்தால் புலப்படும்.

**ஒழுகிசைச் செப்பலோசை :** இருவகை வெண்டளைகள் விரவி வருவதால் விளையும் ஓசை இது. இவ்வொழு கிசை, ஏந்திசைக்கும் தூங்கிசைக்கும் இடையதான ஓசையை உடையது. வெண்பா நூல்களில் வரும் செய்யுள்கள் பெரும்பாலும் ஒழுகிசைச் செப்பலோசை பெற்றே நடக்கும்.

"பகச் சொல்லிக் கேளிர் பிரிப்பர் நகச் சொல்லி
நட்பாட லேற்றா தவர்,"

என்னுமிக் குறள் வெண்பாவில் இருவகை வெண்டளை களும் விரவி வந்து ஒழுகிசைச் செப்பலோசை இசைப்பது காண்க.

மன்னனு மாசறக் கற்றோனுஞ் சீர்தூக்கின்
மன்னனிற் கற்றோன் சிறப்புடையன்—மன்னற்குத்
தன்றேச மல்லாற் சிறப்பில்லை கற்றோற்குச்
சென்றவிட மெல்லாஞ் சிறப்பு.

என்னும் இம்மூதுரை வெண்பாவில் இருவகை வெண் டளைகளும் வந்து, ஒழுகிசைச் செப்பலோசை விளைந் திருப்பது காண்க.

இந்த நுட்பமான ஒலி விகற்பங்களை ஓதிப் பழகிய செவியால் சோதித்து உணரவேண்டும் உதாரணமாக ஒரு குறட்பாவை எடுத்துக்கொள்வோம்.

"காதல ரில்வழி மாலை கொலைக்களத்
தேதிலர் போல வரும்."

என்னும் இப்பா இயற்சீர் வெண்டளை பெற்றுத் தூங்கிசைச் செப்பலோசை உடையதாகும். இதையே,

"காதலர்தா மில்லாயின் புன்மாலை கொல்களத்துள்
ஏதிலர்போல் வந்திடுமா லின்று,"

என்று வெண்சீர் வெண்டளை வருமாறு மாற்றி அமைத்தால், ஓசை ஏந்திசைச் செப்பலோசையாக மாறும். மீண்டும் இதையே,

"காதல ரில்வழி யிம்மாலை கொலைகளத்
தேதிலர்போற் கொல்வான் வரும்"

என்று இருவகை வெண்டளைகளும் வரும்படி மாற்றி அமைத்தால் ஒழுகிசைச் செப்பலோசையாய் ஒலி மாறி விடும்.

குறிப்பு: பாவில் ஏந்திசையும் தூங்கிசையும் பிறப்பதற்கு பா முழுவதும் வெண்சீர் வெண்டளையோ, இயற்சீர் வெண்டளையோ பெற்றிருக்க வேண்டும் என்பதில்லை. இருவகைத் தளைகளும் கலந்துவரும் வெண்பாவில், இயற்சீர் வெண்டளை மிகுதியாயின் தூங்கிசையும், வெண்சீர் வெண்டளை மிகுதியாயின் ஏந்திசையும், முறையே பாவில் சிறந்தொலிக்கும். எனவே, வெண்டளை வகைளின் மிகுதி பற்றியே ஓசை நிர்ணயம் செய்யப்படுகின்றது.

"மிக்கோ னுலகளந்த மெய்யடியே சார்வாகப்
புக்கோ ரருவினைபோற் போயிற்றே—யக்காலம்
கானகத்தே காதலியை நீத்துக் கரந்துறையும்
மானகத்தேர்ப் பாகன் வடிவு."

என்னும் இவ்வெண்பாவில் இயற்சீர் வெண்டளை நான்கு. மற்றவை வெண்சீர் வெண்டளை. எனவே இதில் ஏந்திசை சிறந்தொலிப்பது காண்க.

"சந்தக் கழற்றா மரையுஞ் சதங்கையணிப்
பைந்தளிரு நோவப் பதைத்துருகி—யெந்தாய்
வடந்தோய் களிற்றாய் வழியான வெல்லாங்
கடந்தோமோ வென்றார் கலுழ்ந்து."

என்பதில் வெண்சீர் வெண்டளை ஐந்து. மற்றவை இயற்சீர் வெண்டளை. எனவே தூங்கிசை இதில் சிறந்திசைப்பது காண்க.

“ செப்பிளங் கொங்கைமீர் திங்கட் சுடர்பட்டுக்
கொப்புளங் கொண்ட குளிர்வானை—யிப்பொழுதும்
மீன்பொதிந்து நின்ற விசும்பென்ப தென்கொலோ
தேன்பொதிந்த வாயாற் றெரிந்து ”

என்பதில் இருவகைத் தளைகளும் சமமாய் விரவி வந்துள தால், இது ஒழுகிசையின் பாற்படும்.

இதுவரை வெண்பாச் செய்யுளின் அமைப்பினிற்குரிய விதிகளைப் பார்த்தோம். வெண்பாக்கள், அடிகளின் எண்ணிக்கையாலும், தொடைகளின் விகற்பங்களாலும், ஒலி வேறுபட்டாலும்,

1. குறள் வெண்பா (2 அடி)
2 சிந்தியல் வெண்பா (3 அடி)
3. அளவியல் வெண்பா (4 அடி)
4. பஃறொடை வெண்பா (பல அடிகள்)

என்று நான்கு வகைப்படுகின்றன. இனி, இவற்றை ஒவ்வொன்றாய் எடுத்துக்கொண்டு, அவற்றிற்குரிய இலக்கணத்தை விளக்குவோம்.

குறிப்பு: 12 அடிகளுக்கு மிக்கதைக் கலிவெண்பா என்று சொல்வதுண்டு. பின்னர் விளக்குவோம்.

## குறள் வெண்பா

வெண்பாவிற்குரிய இலக்கணங்கள் பெற்று இரண்டு அடிகளால் அமைந்து நடப்பது குறள் வெண்பா. இரண்டு

சீர்களைக் கொண்ட அடியைக் குறளடி என்பதுபோல், இரண்டடிகளாலான வெண்பாச் செய்யுளைக் குறள் வெண்பா என்று அழைக்கின்றனர். வெண்பாவின் ஈற்றடி சிந்தடியாய் இருக்கவேண்டும் என்பது விதி. அவ்வடியின் ஈற்றுச் சீரும் நாள், மலர்; அல்லது காசு, பிறப்பு என்ற வாய்பாடுகளில் ஒன்றைப் பெற்றிருக்க வேண்டும். இவ்வாறு அமைந்திருப்பது வெண்பா ஆகின்றது.

"ஊடுதல் காமத்திற் கின்ப மதற்கின்பங்
கூடி முயங்கப் பெறின்,"

என்பது, ஒரு குறள் வெண்பா திருக்குறள் நூலின் கண்ணுள்ள 1330 பாக்களும் குறள் வெண்பாக்களே.

குறள் வெண்பா ஒரு விகற்பத்தாலும் வரலாம். அடி தோறும் எதுகை மோனை முதலிய தொடை பெற்று வருவதை ஒரு விகற்பம் எனவும், அடித் தொடையொன்றும் பெறாமல் வருவதை இருவிகற்பம் என்றும் வழங்குவர். எனவே, இவ்விகற்பம் தொடையின் வேறுபாட்டைப் பற்றி நிகழ்வதாகின்றது.

"மனைத்தக்க மாண்புடைய ளாகித்தற் கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை."

இதனில், (ம - வ) அடிமோனையாக வந்துளது. மூன்றாவது எழுத்தான த் என்பது அடிகளில் ஒன்றியிருப்பதால் அடியெதுகையும் பெற்றிருப்பதாகவும் கொள்ளலாம். எனவே, இது ஒரு விகற்பத்தால் வந்த குறள் வெண்பா.

"அரும்பய னாயு மறிவினார் சொல்லார்
பெரும்பய னில்லாத சொல்."

இது அடி எதுகை பெற்றுளது. எனவே, ஒரு விகற்பத்தால் வந்த குறள் வெண்பா.

"கடிவான் நுதன்மடவாள் சொல்லுங் கரும்பு
கதிர்வளைத் தோளுங் கரும்பு."

அடிமோனையோடு அடி இயைபும் பெற்றிருப்பதால் ஒரு விகற்பத்தால் வந்த குறள் வெண்பா.

"அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய
நூலின்றிக் கோட்டி கொளல்."

"உருவுகண் டெள்ளாமை வேண்டு முருள்பெருந்தேர்க்
கச்சாணி யன்னா ருடைத்து."

என்பவற்றில் அடித்தொடைகள் இல்லாமை காண்க. எனவே அவை, இருவிகற்பத்தால் வந்த குறள் வெண்பாக்கள்.

அடித்தொடையினால் அமைகின்ற ஒரு விகற்பக் குறள் வெண்பாவை, இனக்குறள் வெண்பா என்றும், அடித்தொடை பெறாத அடிகளையுடைய இரு விகற்பக் குறள் வெண்பாவை விகற்பக்குறள் வெண்பா என்றும் அழைப்பதுண்டு. செந்தொடையாலான குறள் வெண்பாவும் விகற்பக் குறள் வெண்பாவில் அடங்கும்.

குறள் வெண்பா என்பது, குறட்டாழிசை, குறள் வெண் செந்துறை என்ற இரு இனங்களை உடையது. அவற்றைப் பின்னர்க் கருதுவோம்.

## சிந்தியல் வெண்பா

வெண்பாவிற்குரிய இலக்கணங்கள் எல்லாம் பெற்று மூன்று அடிகளுடையதாய் நடப்பது சிந்தியல் வெண்பா. அதாவது முதலிரண்டு அடிகள் அளவடிகளாகவும், மூன்றாவது அடி சிந்தடியாகவும் இருக்க வேண்டும்.

சிந்தியல் வெண்பாவும், குறள் வெண்பாவைப் போல், தொடை யமைப்பிற்கு ஏற்றவாறு ஒரு விகற்பத்தாலும், இருவிகற்பத்தாலும், பல விகற்பங்களாலும் வரலாம்.

நறுநீல நெய்தலும் கொட்டியுந் தீண்டப்
பிறநாட்டுப் பெண்டிர் முடிநாறும் பாரி
பறநாட்டுப் பெண்டி ரடி

இப்பாவின் மூன்றடிகளும் எதுகை பெற்றுள்ளது. எனவே, இது ஒரு விகற்பத்தால் வந்த சிந்தியல் வெண்பா.

கம்பக் கடாக் களிற்றின் கபாயணிந்த
அம்பொற் புயத்தார்க் கமைந்தா—லம்பை
முலையானைக் கோடணிந்த மார்பு.

இப்பாவின் முதலிரண்டு அடிகளும் எதுகை பெற்று ஒரு விகற்பமாயும், மூன்றாவது அடி எதுகை பெறாமல் மற்றோர் விகற்பமாயும் அமைந்திருப்பதால், இது இரு விகற்பத்தால் வந்த சிந்தியல் வெண்பா.

முல்லை முறுவலித்துக் காட்டின மெல்லவே
சேயிதழ்க் காந்த டுப்பின்ற போயினுர்
திண்டேர் வரவுரைக்குங் கார்

இதன் மூன்றடிகளும் தொடை பெறாமல் விகற்பித்து நிற்பதால், இது பல விகற்பத்தால் வந்த சிந்தியல் வெண்பா.

இச் சிந்தியல் வெண்பா, இன்னிசைச் சிந்தியல் வெண்பா என்றும், நேரிசைச் சிந்தியல் வெண்பா என்றும் இருவகைப்படும்.

நல்லார் குறவால் நலம்பெறுகுந் நாடோறும்
அல்லார் குறவா லறந்தேயும்—பொல்லார்
தொடர்விடுதல் மேலாந் துணை.

என்ற பாவை எடுத்துக் கொள்வோம், இதில் முதலிரண்டடிகள் எதுகை பெற்றும், மூன்றாவது அடி எதுகை பெறாமல் விகற்பித்தும் நிற்கின்றன. எனவே இது இரு விகற்பச் சிந்தியல் வெண்பா.

இதன் இரண்டாவது அடியை எடுத்துக்கொள்வோம். இரண்டாவது அடியின் அல்லார் என்னும் முதற்சீரும், பொல்லார் என்னும் ஈற்றுச்சீரும் (நான்காவது சீரும்) ஒரூஉ எதுகை பெற்றுளது.

பொல்லார் என்ற ஈற்றுச்சீர், அதற்கு முன் சீரான மூன்றாஞ் சீரோடு ஒலித்தொடர்பினால் இணையாது விட்டிசைத்து நிற்பது, பாவை ஓதிப் பார்த்தால் தெரிய வரும், விட்டிசைக்குங் காரணத்தால் அது தனிச்சொல் என்ற பெயர் பெறுவதாயிற்று. முதலிரண்டு அடிகளில் தொடர்ந்து வரும் பொருளின் தொடர்ச்சி சிறிது குன்றவும், மூன்றாமடியின் பொருளைத் துவக்கவும் தனிச்சொல் ஆதாரமாகின்றது. தனிச் சொல்லைத் தனிச்சீர் என்றும் கூறுவர். தனிச் சொல் என்று அது பெயர் பெற்றிருப்பினும் அச்சீரில் ஒன்றிற்கு மேற்பட்ட சொற்களும் இருக்கலாம்.

இரண்டாமடியில் தனிச்சொல் பெற்று மூன்றடிகளால் நடக்கும் இப்பா, இருவிகற்பத்தால் வந்த நேரிசைச் சிந்தியல் வெண்பா. பொல்லார் என்பது தனிச்சொல் என்று காட்டுவதற்குத்தான். அதற்கும், அதற்கு முந்தியதான மூன்றாஞ்சீருக்கும் இடையில் கோடிட்டுப் பிரித்துக் காட்டுகின்றனர்.

தனிச்சொல் இரண்டாவது அடியின் முதற்சீரோடு ஒரூஉ எதுகை பெற்றிருத்தல் அவசியமாகும். இவ்வாறு தனிச்சொல் பெற்று, ஒரு விகற்பத்தாலேனும், இரு விகற்பத்தாலேனும் வரும் மூன்றடி வெண்பாவை நேரிசைச் சிந்-

தியல் வெண்பா என்பர். பல விகற்பத்தால் வருதல் கூடாது.

மேலே கூறப்பெற்ற விதிகளுக்கு அடங்காமல் மூன்றடிகளால் நடக்கும் வெண்பாக்களை எல்லாம் இன்னிசைச் சிந்தியல் வெண்பா என்று கொண்டுவிடலாம். அதன் இலக்கணம் வருமாறு :

1. பாவின் அடிகளில் தனிச் சொல் பெறாமல், ஒரு விகற்பத்தாலேனும் இரு விகற்பத்தாலேனும், பல விகற்பத்தாலேனும் வரலாம்.
2. பாவின் முதலடியில் ஒரூஉ எதுகையுடைய தனிச் சொல் பெற்று ஒரு விகற்பத்தாலேனும், இரு விகற்பத்தாலேனும், பல விகற்பத்தாலேனும் வரலாம்.
3. முதல் இரண்டடிகளிலும் ஒரூஉ எதுகையுடைய தனிச்சொல் பெற்று, ஒரு விகற்பத்தாலேனும், இரு விகற்பத்தாலேனும், பல விகற்பத்தாலேனும் வரலாம்
4. இரண்டாமடியில் தனிச்சொல் நிற்பின் அப்பொழுது பா பல விகற்பங்களை உடையதாயிருக்க வேண்டும்.

இவ்விதிகளுக்குட்பட்டு நடக்கும் பாக்கள் இன்னிசைச் சிந்தியல் வெண்பா ஆகும். உதாரணமாகச் சில செய்யுள் களைப் பார்ப்போம்.

(1) "வழிமதுத்தார் மாறன் மணிவரைமேன் மாதர்
விழியெழுதி னாலுமிணை வெற்பெழுதி னாலும்
மொழியெழுத லாமோ மொழி."

இது தனிச்சொல் பெறாமல் ஒரு விகற்பத்தால் வந்த இன்னிசைச் சிந்தியல் வெண்பா.

" சோலை மலையழகர் தோண்மாலை காமுறுமுன்
மாலையா யாமமாய் வைகறையா யல்லிரவின்
றென்னே நீட் டித்த தேவன். "

இது, தனிச்சொல் பெறாமல் இரு விகற்பத்தால் வந்த இன்னிசைச் சிந்தியல் வெண்பா.

" முல்லை நகைத்தழைக்க வோகை முரல்வண்டு
தேன்பருகி வாழ்த்துரைக்குங் கார்காலஞ் சேர்ந்தக்கால்
வாராரோ நின்கோ மகன் "

இது, தனிச் சொல்லொன்றும் பெறாமல் பல விகற்பத்தால் வந்த இன்னிசைச் சிந்தியல் வெண்பா.

(2) " வெல்லார் விறல்பேசார் காமுறார்—நல்லன
கல்லாதார்ச் சீறார் கருத்தழிந்து கைசோரார்
நல்லார் நயந்த குணம். "

இது, முதலடியில் தனிச்சொல் பெற்று ஒரு விகற்பத்தால் வந்த இன்னிசைச் சிந்தியல் வெண்பா.

" சுரைதாழ வம்மி மிதப்ப வரையனைய
யானைக்கு நீத்துமுயற்கு நிலையென்ப
கானக நாடன் சுனை. "

இது, முதலடியில் தனிச்சொல் பெற்று இரு விகற்பத்தால் வந்த இன்னிசைச் சிந்தியல் வெண்பா.

" பதிமருண்டு பைத லுழக்கும்—மதிமருண்டு
மாலை படர்தரும் போழ்து மணியிழாய்
ஆற்றுவென் கொல் காமக் கனல். "

இது, முதலடியில் தனிச்சொல் பெற்றுப் பலவிகற்பத்தால், வந்த இன்னிசைச் சிந்தியல் வெண்பா.

(3) " முருகியம்போல் வானம் முழங்கும்—நெருங்கு
குருகிலை பூத்தன கானம்—மருங்கு
வருவார்கொ லெற்பிரிந்தோ ரின்று "

இது, முதலிரண்டடிகளிலும் தனிச்சொல் பெற்று ஒரு விகற்பத்தால் வந்த இன்னிசைச் சிந்தியல் வெண்பா

" வையக மெல்லாங் கழனியா—வையகத்து
செய்யகமே நாற்றிசையின் றேயங்கள்—செய்யகத்து
வான்கரும்பே தொண்டைமா நாடு. "

இது, முதலிரண்டடிகளிலும் தனிச்சொல் பெற்று இரு விகற்பத்தால் வந்த இன்னிசைச் சிந்தியல் வெண்பா.

" முல்லை முறுவலித்துக் காட்டின—மெல்லவே
சேயிதழ்க் காந்தள் துடுப்பீன்ற—போயினார்
திண்டேர் வரவுரைக்குங் கார். "

இது, முதலிரண்டடிகளிலும் தனிச்சொல் பெற்றுப் பல விகற்பத்தால் வந்த இன்னிசைச் சிந்தியல் வெண்பா.

(4) " நாணு நிறையு நறுநு தாஅ லாயிழையாள்
தந்தவெங் காமத் தழல்கதுவ—வெந்து
தருகடன்மா வெற்றந் தரும். "

இது, இரண்டாவதடியில் தனிச்சொல் பெற்றுளதேனும் பல விகற்பத்தால் வந்தமையின், இன்னிசைச் சிந்தியல் வெண்பா ஆகின்றது.

## அளவியல் வெண்பா

வெண்பா இலக்கணம் பெற்று இரண்டடியால் வருவதைக் குறள் வெண்பா என்றும், மூன்றடியால் வருவதைச் சிந்தியல் வெண்பா என்றும் அழைப்பது போல் நான்கடிகளால் வருவதை அளவியல் வெண்பா என்று

அழைக்கலாம். ஆனால் இலக்கண நூலார் அளவியல் வெண்பாவை வெண்பா என்றே அழைக்கின்றனர்.

இயற்சீர் நான்கும், வெண்சீர் (நேரீற்று மூவசைச் சீர்) நான்கும் வரப்பெற்று வெண்டளை பிறழாமல் செப்பலோசையுடையதாய், அளவடி மூன்றும், சிந்தடியொன்றுங் கொண்டு, நாள், மலர்; அல்லது காசு, பிறப்பு; என்னும் வாய்பாடுகளில் ஒன்றினுல் முடிகின்ற செய்யுள் வெண்பா ஆகும்.

அவ்வெண்பாவும் நேரிசை வெண்பா, இன்னிசை வெண்பா என்று இருவகைப்படும். வெண்பாவிற்குரியதான செப்பலோசை இளகிய தன்மை யுடையதாயின் இன்னிசையாகும். இறுகிய வன்மை யுடையதாயின் நேரிசையாகும். இந்த ஒலி வேறுபாட்டை ஓதிப் பழகியே உணரவேண்டும். நேரிசை, இன்னிசை என்ற ஒலி வேறுபாடுகளையுடைய வெண்பாக்களின் அமைப்பைக் கருதுவோம்.

### நேரிசை வெண்பா

பாவின் இரண்டாவது அடியில் தனிச்சொல் பெற்று, ஒரு விகற்பத்தாலேனும் இரு விகற்பத்தாலேனும் நான்கடிகளால் வரும் வெண்பா நேரிசை வெண்பா ஆகும். இறுகிய வன்மையை இதன் ஓசையில் காணலாம்.

வெண்பாவின் நாலடிகளும் ஒரே வகையான எதுகை பெற்றிருப்பின் ஒரு விகற்பம். முதலிரண்டடிகள் ஒருவித எதுகையும், பின்னிரண்டடிகள் வேறுவித எதுகையும் பெற்றிருப்பின் இரு விகற்பம். பாவின் இரண்டாவது அடி தனிச்சொல் பெற்றிருப்பினும், அது பல விகற்பமாய் வரின் (அதாவது எதுகையின்றி வரின்) நேரிசை வெண்பா ஆகாது. அது இன்னிசை வெண்பாவாய் விடும்.

"அங்கண் விசும்பி னகனிலாப் பாரிக்குந்
திங்களுஞ் சான்றோரு மொப்பர்மற்—றிங்கண்
மறுவாற்றுஞ் சான்றோரஃ தாற்றார் தெருமந்து
தேய்வ ரொருமா சுறின்."

என்ற வெண்பாவை நோக்குங்கள். இதன் இரண்டாமடி தனிச்சொல் பெற்று முதலிரண்டடி ஒருவகை எதுகை பெற்றிருப்பினும், பின்னிரண்டடிகள் எதுகையின்றி விகற்பித்து நிற்றலால், இவ்வெண்பா பல விகற்பமுடைய தாகின்றது. எனவே, இது இன்னிசை வெண்பா ஆகும். நேரிசை வெண்பா அன்று.

புகழேந்தியாரின் நளவெண்பாச் செய்யுள்கள் எல்லாம் நேரிசை வெண்பாக்கள். அனேகமாகச் செய்யுள்கள் எல்லாம் இரு விகற்பமுடையதாய் இருக்கக் காணலாம் எனினும்,

"மன்னன் விடுத்த வடிவிற் றிகழ்கின்ற
அன்னம்போய்க் கன்னி யருகணைய—தன்னுதலும்
தன்னாடல் விட்டுத் தனியிடஞ்சேர்ந் தாங்கதனை
என்னாடல் சொல்லென்றா ளிங்கு."

என்பதுபோல் நான்கடிகளும் ஒருவகை எதுகை பெற்று ஒரு விகற்பமுடையதாய் நடக்கும் சில வெண்பாக்களும் இருக்கலாம். சிறந்த நேரிசை வெண்பாக்கள் இரு விகற்பமுடையனவாகவே இருக்கும். ஒரு விகற்பத்தால் வரும் வெண்பாவைக் காட்டிலும், இரு விகற்பத்தால் வருவதே சிறப்புடைய வெண்பாவர்கக் கருதப்படுகின்றது. மூதுரை, நல்வழி, நன்னெறி என்ற நூல்களின் செய்யுள்கள் எல்லாம் இருவிகற்பத்தால் வந்த நேரிசை வெண்பாக்களே.

ஒரு விகற்பத்தாலும், இருவிகற்பத்தாலும் வரும் நேரிசை வெண்பாக்கள்,

1. இருகுறள் நேரிசை வெண்பா,
2. ஆசிடை நேரிசை வெண்பா,

என்று இருவகைப்படும். அவற்றின் இலக்கணத்தைப் பார்ப்போம்.

1. இரு குறள் நேரிசை வெண்பா :—

ஒரு வெண்பாவின் இரண்டாவது அடியிலுள்ள தனிச் சொல்லை நீக்கியபின், முதலிரண்டு அடிகளும் சேர்ந்து ஒரு குறள் வெண்பாவாக அமைய வேண்டும். அவ்வாறு அமையும் வெண்பாவை இணைக்குறள் நேரிசை வெண்பா என்பர். உதாரணமாக ஒரு செய்யுளை எடுத்துக் கொள்வோம்.

"கலைமதியி னொளியுங் கவிச்சுவையுஞ் கஞ்ச
மலரழகு மின்மணமுங் கொண்டு—சிலைமாரன்
கைம்மலரா லன்றிக் கழுத்தால் வகுத்தமைத்தான்
மொய்ம்மலர்ப் பூங்கோதை முகம்."

என்னுமிவ் வெண்பாவின் இரண்டாவது அடியிலுள்ள சிலைமாரன் என்ற தனிச் சொல்லை அகற்றின்

"கலைமதியி னொளியுங் கவிச்சுவையுஞ் கஞ்ச
மலரழகு மின்மணமுங் கொண்டு"

என்று ஒரு குறள் வெண்பாவாகும். குறள் வெண்பா விற்குரிய இலக்கணங்களை எல்லாம் இது பெற்றிருப்பது காண்க.

கைம்மலரா லன்றிக் கருத்தால் வகுத்தமைத்தான்
மொய்ம்மலர்ப் பூங்கோதை முகம்"

என்ற பின்னிரண்டடிகளுஞ் சேர்ந்து ஒரு குறள் வெண்பா வாகும். இவ்விரண்டு குறட்பாவும் தனிச் சொல்லோடு சேர்ந்து ஒரு வெண்பாவாகின்றது. இதன்

முதலிரண்டடி ஒரெதுகையாகவும், பின்னிரண்டடி ஓரெதுகையாகவும் வந்திருப்பதால், இது, இரு விகற்பத்தால் வந்த இரு குறள் வெண்பா ஆகும்.

இரண்டாவது அடியின் மூன்றாஞ்சீர் உகரத்தை ஈற்றிலுடைய இயற்சீராய் நிற்கும் நேரசை வெண்பாக்களை எல்லாம் இருகுறள் நேரிசை வெண்பா என்று கொள்ளலாம். வெண்பாவின் நடுவில் ஓரசைச் சீர் நிற்றற்கு இல்லையாதலால், இரு குறள் நேரிசை வெண்பாவின் இரண்டாவது அடியிலுள்ள மூன்றாஞ்சீர் எப்பொழுதும் உகரயீற்று இயற் சீராய்த்தான் இருக்கும். இவ்வெண்பா, நாலடிகளும் ஓரேயெதுகை பெற்று ஒரு விகற்பத்தாலும் வரலாம்.

## 2. ஆசிடை நேரிசை வெண்பா :

ஆசு என்றால் பொன், வெள்ளி, தாமிரம் போன்ற உலோகங்களைப் பற்றவைப்பதற்கான பற்றுப்பொடி. வெண்பாவின் இரண்டாவதடியின் மூன்றாஞ் சீரையும் தனிச் சொல்லையும் பொருள் கெடாமலும், தளை பிறழாமலும் சேர்த்துவைக்கும் பொருட்டு வரும் அசை, அல்லது எழுத்து ஆசு என்ற பெயர் பெறுவதாயிற்று. உதாரணமாக ஒரு செய்யுளை எடுத்துக் கொள்வோம்.

"மன்றற் குழலா ருயிர்மேன் மதன்கடவுந்
தென்றற் கரிதடுக்குந் திண்கணைய—மன்றவரைக்
கங்குற் கடலிற் கரையேற்று நீள்புணையாம்
பொங்குநீர் நாடன் புயம்,"

என்ற செய்யுளின் இரண்டாவது அடியிலுள்ள மன்றவரைக் என்ற தனிச் சொல்லை அகற்றியபின், முதலிரண்டடிகளுஞ் சேர்ந்து ஒரு குறள் வெண்பா ஆகாமை காண்க. திண்கணைய என்ற மூன்றாஞ்சீர், வெண்பாவின் ஈற்றில் நிற்கக்கூடிய வாய்பாடுகளில் ஒன்றன்று.

எனவே, அது குறள் வெண்பா ஆதற்கு முதலிரண்டடிகளும்,

மன்றற் குழலா ருயிர்மேன் மதன்கடவுந்
தென்றற் கரிதடுக்குந் திண்

என்று நிற்கவேண்டும். அவ்வாறு நிற்பின், பொருள் பயவாமையோடு வெண்டளை அமையாமையும் விளையும். ஆகவே, அக்குறள் வெண்பா பொருளாலும் தளையாலும் தனிச் சொல்லோடு பொருந்தி நடக்க, 'கணை-ய' என்ற இரண்டு அசைகளும் அவசியமாகின்றன. இவ்விரண்டு அசைகளும் ஆசுகள். இவ்வாறு ஆசு இடை வைக்கப் பெற்றிருப்பதால், இது ஆசிடை நேரிசை வெண்பா என்று அழைக்கப்படுகின்றது.

"ஆர்த்த வறிவின ராண்டிளைய ராயினுங்
காத்தோம்பிற் தம்மை யடக்குப—மூத்தொறூஉம்
தீத்தொழிலே கன்றித் தெரிதந் தெருளவைபோல்
போத்தறார் புல்லறிவி னார்".

என்னுமிவ் வெண்பாவை நோக்குக. இதனில் மூன்றாஞ் சீரான அடக்குப என்பதிலுள்ள பகரம் ஆசாக வந்துள்ளது. அப் பகரத்தையும், 'மூத்தொறூஉம்' என்னும் தனிச் சொல்லையும் நீக்கினால்,

" ஆர்த்த வறிவின ராண்டிளைய ராயினும்
காத்தோம்பித் தம்மை யடக்கு."

என நின்று ஒரு குறள் வெண்பாவாகும். அதைத் தனிச் சொல்லோடு வெண்டளை அமையச் சேர்ப்பது ப என்னும் எழுத்து. கு ப என்பதன்று. ஏனெனில் அடக்கு என்பதுதான் வெண்பாவின் ஈற்றுச்சீராகும். எஞ்சிய பகரம் ஆசாகின்றது. எனவே, இவ்வெண்பா ஒரு விகற்பத்தால் வந்த ஆசிடை நேரிசை வெண்பா.

ஆகவே, ஓரெழுத்தும், ஓரசையும், இரண்டு அசைகளும் ஆசாக வரலாம். ஆசிடை நேரிசை வெண்பாக்கள் ஒரு விகற்பத்தானும், இரு விகற்பத்தானும் வரலாம். ஆசுபெறாமல் வெண்பா அமைவதே சிறப்புடையதாகக் கருதப்படுகின்றது. இனி, இன்னிசையைப் பார்ப்போம்.

## இன்னிசை வெண்பா

வெண்பாவிற்குரிய இலக்கணங்களுடையதாய், இரண்டாவதடியின் ஈற்றில் ஒரூஉ எதுகையுடைய தனிச்சொல்பெற்று, ஒரு விகற்பத்தாலேனும், இரு விகற்பத்தாலேனும் வரும் நாலடிச் செய்யுள் நேரிசை வெண்பா ஆவதைப் பார்த்தோம். இதற்கு மாறாக நாலடிகளால் வரும் வெண்பாக்களை எல்லாம் இன்னிசை வெண்பாக்களாகக் கொள்ளலாம். இன்னிசை வெண்பாவிற்குரிய இலக்கணம் வருமாறு:

1. தனிச்சொல் இன்றி, ஒரு விகற்பத்தாலேனும், இரு விகற்பத்தாலேனும், பல விகற்பத்தாலேனும் வரலாம்.

2. எவ்விகற்பத்ததாயினும், இரண்டாவது அடியிலன்றி மற்ற அடிகளில் (ஈற்றடி தவிர) தனிச் சொல் பெற்று வரலாம்.

3. அல்லது, அடிதோறும் (ஈற்றடி தவிர) தனிச்சொல் பெற்று வரலாம்.

4. இரண்டாவது அடியில் தனிச் சொல்வரின், செய்யுள் பல விகற்பமுடையதாதல் வேண்டும்.

இவ் விதிகளுக்கு அடங்கி நடக்கும் வெண்பாக்கள் எல்லாம் இன்னிசை வெண்பாக்கள் ஆகும். உதாரணமாகச் சில பாக்களைப் பார்ப்போம்.

(1) இம்மை பயக்குமா லீயக் குறைவின்றால்
தம்மை விளக்குமாற் றாமுளராக் கேடின்றால்
எம்மை யுலகத்தும் யாங்காணேங் கல்விபோன்
மம்ம ரறுக்கு மருந்து.

என்னுமிது, தனிச்சொல்லின்றி ஒரு விகற்பத்தால் வந்த இன்னிசை வெண்பா. இல்வாறே, இரு விகற்பத்தாலு் இன்னிசை வெண்பாக்கள் வரலாம்.

(2) காதல் மகளிர் கலக்கக் கலக்குண்டு
பேதுற்றார் நெஞ்சம் பிழைத்தகன்றார் நன்னெஞ்சும்
போதம் படரும் புலியூரே—தாதுண்டு
வண்டுறங்கு நீள்சடையான் வைப்பு.

என்னுமிது மூன்றாவதடியில் தனிச் சொல்பெற்று இரு விகற்பத்தால் வந்த இன்னிசை வெண்பா.

(3) "காம ருயிர்செகுக்குஞ் கண்ணொன்றே காமருசீர்
மாதர் நலனழிக்குங் கண்ணொன்றே—மாதருக்
கின்னு விரவொழிக்குங் கண்ணொன்றே
தன்னே ரிலாதான் றனக்கு." [—யிந்திலத்தில்

என்னுமிது அடிதோறும் தனிச்சொல் பெற்றுப் பல விகற்பத்தால் வந்த இன்னிசை வெண்பா.

(4) உறுபுன றந்துல கூட்டி யறுமிடத்துங்
கல்லூற் றுழியூறு மாறேபோல்—செல்வம்
பலர்க்காற்றிக் கெட்டுலந்தக் கண்ணுஞ் சிலர்க்காற்றிச்
செய்வர் செயற்பா லவை.

என்பதில், இரண்டாமடி தனிச் சொல் பெற்றுளது. எனினும், இது பல விகற்பத்தால் வந்திருப்பதால் இன்னிசை வெண்பா ஆகின்றது.

எனவே, வெண்பா எவ்விகற்பத்தால் வந்ததாயினும் 1-2-3, 1-2, 2-3, 1-3, அடிகளில் தனிச் சொல் பெற்றும்

எவ்வடியிலும் தனிச் சொல் பெறாமலும் வருவது இன்னிசை வெண்பா என்று கொள்ளலாம். இரண்டாமடி மட்டும் தனிச் சொல் பெற்றிருப்பின், செய்யுள் பல விகற்பத்தால் வந்ததாய் இருக்கவேண்டும். இல்லையேல் நேரிசை வெண்பாவாய் விடும்.

இனி, நான்கிற்கு அதிகமான அடிகளையுடைய பஃறொடை (பல்—தொடை) வெண்பாவின் இலக்கணத்தைப் பார்ப்போம்.

## பஃறொடை வெண்பா

பல்தொடை என்பதுதான் புணர்ச்சி விகாரத்தால் பஃறொடை ஆகின்றது.

நான்கிற்கு அதிகமான அடிகளைக்கொண்ட வெண்பாவைப் பஃறொடை வெண்பா என்பர். ஐந்தடியைச் சிற்றெல்லையாகக் கொண்டு பல வடிகளால் நடத்தல் இவ்வெண்பாவிற்குரிய இலக்கணம். இவ்வெண்பாவின் பேரெல்லை பன்னீரடிகள் என்றும், பன்னிரண்டிற்கு அதிகமான அடிகளைக் கொண்டு நடக்கும் பாவைக் கலிவெண்பா என்றும் கூறுவாருமுளர். பஃறொடை வெண்பா, ஒரு விகற்பத்தாலேனும் பல விகற்பத்தாலேனும் வரலாம்.

சேற்றுக்கால் நீலஞ் செருவென்ற வேந்தன்வேல்
கூற்றுறழ் மொய்ம்பிற் பகழி·பொருகயல்
தோற்றந் தொழில்வடிவு தம்முட் டடுமாற்றம்
வேற்றுமை யின்றியே யொத்தன மாவேடர்
ஆற்றுக்கா லாட்டியார் கண்.

என்பது ஐந்தடிகளைக் கொண்ட வெண்பா. வெண்டளை பிறழாமல், இயற்சீரும், வெண்சீரும் விரவியதாய் நான்கு சீர்களைக் கொண்ட அளவடிகளால் நடக்கின்றது. ஈற்றடி

னாள் என்னும் வாய்பாட்டில் முடிந்த சிந்தடி. இதன் அடிகள் எல்லாம் ஒரேவகை எதுகை பெற்றிருக்கின்றது. எனவே, இது அய்ந்தடிகளால் வந்த ஒரு விகற்பப் பஃறொடை வெண்பா.

"மலைமேல் மரங்கொணர்ந்து மாண்புடைத்தார் செய்த
நிலையொத்த வீதி நெடுமாடக் கூடல்
விலைத்தயிர் கொள்ளீரோ வென்பாள் முலையிரண்டுஞ்
சோழ னுறந்தைக் குரும்பையோ தொண்டைமான்
வேழஞ்சேர் வேங்கடத்துக் கோங்கரும்போ ஈழத்துத்
தச்சன் கடைந்த விணைச் செப்போ வச்சுற்றுள்
அன்னமோ வாய்மயிலோ வாரஞர்நோய் செய்தாளை
இன்னுந் தெரிகிற் றிலம்."

என்னுமிது எட்டடிகளால் வந்த பல விகற்பப் பஃறொடை வெண்பா.

குறிப்பு : பன்னிரண்டிற்கு அதிகமான அடிகளை யுடைய பஃறொடை வெண்பாவைக் கலிவெண்பா என்பர் சிலர். வெண்பாவிற்குரியதான செப்பலோசை சிறிது சிதைந்து நடக்கும் பஃறொடை வெண்பாவை கலிவெண்பா

---

குறிப்பு : இப்பஃறொடை வெண்பாவும் இன்னிசை, நேரிசை என்ற ஒலி வேறுபாடு அடையலாம் என்றும், இரண்டடி ஒரெதுகையாயும், இரண்டடிக்கொருமுறை ஒரூஉ எதுகையுடைய தனிச் சொல் பெற்றும், நான்கிற்கும் அதிகமான அடிகளைக் கொண்டு நடப்பது நேரிசையை யுடைய பஃறொடை வெண்பா என்றும், அவ்வாறன்றி அடிதோறும் தனிச் சொல் பெற்றும், பெறாமலும், அல்லது சிலவடிகளில் மாத்திரம் தனிச் சொல் பெற்றும், பல விகற்பங்களையுடைய பலவடிகளால் நடப்பது இன்னிசைப் பஃறொடை வெண்பா என்றும் சிலர் கூறுவர். அடிகள், பல விகற்பமுடையதாய் நடத்தலே இன்னிசை அடை வதற்குப் போதும் என்பது சிலருடைய கருத்து.

என்பது சிலர் கருத்து. தமிழ்விடுதூது, மூவருலா முதலிய தூது, உலா நூல்கள் கலிவெண்பாவால் ஆனவை. அடிகள் எத்துணையாயினும் வெண்பாவிற்குரிய எல்லா இலக்கணங்களும் பெற்று, நாள், மலர்; காசு, பிறப்பு என்னும் வாய்பாடுகளில் ஒன்றினால் முடிந்து சிந்தடியை ஈற்றில் பெற்றிருத்தல், அவசியமாகும். கலிவகையினதான வெண்கலிப்பாவைக் கருதுகையில், கலிவெண்பாவைப் பற்றி விளக்குவோம்.

## சவலை வெண்பா

சவலை வெண்பா என்பது, வெண்பா வகைகளில் ஒன்றாகும். சவலை—மெலிவுற்ற இளம் பிள்ளை தாய்ப்பால் இல்லாமையாலோ, அல்லது போதிய பால் தாயினிடம் இல்லாமையாலோ மெலிவெய்திய இளம் பிள்ளையைச் சவலைக் குழந்தை என்பர். அவ்வாறே இலக்கணம் நிரம்பப் பெறாது மெலிந்து நடக்கும் வெண்பாச் செய்யுள் சவலை வெண்பா ஆகும்.

இன்னிசை, நேரிசை வெண்பாக்களின் இலக்கணத்தையும், ஒரு விகற்பத்தாலும் இரு விகற்பத்தாலும் வரும் இருகுறள் நேரிசை வெண்பா, ஆசிடை நேரிசை வெண்பா என்ற இரு வகையினவான வெண்பாக்களின் இலக்கணத்தையும் முன்னரே விரிவாகக் கூறியுள்ளோம். இனி, இருகுறட் சவலை என்று அழைக்கப்படும் சவலை வெண்பாவின் இலக்கணத்தை அறிவோம்

குறள் வெண்பாக்கள் இரண்டை ஒன்றாய் இணைப்பதின் விளைவு சவலை வெண்பா. ஒரு விகற்பமுடைய அடிகளைக் கொண்ட குறள் வெண்பாக்கள் இரண்டை ஆசால் அதாவது இணைப்பு எழுத்துக்களால் ஒன்றுபடுத்தி, ஒரு வெண்பாச் செய்யுளாக அமைத்தலை இலக்கணமாகக் கொண்டது இச் சவலை. உதாரணமாகச் செய்யுள் ஒன்றை எடுத்துக் கொண்டு கருதுவோம்.

அட்டாலும் பால்சுவையிற் குன்றா தளவல்ல
நட்டாலும் நண்பல்லார் நண்பல்லர்
கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்களே சங்கு
சுட்டாலும் வெண்மை தரும்.

இது, வாக்குண்டாம் என்ற செய்யுள்களில் ஒன்று. இச் செய்யுளின் இரண்டாவது அடியில் நான்காவது சீர் (தனிச்சொல்) இல்லாமை காண்க. இச் செய்யுளை இரு குறள் வெண்பாக்களாகப் பிரித்து விடலாம்.

" அட்டாலும் பால்சுவையிற் குன்றா தளவல்ல
நட்டாலும் நண்பல்லார் நண்பு "

என்பது ஒரு குறள்வெண்பா. நண்பு என்பது காசு என்ற வாய்பாட்டினதான வெண்பா ஈறு.

" கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்களே சங்கு
சுட்டாலும் வெண்மை தரும்."

என்ற இதுவும், ஒரு குறள் வெண்பா தரும் என்பது மலர் என்ற வாய்பாட்டினதான வெண்பா ஈறு. இவ்விரு குறள் வெண்பாக்களும் அல்லர் என்ற ஆசினால் இணைந்து ஒரு சவலை வெண்பா, ஆகின்றது.

இவ்வெண்பாவின் இரண்டாவது அடி நான்காவது சீர் இல்லாத மெலிவினதாய் நிற்றல் காண்க. அடி முதல் நான்கும், ஒத்த எதுகை பெற்று நடத்தல், இச் சவலைக்கு அவசியமாகும். " இரு குறட் சவலை ஒரு விகற்பத் தினதே !" என்பது இலக்கணத்திரட்டு என்ற நூல் கூறும் விதி. ஒத்த எதுகை பெற்ற அடிகளை, ஒரு விகற்ப அடிகள் என்பர். இச் சவலை நூல்களில் அதிகம் பயின்று வரக் காண்கிலம்; மற்றோர் செய்யுளை உதாரணமாக எடுத்துக் கொள்வோம்.

"கொந்தார் குழல்சரியக் கோல முகம்வியர்ப்பச்
சந்தார் முலைதா மசைந்தலையப்
பந்தேநீ சிற்றிடையாள் தீண்டி விளையாட
அந்தவமென் செய்தாய் நவில்,"

என்ற இது, பந்தாடும் நல்லியல் நங்கையின் எழிலைக் காளையொருவன் கண்டு வியந்தலை விஷயமாகக் கொண்டது. பழம் பாடலான நேரிசை வெண்பா ஒன்று தனிச்சொல் நீக்கி, இரு குறட் சவலையாகத் திருத்தி யமைக்கப்பட்டதாகும் இது.

இச் செய்யுள், குறள் வெண்பாக்கள் இரண்டு, அலைய என்ற ஆசினால் ,இணைந்துள்ள சவலை வெண்பா. அசைந்து—அலைய—அசைந்தலைய, அசைந்து என்பது பிறப்பு என்ற வாய்பாட்டினதான வெண்பா ஈறு. அடிகள் நான்கும் ஒரு விகற்பத்தின் அலைய, என்பது ஆசு.

கலைமதியி னேருங் கவிச்சுவையுங் கஞ்ச
மலரழகு மின்மணமுங் கொண்டே
சிலைமார னெஞ்சால் வகுத்தே யமைத்தான்
அலையும்பூங் கோதை முகம்

என்ற இச்செய்யுள் எழில் முதிர்ந்த இளம் பெண்ணின் நலம் பாராட்டும் இரு குறள் நேரிசை வெண்பா ஒன்றின் சவலை வடிவமாகும். அடிகள் ஒரு விகற்பத்தின இரண்டாவது அடி மூன்று சீர்களைக் கொண்டது. கொண்டே (கொண்டு - ஏ) என்பதிலுள்ள ஏகாரம் ஆசு.

## வெண்பா ஈற்றுச்சீர்

வெண்பாவிற்குரியதான செப்பலோசையைத் தருவதற்கு ஆதாரமாவது ஈற்றடியும், ஈற்றுச் சீருமாகும். அதாவது, ஈற்றடி சிந்தடியாய் இருப்பதும், அவ்வடியின் ஈற்றுச்சீரின் வாய்பாடும் செப்பலோசை விளைய இன்றியமையாதன

வாகின்றன. எனவே, வெண்பாவின் ஈற்றில் நிற்கவல்ல சீர்கள் எவை என்பதைக் கூறி வெண்பா இலக்கணத்தை முடிக்கலாம் என்று நினைக்கின்றோம்.

வெண்பா ஈறாக உரிச்சீர் (மூவகைச்சீர்) ஒருபோதும் வாராது. ஈரசைச் சீர்களே வரலாம். எனினும் அவை களில் சில சீர்களே ஈற்றில் வரலாம்.

தேமா, புளிமா, கூவிளம், கருவிளம் என்னும் நால் வகை இயற்சீர்களில், கருவிளமும், கூவிளமும் வெண்பா ஈறாக வாரா. எனவே, தேமா, புளிமாச் சீர்களே ஈற்றில் வரக்கூடியவை. அவைகளிலும் சில வாய்பாட்டுச் சீர்களே ஈற்றில் வரும்.

கண்டேன், நீயே, சொல்லி, காதல் என்பன போன்றவைகளும் தேமாச் சீர்களே. பரிதி, அளாவி, கடலை, கொடுபோ என்பன போன்றவைகளும் புளிமாச் சீர்களே. எனினும் அவை வெண்பா ஈறாய் வாரா.

கத்து, மட்டு, நேர்ந்து, பேசு, சொல்லு என்பன போன்ற தேமாச் சீர்களும்; அமுது, கதவு, உலகு, படைப்பு என்பன போன்ற புளிமாச் சீர்களுமே வெண்பா ஈறாய் வரலாம். அதாவது, உகரத்தை ஈற்றிலுடைய தேமா, புளிமாச் சீர்களே ஈற்றில் வரக்கூடியவை என்று ஏற்படுகின்றது. எனவேதான், வெண்பா ஈறாகும் ஈரசைச் சீர்களைத் தேமா, புளிமா என்னும் வாய்பாட்டால் குறிக் காமல், (நேர்-நேர்ச் சீரை)க் காசு என்றும் (நிரை-நேர்ச் சீரை)ப் பிறப்பு என்றும், இலக்கண நூல் குறிக்கின்றது.

நேர்-நேர்ச் சீர் காசு என்னும் வாய்பாட்டில் அழைக்கப்படுவதால், ஈற்றில் வரும் உகரம் நெடில் தொடர் குற்றியலுகரமாய்த்தான் இருக்கவேண்டும் என்று எண்ண வேண்டா. உகரத்தை ஈற்றிலுடைய தேமாச் சீர் என்பதையே அவ் வாய்பாடு குறிக்கும். அவ்வுகரம்

குற்றியலுகரமாயும் இருக்கலாம்; முற்றியலுகரமாயும் இருக்கலாம்.

பிறப்பு என்பதும் அவ்வாறே உகரத்தை ஈற்றிலுடைய புளிமாச் சீரைக் குறிக்கின்றதே அல்லாமல், வன்தொடர்க் குற்றியலுகரந் தவிர மற்ற உகரங்களை விலக்குகின்றதாகக் கொள்ளக்கூடாது. காசு, பிறப்பு என்னும் வாய்பாடுகளில் எந்தத் தொடர்க் குற்றியலுகரமும் வரலாம். உலகு, கழுது போன்ற உயிர்த் தொடர்க் குற்றியலுகரச் சொற்களும் பிறப்பு என்னும் வாய்பாட்டில் அடங்கும்.]

முற்றியலுகரத்தை ஈற்றிலுடைய என்னு, சொல்லு, கரவு என்ற சொற்களும் காசு பிறப்பு என்னும் வாய்பாடு களில் அடங்கி வெண்பா ஈறாய் நிற்பதுண்டு. ஆனால், முற்றுகர முடிவு அத்துணைச் சிறப்புடையதாகக் கருதப் படுவதில்லை.

வெண்பா ஈறு ஓரசைச் சீரிலும் முடியும், [நேரசைச் சீரை நாள் என்ற வாய்பாட்டாலும், நிரையசைச் சீரை மலர் என்ற வாய்பாட்டாலும், குறிக்கின்றனர். நாள் என்பதால், நெடிலும் மெய்யுமான நேரசையும், மலர் என்பதால் இரு குறிலும் மெய்யுமான நிரையசையுந் தான் வெண்பாவின் ஈறாக வேண்டும் என்று எண்ண வேண்டா. க, கல், கா, கால் என்னும் நான்கு நேரசைகளும், கட, கடம், கடா, கடாம் என்னும் நான்கு நிரையசைகளும் நாள், மலர் வாய்பாட்டில் அடங்கும்.

நாள், மலரில் அடங்கும் எல்லா நேர், நிரைச்சீர்களும் வெண்பா ஈற்றில் வரலாமாயினும், பெரும்பாலும் செப்ப லோசைக்குரியனவாய் ஈற்றில் பயின்று வருபவை, கல், கட, கடம் என்பன போன்ற ஓரசைச் சீர்களே. க, கா,

கடா, கடாம் என்பன போன்ற ஓரசைச் சீர்கள் அதிகமாய் வெண்பா ஈறாய் வருவதில்லை. வரின் செப்பலோசையின் செம்மை சிறிது சிதைவுறும். எனவே, அவை' சிறப்புடைய வெண்பா ஈருக, வெண்பா ஈறு தனிக் குறிலால் முடிவது முற்றிலும் சிறப்பற்றதாகும்.

வெண்பா இலக்கணத்தைக் கற்றோம். இனி ஆசிரியப் பாவின் இலக்கணத்தை அறிவோம்.

# 3. ஆசிரியப்பா

செப்பலோசைக் குரியதான வெண்பா இலக்கணத்தைப் பற்றிய விதிகளை அறிந்தோம். இனி, அகவலோசைக் குரியதான ஆசிரியப்பாவின் இலக்கணத்தைப் பார்ப்போம்.

ஆசிரியன் ஒருவன் மாணாக்கனுக்கு ஒன்றைக் கூறுவதுபோல் விஷயத்தை அறிவிக்கும் பான்மையில் இசைப்பது அகவலோசை என்னலாம். செப்பலோசையைப் போல், அகவலோசையும் ஏந்திசை, தூங்கிசை, ஒழுகிசை என்று மூன்று வகைப்படும்.

ஆசிரியப்பா விற்குரிய சீர், இயற்சீர். தேமா, புளிமா, கூவிளம், கருவிளம் என்னும் நால்வகை இயற்சீர்களும் ஆசிரியப்பாவில் வரும். ஆயினும், இயற்சீரும் வெண்சீரும் தவிர மற்றைய சீர்கள் வெண்பாவில் வரலாகாது என்பது போன்ற நியதி ஆசிரியப்பாவிற்கு இல்லை.

ஆசிரியப்பாவிற்குரிய சீர் இயற்சீராயினும், தேமாங்காய், புளிமாங்காய், கூவிளங்காய், கருவிளங்காய் என்னும் நால்வகைக் காய்ச்சீர்களும் இடையிடையே வரலாம். கனிச்சீரில் நேரசையை நடுவில்கொண்ட தேமாங்கனி, புளிமாங்கனி என்னுங் கனிச் சீர்கள் சில இடையிடையே வருதலும் உண்டு. நிரை நடுவாகிய கருவிளங்கனி, கூவிளங்கனி என்ற கனிச்சீர்கள் வரலாகாது என்பர்.

ஆசிரியப்பாவிற்குரிய தளை ஆசிரியத்தளை. அது, நேரொன்றிய ஆசிரியத்தளை என்றும், நிரையொன்றிய ஆசிரியத்தளை என்றும் இருவிதப்படும் என்பதை,

முன்னரே கூறியுள்ளோம். ஆசிரியப்பாவில் வேற்றுத் தளைகள் சில வரினும் பிழையாகாது.

ஆசிரியப்பாவில் அளவடியோடு இடையிடையே சிந்தடி, குறளடிகளும் வருவதுண்டு. ஐந்து சீர்களை யுடைய நெடிலடியும் மிக அருமையாய்ப் பாவின்கண்வரக் காண்கின்றோம். ஆசிரியப்பாவின் சிற்றெல்லை மூன்றடி. மூன்று முதல் எத்தனை அடிகளேனும் பாவில் வரலாம். பாடும் புலவனது பொருள் முடிவைக் குறித்து அடிகள் நடக்கும். ஆயிரத்திற்கு அதிகமான அடிகள் வரினும் இழுக்காகாது.

ஆசிரியப்பாக்கள் எல்லாம் ஏ, ஓ, என், ஈ, ஆ, ஆய், அய் என்னும் அசைகளுள் ஒன்றினை ஈற்றில் பெற்று முடிய வேண்டும். ஏகார அசையில் பா முடிவதே சிறப்புடைய தாகக் கருதப்படுகின்றது. இவ்விதிகளுக்கு அடங்கி நடக்கும் பாவை, ஆசிரியப்பா என்பர். இது அகவலோசை பெற்று நடப்பதால் அகவற்பா என்ற பெயரும் இதற்கு உண்டு.

பாவில், நேரொன்றிய ஆசிரியத்தளை மிகுந்திருப்பின், அதன் ஓசை ஏந்திசை அகவலோசை ஆகும். நிரை யொன்றிய ஆசிரியத்தளை மிகுந்திருப்பின், அதன் ஓசை தூங்கிசை அகவலோசை ஆகும். இருவகை ஓசைகளும் விரவி வரின் ஒழுகிசை அகவலோசை ஆகும். இப்பாவின் இடையிடையே வேற்றுத் தளைகளும் வரலாம். இவ்வளவும் ஆசிரியப்பாவிற்குரிய பொது விதிகள்.

இவ்விதிகளுக்கு இணங்க அமையும் ஆசிரியப்பாக்கள், அவற்றினின்றும் சிறிது வேறுபட்டு நான்கு வகையின வாகின்றன.

அவையும்.

1. நேரிசை ஆசிரியப்பா
2. நிலைமண்டில ஆசிரியப்பா
3. அடிமறி மண்டில ஆசிரியப்பா
4. இணைக்குறள் ஆசிரியப்பா

என வேறுபடுவன ஆகின்றன. அவைகளை ஒவ்வொன்றாய் எடுத்துக்கொண்டு, அவைகளுக்குரிய இலக்கணத்தைப் பார்ப்போம்.

## நேரிசை ஆசிரியப்பா

ஆசிரியப்பாவிற்கு உரியதான அகவலோசையை ஊட்டும் ஆசிரியத்தளை பெற்று, ஈற்றயல் (கடைசி அடிக்கு முந்திய அடி) சிந்தடியாகவும், மற்றவடிகள் அளவடிகளாகவும் அமைந்து, மூன்றடி முதல் பல அடிகளைக் கொண்டதாய், ஏ, ஓ, என், ஈ, ஆ, ஆய், அய் என்ற அசைகளில் ஒன்றை ஈற்றில் பெற்று நடப்பது நேரிசை ஆசிரியப்பா ஆகும். (ஆசிரியப்பாவின் ஈற்றயல் அடியை, எருத்தடி என்று வழங்குவர்.)

ஆசிரியப்பா வகைகளில், நேரிசை ஆசிரியப்பாவே சிறப்புடையதாகக் கருதப்படுகின்றது. ஓசை நயம் சிறக்க நடப்பது அதுவே என்று கருதப்படுதலின், நேரிசை என்ற பெயர் அது பெறுவதாயிற்று. புறநானூறு, அகநானூறு, நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு முதலிய சங்க நூல்களில் பெரும்பாலான பாக்கள் நேரிசை ஆசிரியமாகும்.

உதாரணமாக ஐங்குறுநூறு என்னும் நூலிலுள்ள ஒரு செய்யுளை எடுத்துக் கொள்வோம் :

"அவரோ வாரார் தான்வந் தன்றே
புதுப்பூ வதிர ாஆய்க்
கதுப்பற லணியுங் காமர் பொழுதே."

என்பது மூன்றடியால் வந்த வோர் நேரிசை ஆசிரியப்பா. ஆசிரியப்பாவின் குறைந்த அடி யெல்லை மூன்று. இதன் ஈற்றயலடி ‘புதுப்பூ வதிர நாஅய்க்’ என்ற சிந்தடி. முதலடியும் மூன்றாமடியும் அளவடிகள்; ஈற்றடி ஏகார அசையால் முடிந்துளது. ‘புதுப்பூ - வதிர,’ என்பதும், ‘காமர் பொழுதே’ என்பதும் இயற்சீர் வெண்டளைகள். மற்றவை ஆசிரியத்தளைகள். எனவே, அகவலோசை பாவில் மிகுந்துளது. வெண்பாவைப்போல், ஓரடியின் ஈற்றிற்கும் அதைத் தொடரும் அடியின் முதலிற்கும் உள்ள தளையமைப்பை இப்பாவில் கருத வேண்டியதில்லை. வேற்றுத் தளைகள் இரண்டொன்று வரலாம். எனவே, இப்பா நேரிசை ஆசிரியப்பா ஆகின்றது.

“அம்ம வாழி தோழி பன்மலர்
நறுந்தண் சோலை நாடுகெழு நெடுந்தகை
குன்றம் பாடா னாயின்
என்பயன் செய்யுமோ வேலற்கவ் வெறியே.”

என்பதும் அய்ங்குறுநூற் செய்யுள். இது நான்கடிகளால் வந்த நேரிசை ஆசிரியப்பா. ஈற்றயல் சிந்தடி. ஈற்றடி ஏகார அசையால் முடிந்துளது. இதனில் பெரும்பாலும் வந்திருப்பவை ஆசிரியத்தளைகளே. எனினும்,

“என்பயன்—செய்யுமோ!
செய்யுமோ—வேலற்கவ், ”

என வெண்டளைகளும்,

“நாடுகெழு—நெடுந்தகை
வேலற்கவ்—வெறியே!”

எனக் கலித்தளைகளும் வந்திருக்கின்றன. நாடு, கெழு என்பதை நா - டுகெ - ழு என்று பிரிக்காமல், நா- டு -கெழு என்றும் பிரித்துக் கொள்ளலாம். அவ்வாறு பிரித்தால் சீர்

தேமாங்கனி யாவதால், வஞ்சித்தளை விளையும், ஆசிரியப்பாவில் நேரசையை நடுவிலுடைய கனிச்சீர்கள் வரலாம். எனவே, இது வேற்றுத்தளைகள் சில பெற்ற நேரிசை ஆசிரியப்பா ஆகின்றது.

" அமிழ்தத் தன்ன வந்தீங் கிளவி
அன்ன வினியோள் குன்ற மின்ன
இன்னா வரும்படர் செய்யு மாயின்
உடனுறை வரிதே காமங்
குறுக லோம்புமி னறிவுடை யோரே. "

என்னுமிது குறுந்தொகையின் கண்ணுள்ள நேரிசை ஆசிரியப்பா. இதனில்,

" வந்தீங் (அம்-தீம்)—கிளவி
யன்ன—வினியோள் (இனியோள்)
வின்னா (இன்னா) —வரும்படர் (அரும்படர்)
னறிவுடை (அறிவுடை)—யோரே.,'

என்பவை வெண்டளைகள். மற்றவை யெல்லாம் ஆசிரியத்தளைக ளாதல் காண்க. ஆசிரியத்தளை மிகுந்திருப்பதால், இது அய்ந்து அடிகள் கொண்ட நேரிசைஆசிரியப்பா. ஈற்றயல் சிந்தடியாகவும், மற்றவை அளவடிகளாகவும் இருக்கின்றன. பாவின் ஈற்றடி ஏகாரத்தால் முடிந்துளது.

" கால்பார் கோத்து ஞாலத் தியக்குங்
காவற் சாகா டுகைப்போன் மாணில்
ஊறின் றாகி யாறினிது படுமே
உய்த்த றேற்றா னாயின் வைகலும்
பகைக்கூ ழள்ளற் பட்டு
மிகப்பஃ றீநோய் தலைத்தலைத் தருமே.

என்பது புறநானூற்றுச் செய்யுள். இது ஆறடிகளால் நடக்கும் ஆசிரியப்பா. இரண்டொரு வெண்டளைகளும்,

'யாறினிது - படுமே' என்னுங் கலித்தளையுந் தவிர மற்றத் தளைகள் ஆசிரியத்தளைகள், அவைகளிலும் பெரும் பாலானவை நேரொன்றிய ஆசிரியத்தளைகள். எனவே, இதில், ஏந்திசை அகவலோசை அமைந்துளது. ஈற்றயல் சிந்தடி. மற்ற அய்ந்து அடிகளும் அளவடிகள். ஈற்றடியின் முடிவு ஏகாரம். எனவே, இது, ஏந்திசை அகவலோசை பெற்ற நேரிசை ஆசிரியப்பா.

"வைகறு பாறு மின் மு மினமையு
மெய்கணை நிழலிற் கழியுமிவ் வுலகத்துக்
காணீ ரென்றலோ வரிதே யதுநனி
பேணீ ராகுவி ரையவென் றோழி
பூணணி யாகம் புலம்பப் பாண
ரயிர்ப்புக்கொண் டன்ன கொன்றையந் தீங்கனி
பறையறை கடிப்பி னறையறையாத் துயல்வர
வெவ்வளி வழங்கும் வேய்பயி லழுவத்
தெவ்வ மிகூஉ மருஞ்சுர மிறந்து
நல்வா யல்லா வாழ்க்கை
மன்னாப் பொருட்பிணிப் பிரிதும்யா மெனவே."

என்னுமிந் நற்றிணைச் செய்யுள், பதினோரடிகள் கொண்டு இருவகை ஆசிரியத்தளைகளும், சில வேற்றுத் தளைகளும் அமையப்பெற்று. ஒழுகிசை அகவலோசை யுடன் நடக்கும் நேரிசை ஆசிரியப்பா. ஈற்றயல் சிந்தடி. மற்றவை அளவடிகள். செய்யுள் ஏகாரத்தில் முடிந்துளது.

இவற்றிற்கும் அதிகமான அடிகளைக் கொண்ட ஆசிரியப்பாக்களை அகநானூற்றில் கண்டு நேயர்கள் பயிலல் நலம். பாவின் இடையில் நெடிலடி ஆபூர்வமாய் வருதலும் உண்டு. மூன்றடி முதல் பல நூறு அடிகளைக் கொண்டும் பா நடக்கலாம்.

## நிலைமண்டில ஆசிரியப்பா

ஆசிரியப்பாவிற்குரிய எல்லா இலக்கணமும் பெற்று எல்லா அடிகளையும் அளவடியாகக் கொண்டு நடக்கும் பாவை, நிலைமண்டில ஆசிரியப்பா என்பர். எருத்தடி யென்னும் ஈற்றயலும் அளவடியாகவே, இப்பாவில் இருக்கும். இதுவும், மூன்றடி முதல் பலவடிகளைக் கொண்டிருக்கலாம்.

> ஊர்க்கு மணித்தே பொய்கை பொய்கைக்குச்
> சேய்த்து மன்றே சிறுகான் யாறே
> இரைதேர் வெண்குரு கல்ல தியாவதும்
> துன்னல் போகின்றாற் பொழிலே யாமெம்
> கூழைக் கேர்மணங் கொணர்கஞ் சேறு
> மாண்டும் வருகுவன் பெரும்பே தையே.

என்னுமிக் குறுந்தொகைச் செய்யுள், ஆறடியான் வந்த நிலைமண்டில ஆசிரியப்பா. இதன் ஈற்றயலடியும் நான்கு சீர்களாலான அளவடியாய் இருப்பது காண்க.

குறிப்பு :— நிலைமண்டில ஆசிரியப்பா என் என்னும் அசையால் முடிவது சிறப்புடையதாகும் என்பர். மணிமேகலையில் ஆசிரியப்பாக்கள் என் என்னும் அசையில் முடியக் காண்கின்றோம்.

> " இளையோர் சூடார் வளையோர் கொய்யார்
> கல்லியாழ் மருப்பின் மெல்ல வாங்கிப்
> பாணன் சூடான் பாடினி யணியாள்
> ஆண்மை தோன்ற வாடவர்க் கடந்த
> வல்வேற் சாத்தன் மாய்ந்த பின்றை
> முல்லையும் பூத்தியோ வொல்லையூர் நாட்டே."

என்னும் இப் புறநானூற்றுச் செய்யுளும் ஆறடியான் வந்த நிலைமண்டில ஆசிரியப்பா. இயற்சீரும் ஆசிரியத்தளையுங்

பெற்று அகவலோசையுடன் அளவடி ஆறால் நடப்பது காண்க.

## அடிமறிமண்டில ஆசிரியப்பா

ஆசிரியப்பாவின் இலக்கணம் பெற்றுப் பொருள் முற்றிய அளவடிகளால் நடப்பது அடிமறிமண்டில ஆசிரியப்பா. செய்யுளடிகளை இடம் மாற்றி அமைத்தாலும், பொருள் கெடாது நடக்கும் இயல்பினது இப்பா.

" தீர்த்த மென்பது சிவகங் கையே
ஏத்த ருந்தல மெழிற்புலி யூரே
மூர்த்தி யம்பலக் கூத்தன துருவே."

இது சிதம்பரச் செய்யுட் கோவையில் காணப்படும் மூன்றடிகளால் வந்த அடிமறிமண்டில ஆசிரியப்பா. எல்லா அடிகளும் அளவடிகள். அவ்வடிகளை முன்னும் பின்னுமாய் அமைத்து ஓதினும் பொருளில் வேறுபாடு ஏற்படாமை காண்க.

பதிகளி னதிபதி திருமகள் பதியே
துதிகளி னதிபதி தமிழ்மறைத் துதியே
மதிகளி னதிபதி மாறனுண் மதியே
நதிகளி னதிபதி வரசுர நதியே.

இது, நான்கடிகளால் வந்த அடிமறிமண்டில ஆசிரியப்பா,

சூரல் பம்பிய சிறுகான் யாறே
சூரர மகளி ராரணங் கினரே
வாரல் எனினே யானஞ் சுவலே
சாரல் நாட நீவர லாறே.

இதுவும் நான்கடிகளால் வந்த அடிமறிமண்டில ஆசிரியப்பா

## இணைக்குறள் ஆசிரியப்பா

முதலடியும் ஈற்றடியும் அளவடிகளாக, இடையே குறளடிகளையும், சிந்தடிகளையும் கொண்டும், அல்லது அளவடிகளோடு கலந்தும், ஆசிரியப்பாவின் இலக்கணம் பெற்று நடப்பது இணைக்குறள் ஆசிரியப்பா. இதுவும் மூன்றடி சிற்றெல்லையாக, வரையறையின்றிப் பலவடிகளைக் கொண்டு நடக்கும் இயல்பினது. பாவின் முதலடியும், கடையடியும் அளவடிகளாய் இருத்தல் இப்பாவின் இன்றியமையா இலக்கணமாகும்.

நீரின் தன்மையுந் தீயின் வெம்மையும்
சாரச் சார்ந்து
தீரத் தீரும்
சார னாடன் கேண்மை
சாரச் சாரச் சார்ந்து
தீரத் தீரத் தீர்பொல் லாதே.

இதன் முதலடியும் ஈற்றடியும், அளவடி. இரண்டாவது மூன்றாவது அடிகள் குறளடிகள். நாலாவது அய்ந்தாவது அடிகள் சிந்தடிகள். எனவே, இது இணைக்குறள் ஆசிரியப்பா ஆகின்றது.

பல்லோர் துஞ்சு நள்ளென் யாமத்
துரவுக் களிறு போல்வந்
திரவுக் கதவு முயல்
கேளே மல்லேங் கேட்டனம் பெரும
வோரி முருங்கப் பீலி சாய
நன்வயில் வலைப்பட் டாங்கியா
முயங்குதொறு முயங்கு மறனில் யாயே.

இது குறுந்தொகையில் காணப்படும் ஏழடிகளால் வந்த இணைக்குறள் ஆசிரியப்பா. இதன் முதலடியும் கடையடி

-யும் அளவடி. 2 3 6 அடிகள் சிந்தடி. 4, 5 அடிகள் அளவடி இதனில் குறளடிகள் இல்லை இணைக்குறள் ஆசிரியப்பா இவ்வாறும் அமையும்.

சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னே
பெரியகட் பெறினே
யாம் பாடத் தான்மகிழ்ந் துண்ணு மன்னே
சிறுசோற் றானும்
நனிபல கலத்தன் மன்னே
பெருஞ்சோற் றானும்
நனிபல கலத்தன் மன்னே
என்பொடு தடிபடு வழியெலாம்
எமக்கீயு மன்னே
அம்பொடு வேனுழை வழியெலாம்
தானிற்கு மன்னே
நரந்தநாறுந் தன் கையாற்
புலவுநாறு மென்றலை தைவரு மன்னே
அருங்கலை யிரும்பாண ரகனதண் டைத் துளையுரீஇ
இரப்போர் கையுளும் போகிப்
புரப்போர் புன்கண் மார்வை சோர
அஞ்சொனுண் டேர்ச்சிப் புலவர் நாவில்
சென்றுவீழ்ந் தன்றவன்
திருநிறத் தியங்கிய வேலே
அரசர்க் கெந்தை யாண்டுளன் கொல்லோ
இனிப்பாடு நருமில்லை பாடுநருக்கொன்
றீகுநரு மில்லை
பனித்துறை பகன்றை நறைகொள் மாமலர்
சூடாது வைகி யாங்குப் பிறர்கொன்
றீயாது வீயு முயிர்தவப் பயனே.

குறளடிகளும், சிந்தடிகளும், அளவடிகளும் விரவி வந்த இணைக்குறள் ஆசிரியப்பா இது. "புலவுநாறும் என் தலை தைவரும் மன்னே," என்னும் பதின்மூன்றாவது

அடியை, "புலவு நாறு மென்றலை தைவரு மன்னே," என்று நெடிலடியாகவும் நாம் பிரித்து விடலாம். அப்பொழுது, நெடிலடியொன்று இடையே வந்ததற்கும் இது உதாரணமாகும். "நரந்த நாறுந் தன்கையால்," என்ற பன்னிரண்டாவது அடியை, "நரந்த நாறும் தன் கையால்" என்று சிந்தடியாகவும் பிரித்து விடலாம்.

குறிப்பு: நால்வகை ஆசிரியப்பாக்களும் ஏ, என், ஓ, ஈ, ஆய், அய் என்ற அசைகள் ஒன்றினால் முடியவேண்டும் என்று கூறினோம். பண்டை நூல்களில் ஆசிரியப்பாக்கள் பெரும்பாலும் ஏகாரத்தில் முடியக் காண்கிறோம். நேரிசை ஆசிரியத்திற்கு ஏகார முடிவே சிறப்புடைத்தாகக் கருதப் படுகின்றது. மணிமேகலை, சிலப்பதிகார நூல்களில் என் என்னும் அசையில் ஆசிரியம் முடியக் காண்கின்றோம். நிலைமண்டில ஆசிரியத்திற்கு என் என்னும் ஈறு சிறப்புடையதென்பர். ஓ, ஆய், அய், ஈ என்பவற்றை ஈற்றில் கொண்டு முடியும் ஆசிரியங்களும் சிலவுள. நூல்களில் வருமிடங் களில் கண்டு கொள்க.

# 4. கலிப்பா

வெண்பா, ஆசிரியப்பாக்களின் இலக்கணத்தைப் பார்த்தோம். இனிக் கலிப்பாவின் இலக்கணத்தைப் பார்ப்போம்.

வெண்பாவினாலும், அதனினும் அதிகமாக ஆசிரியப் பாவினாலும் பாடப்பெற்ற நூல்கள் பல இருக்கின்றன. ஆனால், கலிப்பாவிலோ, கலித்தொகை என்ற நூலைத் தவிர வேறு நூல் இல்லை. கலித்தொகையும், கலம்பகங் களில் முதற் செய்யுளாய் வரும் கலிப்பாக்களுந்தான் இப்பொழுது நமக்குக் கிடைக்கக் கூடியன.

கற்குங்கால் கற்போர்க்கு இப்பா கஷ்டமானதாகத் தோன்றும். மேலும், இப்பாவினது இலக்கண விரிவை, மாணவர்கள் தெளிந்து கொள்ளல் அத்துணை அவசிய மானதென்று எமக்குத் தோன்றவில்லை. பாடவேண்டும் என்னும் ஆசையுடையோர்க்கு அவசியமானவை பாவில், வெண்பாவும்—ஆசிரியப்பாவும் ; பாவினத்தில் விருத்தமும் —கட்டளைக் கலித்துறையும் ஆகும். எனினும், இப்பாவின் இலக்கணத்தைக் கற்போர் எளிதில் உணர்ந்து கொள்ளும் வழியில் விதிகளை உதாரணங்களுடன் விளக்க முயல் வோம்.

வெண்பாவிற்குச் செப்பலோசையும், ஆசிரியத்திற்கு அகவலோசையும் முறையே உரியதாவனபோல், கலிப் பாவிற்கு உரியதாவது துள்ளலோசை. இத் துள்ள லோ சையும், ''ஏந்திசைத் துள்ளலோசை, அகவல் துள்ள லோசை, பிரிந்திசைத் துள்ளலோசை,'' என்று மூன்று வகைப்படும் என்பதை முன்னரே கூறியுள்ளோம்.

கலிப்பாவிற்குரிய தளை கலித்தளை. காய் முன் நிரை வரின் கலித்தளை விளையும். ஆசிரியம்போல் கலிப் பாவிலும் வேற்றுத் தளைகள் வரலாம். முற்றுங் கலித் தளையே பெற்றுப் பா நடக்குமாயின், ஏந்திசைத் துள்ள லோசையும், கலித்தளையோடு வெண்டளை கலந்துவரின் அகவல் துள்ளலோசையும், வெண்டளையும் ஆசிரியத் தளையும் கலந்துவரின் பிரிந்திசைத் துள்ளலோசையும் பிறக்கும்.

கலிப்பாவில் கலித்தளை மிகுதியாக வரவேண்டு மாதலால் காய்ச்சீர் பாவில் இருக்க வேண்டுவது அவசிய மாகின்றது. அக்காய்ச்சீரும் நிரையசையை முதலிலுடைய கருவிளங்காய், புளிமாங்காய்ச் சீராயிருக்க வேண்டும்.

இயற்சீர்களும் வரலாம். அவை பெரும்பாலும் கருவிள மாய்த் தான் இருக்கும். கூவிளஞ்சீர்களும் அருகி வருவ துண்டு. இயற்சீர்களில் தேமா, புளிமாச் சீர்களும் அபூர்வமாக வருதலும் உண்டு.

கனிச்சீர்களும் அபூர்வமாய் வரக் காண்கின்றோம். கனிச்சீர்கள் வரின், அவை நேரசையை நடுவிலுடைய கனிச் சீர்களாகவே இருக்கவேண்டும். நிரையசையை நடுவிலுடைய கூவிளங்கனி, கருவிளங்கனிச் சீர்கள் வரலாகாது.

வெண்பா, ஆசிரியப்பாக்களைப்போல், கலிப்பாவிற் கும் நான்கு சீர்களாலான அளவடிகளே உரியவை. இவ் விதிகளுக்கு அடங்கி நடப்பது கலிப்பா.

வெண்பா, ஆசிரியப்பாக்களைப் போலல்லாமல் கலிப்பா, பொருளின் போக்கிற்கு ஏற்றபடி பல உறுப்புக் களை ஏற்று நடக்கும். கலிப்பாவின் உறுப்புக்கள்,

1. தரவு
2. தாழிசை
3. அராகம்
4. அம்போதரங்கம்
5. தனிச் சொல்
6. சுரிதகம்

என்பவை.

இவ்வுறுப்புகளின் அமைப்புக்குத் தக்கவாறு கலிப்பா,

1. ஒத்தாழிசைக் கலிப்பா
2. வெண்கலிப்பா
3. கொச்சகக் கலிப்பா

என்று மூன்று வகைப்படும். இவற்றில், ஒத்தாழிசைக் கலிப்பா,

1. நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பா
2. அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பா
3. வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா.

என்னும் மூன்று வகைப் பிரிவுகளை உடையது. வெண் கலிப்பாவில் பிரிவுகள் இல்லை. கொச்சகக் கலிப்பாவோ,

1. தரவு கொச்சகம்
2. தரவிணைக் கொச்சகம்
3. சிஃறாழிசைக் கொச்சகம்
4. பஃறாழிசைக் கொச்சகம்.
5. மயங்கிசைக் கொச்சகம்.

என்ற அய்ந்து பிரிவுகளை உடையது.

இனிக் கலிப்பா இலக்கணத்தை அறிவோம். அதன் முன், கலிப்பாவிற்குரிய எல்லா உறுப்புக்களையும் முற்றப் பெற்று நடக்கும் செய்யுளொன்றை உதாரணமாக எடுத்துக் கொள்வோம்.

1. சீர்பூத்த செழுங்கமலத் திருத்தவிசின் வீற்றிருக்கும்
நீர்பூத்த திருமகளு நிலமகளு மடிவருடச்
சிறைப்பறவை புறங்காப்பச் சேனையர்கோன் பணிகேட்ப
நறைப்படலைத் துழாய்மார் பினாயிறுபோன் மணிவிளங்க
அரியதா னவர்க்கடிந்த வைம்படையும் புடைதயங்கக்
கரியமால் வரைமுளரிக் காடீன்று கிடந்தாங்குப்
பாயிரநான் மறைபரவப் பாற்கடலுட் பருமணிச்சூட்
டாயிரவாய்ப் பாம்பணைமே லறிதுயிலி னினிதமர்ந்தோய் !

3. மண்ணகந் துயர்நீங்க வானகந் தொழுதேத்தக்
கண்ணகன் சோணாட்டுக் காவிரிவாய்ப் புளினத்துப்
பம்புகதிர் விசும்பிரவி பசும்புரவி வழிவிலங்கு
செம்பொன்மதி லேழுடுத்த திருவரங்கப் பெருங்கோயில்
ஆணிப்பொற் றகடுரிஞ்சு மணிக்கதவ நீள்வாயில்
மாணிக்க வெயில்பரப்பும் வயிரமணி விமானத்துள்
மின்னிலங்கு தொடிவலைய வியன்வலக்கை கீழ்க்கொடுத்துத்
தென்னிலங்கைத் திசைநோக்குத் திருநயனந்துயில் வோய்கேள்.

இவை இரண்டும் எட்டடித்தரவு. இது கலிப்பாவின் முதல் உறுப்பு. இதை அடுத்து வருவது தாழிசை என்னும் உறுப்பு.

1. தேவராய்த் தேவர்க்குந் தெரியாத வொளியுருவாய்
மூவராய் மூவர்க்குண் முதல்வனாய் நின்றோய்நீ

2. போற்றுவார் போற்றுவதுன் புகழ்ப்பொருளே யாதலினால்
வேற்றுவா சகமடியேன் விளிம்புமா றறியேனால்

3. பணித்தடங்கா திமையவர்க்கும் பங்கயத்தோள் முதலோர்க்கும்
பணித்தடங்காப் புகழடியேன் பணித்தடங்கற் பாலதோ

4. யாங்கடவு ளென்றிருக்கு மெவ்வுலகிற் கடவுளர்க்கும்
ஆங்கடவு ணீயென்றா லஃதுனக்கு வியப்பாமோ

5. அனைத்துலகு மனைத்துயிரு மமைத்தளித்துத் துடைப்பதுநீ
நினைத்தவினை யாட்டென்றா னின்பெருமைக் களவாமோ

6. கருதரிய வுயிர்க்குயிராய்க் கரந்தெங்கும் பரந்துறையும்
ஒருதனிநா யகமென்றா லுன்புகழ்க்கு வரம்பாமோ !

இவை ஆறும் ஈரடித்தாழிசை. இது பாவின் இரண்டாவது உறுப்பு. தரவையும், தாழிசையையும் பாமுதலுறுப்பு என்றும், மற்றவைகளைத் துணையுறுப்பு என்றும் பிரித்துக் கொள்கின்றனர்.

1 உருவென வருவென வுளனென விலனென
அருமறை யிறுதியு மறிவரு நிலைமையை

2. இவரிவ ரிறையவ ரெனமன வுறுதியொ
டவரவர் தொழவுறு சமயமு மருளினை

3. கடுவளி கனல்புனல் ககனமோ டகலிடம்
உடுபதி கதிரவ னுருவமு மருளினை

4. கடிமல ரடியிணை கருதினர் பெறுகென
அடிநடு முடிவற வருள்பர கதியினை.

இவை நான்கும் ஈரடி அகாரம். இது பாவின் மூன்றாவது உறுப்பு.

1. ஒருநாலு முகத்தவனோ டுலகீன்றா னென்பரதுன்
திருநாபி மலர்ந்ததல்லாற் றிருவுளத்தி லுணராயால்

2 மேருகிரி யுடலவுணன் மிடல்கெடுத்தா னென்பரதுன்
கூருகிரே யறிந்ததல்லாற் கோவேநீ யறியாயால்

3. பன்றியாய்ப் படியெடுத்த பாழியா னென்பரது
வென்றியாருன தெயிற்றின் மென்துகள்
போன்றிருந்ததால்

4. அண்டமெலா முண்டையென்ப ரறியாதா ராங்கவைநீ
உண்டருளுங் காலத்தி லொருதுற்றுக் காற்றாவால்

இவை நான்கும் ஈரடித்தாழிசை. இரண்டாவது உறுப்பான தாழிசை, மூன்றாவது உறுப்பான அராகத்தின் பின் மறுபடியும் இப்பாவில் வந்துளது.

1. நஞ்சமு மமுதமு நரகும் வீடுமாய்
வஞ்சமு ஞானமு மறப்பு மாயினை

2. இருவினைப் பகுதியு மின்ப துன்பமும்
கருணையும் வெகுளியுங் கருத்து மாயினை

இவை யிரண்டும் ஈரடி அம்போதரங்கம். அளவடிகளால் ஆனவை.

1. அலைகடல் வயிறு கலக்கினை

2. அவுணரை மதுகை யடக்கினை.

3. மலைகட களிறு வதைத்தனை

4. மலைதலை கவிழ வெடுத்தனை.

இவை நான்கும் சிந்தடிகளாலான ஓரடியம்போதரங்கம்.

1. மண்ணனை விண்டனை
2. வெண்ணெ யுண்டனை
3. மருதி டந்தனை
4. எருத டர்ந்தனை
5. உண்ணி றைந்தனை
6. எண்ணி றந்தனை
7. ஒருமை யாயினை
8. பெருமை மேயினை

இவை எட்டும் குறளடிகளாலான ஓரடியம்போ தரங்கம். இது பாவின் நாலாவது உறுப்பு

என வாங்கு

இது தனிச் சொல். செய்யுள் முடிவை ஆரம்பித்து வைக்கும் உறுப்பு.

மலர்தலை யுலகத்துப் புலமை சான்ற
பதின்மரும் பணித்த பாடலோ தையொடு
முதுமறை கறங்க முரச மார்ப்ப
வளம்புரி பிளிறும் பொலம்புரி கோயில்
ஆழியஞ் செல்வ வாதியம் பரம
வாழி வாழி மாயோய் வாழி
நெடியோய் வாழி நின்மாட் டொன்றெ
அடியேன் வேண்டுவ தஃதுநீ மறுக்கேல்
பூவரு மயன்முதல் யாவரு மறியா
மூவுல களந்தநின் சேவடி வாழ்த்தித்
தொழுதகைத் தொண்டர்தந் தொண்டருட் சேர்க்கஎ
தெழுவகைத் தோற்றத் தின்னாப் பிறப்பின்
என்பொழி யாக்கையுட் சேர்ப்பினு மவர்பால்
அன்பொழி யாமை யருண்மதி யெனக்கே.

இது, பதினான்கடிகளால் வந்த நிலைமண்டில ஆசிரியச் சுரிதகம். செய்யுளை முடிக்கும் உறுப்பு இச் சுரிதகம். தாழிசை, இப்பாவில் அராகத்திற்குப் பின் மறு படியும் வந்திருப்பதால் இதை மயங்கிசைக் கொச்சகம் என்றழைப்பர்.

கலிப்பா வகைகளின் இலக்கணத்தை அறியுமுன், தரவு முதலிய கலிப்பா உறுப்புகளின் தன்மை, இடங்களைத் தெளிந்து கொள்ளல் நலமாதலால், அவற்றை விளக்குவோம்.

1. தரவு: கலிப்பாவின் முதல் உறுப்பு இது. செய்யுளின் விஷயத்தை ஆரம்பித்துத் தருவது இதன் காரியம்

தரவு என்னும் இவ்வுறுப்பு மூன்றிற்குக் குறையாத பல அடிகளால் அமையும். தரவின் பேரெல்லை பன்னிரண்டு அடிகள்.

தரவில் பெரும்பாலும் புளிமாங்காய், கருவிளங்காய்ச் சீர்களே வரும்.

கலிப்பாவின் முக்கியமான உறுப்பு இத்தரவு. (எனி னும் கொச்சகம் ஒருபோகு என்னுச் செய்யுள் தரவு இல்லாமலும் வரும்.) சில கலிப்பாக்களில் இரண்டு தரவும் இருக்கக்கூடும். நாம் உதாரணமாக எடுத்துக் கொண்ட பா இரண்டு தரவுகளை உடையது.

தரவு என்பதற்கு எருத்தம் என்ற மற்றொரு பெயரும் உண்டு. எருத்தம் என்றால் பிடரி. இங்கே செய்யுளின் தலையைக் குறிப்பதாகக் கொள்ளலாம்.

2. தாழிசை: இது கலிப்பாவின் இரண்டாவது உறுப்பு. தாழ்ந்து இசைப்பதால் இதற்கு இப்பெயர் வரலா

யிற்று. தரவு எடுத்துத் தந்த விஷயத்தை வளர்க்குத் தன்மையது தாழிசை.

புளிமாங்காய், கருவிளங்காய்ச் சீர்களை இது அதிக மாகப் பெற்று நடக்கும்.

தாழிசைகள், இரண்டு, மூன்று, நான்கு அடிகளை உடையனவாய் இருக்கலாம். எனினும், தரவின் அடி களைக் காட்டிலும் தாழிசையின் அடிகள் குறைவாய் இருக்கவேண்டும். ஒரு கலிப்பாவின் தரவு மூன்றடிகளை உடையதாயின் தாழிசை இரண்டடிகளை உடையதாய் இருக்கவேண்டும். நாலடித்தரவாயின், தாழிசையின் அடி இரண்டேனும் மூன்றேனும் இருக்கலாம். தரவின் அடி நான்கிற்கு அதிகமாயின், தாழிசை இரண்டு, மூன்று, நான்கு அடிகளைப் பெற்று நடக்கலாம்.

ஒரு கலிப்பாவினுள் தாழிசை மூன்றேனும், ஆறேனும் வரலாம். பன்னிரண்டு தாழிசைகளைக் கொண்ட கலிப் பாக்களும் சில இருக்கின்றன.

தாழிசைகள் ஒரு பொருளைப் பலவகையில் விவரித்துக் காட்டுந் தன்மையின வாகும். தரவோ ஒருவனைக் கூப்பிடுவது போன்ற அமைப்பை உடையது. தாழிசை யோ, அழைத்தவனிடம் ஒன்று கேட்டல், அல்லது ஒன்று கூறல் போன்ற அமைப்பினது.

ஒன்றையே பலவிதமாக அடுக்கியடுக்கிக் கூறும் இயல் பினதான தாழிசையின் முடிவுகள் எல்லாம் ஒரே விதமாகத் தான் இருக்கும். தாழிசைக்கு இடைநிலைப் பாட்டு என்ற பெயரும் உளது.

3. அராகம் : இது கலிப்பாவின் மூன்றாவது உறுப்பு. இவ்வுறுப்பைப் பெறாமல் நடக்கும் கலிப்பாக்களும் உண்டு. இது பெரும்பாலும் கருவிளச்சீர்களைப் பெற்று, ஒலியளவு

குறைவதும் மிகுவதுமின்றி முடுகிச் செல்லும் நடையை உடையது. எனவே இதற்கு முடுகியல் என்ற பெயரும் உளது.

பாவின் விஷயத்தை ஆரம்பித்துத் தருவது தரவு. ஒன்றினைக் கேட்பது, அல்லது எடுத்துச் சொல்லுவது போன்ற அமைப்பினது தாழிசை. ஒன்றைப் பாராட்டி வர்ணிக்கும் இயல்பினது அராகம். ஆதலின் இதற்கு வண்ணம் என்ற பெயரும் உண்டு. அடுக்கியல் என்றும் இதை அழைப்பர்.

அராகங்கள் நான்கு சீர்களைக் கொண்ட அளவடிக்குக் குறைந்த சீர்களைக் கொண்ட சிந்தடி, குறளடிகளால் வாரா. நெடிலடிகளும், கழிநெடிலடிகளும் வரலாம்.

இத்தகைய அடிகள், அளவில் நான்கிற்குக் குறை யாமலும் எட்டிற்கு மிகாமலும் இருக்கவேண்டும். இரண் டடிகளை உடைய நான்கு அராகங்கள் வருதலுங் கூடும்.

அ ரா க ம் ஒவ்வொன்றும் ஒவ்வொரு பொருளின் வர்ணனையைக் கூறி முடிப்பதாய் இருக்கும். ஓரடியில் பொருள் முடிந்தால் ஓரடியராகம். இரண்டடியில் பொருள் முடிந்தால் ஈரடியராகம்.

4. அம்போதரங்கம் : இது அராகத்தை அடுத்து வரும் உறுப்பு. தரங்கம் என்றால் அலை. கடல் அலை கரையை யடைகையில் சுருங்குவதுபோல், இவ்வுறுப்பும் முதலில் அளவடிகளாலும், பின் சிந்தடி குறளடிகளாலும் குறைந்து வருவதால், அம்போதரங்கம் என்ற பெயா பெறுவதாயிற்று.

ஒன்றை வர்ணித்துக் கொண்டாடுவது அராகத்தின் காரியம் என்றோம். அம்போதரங்கங்களோ, ஒன்றின்

அருள் வீரம் முதலியவற்றால் நிகழும் கருமங்களின் பெருமையைப் பலபடி பாராட்டும் தன்மையது.

இது, பேரெண், அளவெண், இடையெண், சிற்றெண் என்ற நான்கு உறுப்புக்களை உடையது. இரண்டிரண்டு அடிகளைக் கொண்ட அம்போதரங்கம் இரண்டு, பேரெண் எனப்படும். அளவடி ஒவ்வொன்று கொண்ட நாலு அம்போதரங்கம், அளவெண் எனப்படும். சிந்தடிகள் எட்டுக் கொண்ட அம்போதரங்கம், இடையெண். குறளடிகள் பதினாறு கொண்டது, சிற்றெண். எட்டும் பதினாறுமாய் இருக்கவேண்டிய இடையெண்ணும் சிற்றெண்ணும், நான்கும் எட்டுமாகச் சுருங்கி வருதலும் உண்டு.

அம்போதரங்க அடிகளில் காய்ச்சீர்களும், இயற்சீர்களும் விரவி வரலாம். சிற்றெண்ணில் ஓரசையே சீராகிய அசைச்சீர்களும் வருவதுண்டு. அசையடி, பிரிந்திசைக்குறள், சொற்சீரடி, எண் என்பன அம்போதரங்கத்தின் மறு பெயர்கள்.

5. தனிச் சொல்: இது செய்யுளின் முடிவைத் தெரிவிக்க வரும் உறுப்பு. பொருளின் தொடர்புடைய தாய், ஓரசை, அல்லது ஒரு சீர் தனித்து, நிற்றல், இதன் இலக்கணம். விட்டிசை, கூன், தனிநிலை, அடைநிலை என்பன இதன் மறுபெயர்கள்.

6. சுரிதகம்: கலிப்பாவை முடித்து வைக்கும் இறுதி உறுப்பு இது. இவ்வுறுப்புப் பெரும்பான்மை ஆசிரியப்பாவினாலும், சிறுபான்மை வெண்பாவினாலும் அமையும். அடக்கியல், வாரம், வைப்பு, போக்கியல் என்பன இதன் மறு பெயர்கள்.

மேலே கூறிய விளக்கத்தை மனத்தில் கொண்டு யாம் வரைந்து காட்டிய உதாரணச் செய்யுளை நோக்கி உறுப்புக்களின் இயல்பைக் கற்போர் தெளிந்து கொள்ளல் நலம்.

இப்பா வுறுப்புக்கள் சிலவும் பலவுமாகச் சேர்ந்து அமையும் முறையில் கலிப்பா பலவகைப் படுவதாகின்றது.

## 1. ஒத்தாழிசைக் கலிப்பா

ஒரு தரவு, மூன்று தாழிசை, தனிச்சொல், சுரிதகம் பெற்று வருவது ஒத்தாழிசைக் கலிப்பா. இது, நேரிசை ஒத்தாழிசை, அம்போதரங்க ஒத்தாழிசை, வண்ணக ஒத்தாழிசை என்று மூன்று வகைப்படும். இம் மூன்று வகைக் கலிப்பாக்களிலும், மூன்று தாழிசைகள் ஒத்துவருதலால், இது ஒத்தாழிசைக் கலிப்பா என்ற பெயர் பெறுவதாகின்றது.

### (1) நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பா :

ஒரு தரவு, மூன்று தாழிசைகள், தனிச் சொல், வெண்பா அல்லது ஆசிரியப்பாவினால் வந்த சுரிதகம் பெற்று நடப்பது நேரிசை ஒத்தாழிசை. இரண்டோர் உதாரணங்களைப் பார்ப்போம் :

#### தரவு

வாணெடுங்கண் பனிகூர வண்ணம்வே றாய்த்திரிந்து
தோணெடுந் தகைதுறந்து துன்பங்கூர் பசப்பினளாய்ப்
பூணொடுங்கு முலைகண்டும் பொருட்பிரிதல்
வலிப்பாரோ

(செய்யுளின் முதலுறுப்பான இது, விஷயத்தை ஆரம்பித்துத் தரும் மூன்றடித் தரவு.)

#### தாழிசை

(1)

குருகுடைய கடுங்கடங்கள் சொலற்கரிய வென்பவால்
பீருடைய நலந்தொலைய பிரிவாரோ பெரியவரே !

(2)

சேணுடைய கடுங்கடங்கள் செலற்கரிய வென்பவால்
தாணுடைய நலந்தொலைய நடப்பாரே நலமிலரே !

(3)

சிலம்படைந்த வெங்கானஞ் சிலரிலவே யென்பவால்
புலம்படைத்த நலந்தொலையப் போவாரோ
பொருளிலரே !

(இவை மூன்றும் ஒரு பொருள்மேல் அடுக்கி வந்த ஈரடித் தாழிசை.)

## தனிச் சொல்

எனவாங்கு,

(இது பாவின் முடிவைத் தெரிவிக்கும் தனிச் சொல்.)

## சுரிதகம்

அருளேனு மிலராய்ப் பொருள்வயின் பிரிவோர்
பன்னெடுங் காலமும் வாழியர்
பொன்னெடுந் தேரொடு தானையிற் பொலிந்தே.

(பாவின் இறுதியுறுப்பான இச் சுரிதகம், நேரிசை ஆசிரியத் தால் அமைந்தது.)

இப்பா, மூன்றடித் தரவு ஒன்றும், ஈரடித்தாழிசை மூன்றும், தனிச் சொல்லும், மூன்றடி ஆசிரியச் சுரிதகமும் பெற்று வந்த நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பா.

வெண்பாவால் அமைந்த சுரிதகத்தை ஈற்றில் பெற்ற நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பாச் செய்யுள் ஒன்றைப் பார்ப் போம்.

தரவு

உண்கடன் வழிமொழிந் திரங்குங்கான் முகனுந்தாங்
கொண்டது கொடுக்குங்கான முகனும்வே றாகுதல்
பண்டுமிவ் வுலகத் தியற்கை யஃதின்றும்
புதுவ தன்றே புலனுடை மாந்தர்
தாயுயிர் பெய்த பாவை போல
நலனுடை யார்மொழிக்கட் டாவார்தாந் தந்நலம்
தாதுசேர் பறவையி னருந்திறல் கொடுக்குங்கால்
ஏதிலார் கூறுவ தெவனொ நின் பொருள் வேட்கை.

(இது எட்டு அடிகளால் வந்த கலிப்பாவின் முதல் உறுப்பான தரவு )

தாழிசை

(1)

நறுமுல்லை நேர்முகை யொப்ப நிரைத்த
செறிமுறை பாராட்டி னாய்மற்றெம் பல்லின்
பறிமுறை பாராட் டினையோ வைய

(2)

நெய்யிடை நீவி மணியொளி விட்டன்ன
வைவகை பாராட்டி னாய்மற்றெங் கூந்தல்
செய்வினை பாராட் டினையோ வைய.

(3)

குளனணி தாமரைப் பாசரும் பேய்க்கும்
இளமுலை பாராட்டி னாய்மற்றெம் மார்பின்
தளர்முலை பாராட் டினையோ வைய.

(இவை மூன்றும் மூன்றடிகளாலான தாழிசை.)

தனிச் சொல்

எனவாங்கு,

(இது பாவின் முடிவைக் குறிக்கும் தனிச் சொல்)

சுரிதகம்

அடர்பொ னவிரேயக்கு மவ்வரி வாடச்
சுடர்காய் சுரம்போகு நும்மையா மெங்கண்
படர்கூற நின்றது முண்டோ தொடர்கூரத்
துவ்வாமை வந்தக் கடை.

(இது வெண்பாவினால் வந்த சுரிதகம். இதை வெள்ளைச் சுரிதகம் என்றுங் கூறுவர்.)

இக்கலிப்பாட்டு, எட்டடித் தரவும், மூன்றடித்தாழிசை மூன்றும், தனிச்சொல்லும், வெண்பாச் சுரிதகமும் பெற்ற நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பா.

தரவு மூன்றடி முதல் பன்னிரண்டடி வகையில் வரலாம். நான்கடிகளைக் கொண்டும் தாழிசை நடக்கலாம். தாழிசையின் சிற்றெல்லை இரண்டு; பேரெல்லை நான்கு. கலிப்பாக்களுள் இது சிறப்புடையதாகக் கருதப்படுவதால் நேரிசை ஒத்தாழிசை என்ற பெயரினது ஆகின்றது.

சுரிதகம், நேரிசை ஆசிரியப்பாவாக இருக்கலாம். நிலைமண்டில ஆசிரியப்பாவாகவும் இருக்கலாம். அல்லது இணைக்குறள், அடிமறிமண்டில ஆசிரியப்பாக்களாகவும் இருக்கலாம். அல்லது, நேரிசை முதலிய வெண்பாக்களில் ஒன்றாகவும் இருக்கலாம். எனவே, இதற்கு நேரிசை என்ற அடைமொழி சுரிதகங் கருதி வந்ததன்று என்பது தெரிய வருகின்றது.

## (2) அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பா :

நேரிசை ஒத்தாழிசைக்குரிய உறுப்புக்களையெல்லாம் பெற்றுத் தாழிசைக்கும் தனிச் சொல்லுக்கும் இடையில் அம்போதரங்கம் என்னும் உறுப்பினைக்கொண்டு அமைவது, அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பா. தரவு, தாழிசை, அம்போதரங்கம், தனிச்சொல், சுரிதகம் என்ற முறையில் உறுப்புக்கள் அமைந்து நிற்கும்.

இப்பா, பெரும்பாலும் இறைவனைப் பரவுதலை விஷயமாகக் கொண்டதாகும் எனவே, அம்போதரங்கம் என்னும் உறுப்பு இறைவனது ஆற்றல் குணம், செயல்களைப் போற்றும் பகுதியாகின்றது. இது அளவடியில் ஆரம்பமாகி, அலைகள் கரை சேருகையில் அளவில் குறைவது போல், சிந்தடியும், குறளடியுமாய் அளவு குறைந்து முடிவுறும். இவ்வுறுப்பிற்கு எண் என்ற பெயரும் உளது.

புகழிற்குரியதாய்ப் பாராட்டப்படும் பல விஷயங்களில், ஒவ்வொன்றையும் தனித்தனியே கூறி முடிக்கின்ற அடிகளைத் தனித்தனி எண்களாகக் கொள்கின்றனர். அவ்வாறு கொள்ளுங்கால் அம்போதரங்கம் என்னும் இவ்வுறுப்பானது, பேரெண், அளவெண், இடையெண், சிற்றெண் என்று நான்குவித எண்களைக் கொள்வதாகின்றது.

1. நாற்சீரடி இரண்டுடைய இரண்டு அம்போதரங்கம்—பேரெண்.
2. நாற்சீரடி ஒவ்வொன்று கொண்ட நான்கு அம்போதரங்கம்—அளவெண்.
3. சிந்தடி ஒவ்வொன்றும் கொண்ட எட்டு அம்போதரங்கம்—இடையெண்.
4. குறளடி ஒவ்வொன்று கொண்ட பதினாறு அம்போதரங்கம் - சிற்றெண்.

குறிப்பு : இடையெண் எட்டும், சிற்றெண் பதினாறும் வருவதே சிறப்புடைத்து. எனினும், சில அம்போதரங்க ஒத்தாழிசைகளில் இடையெண் நான்கும், சிற்றெண் எட்டு மாக வரக் காண்கிறோம்.

உதாரணம் :

தரவு

அண்டரண்ட பகிரண்ட முழுவதுமீன் றகத்தடக்கிக்
கொண்டபெரும் பாழினுக்கு ஞாங்கரதாய்க் குளிருதிரை
மண்டுபெரும் புனல்வரிசைக் கப்புறத்தாய் மதிநலந்தோய்
தொண்டரினம் பேரின்பத் துறை யிலத் தாமத்துள்
அருணவியங் கதிருதைய மலகிறந்தொண்
டியத்தொன்றாய்த்
திருமணிமண் டபத்தினுளிந் திரையுடன்வீற் றிருந்துளாய்.

(இது, காய்ச்சீர்களும், கனித்தளைகளும் மிகுந்த அளவடி ஆறுடைய தரவு.)

தாழிசை

(1)

இலகியவான் சுடர்விளக்கி யெழுதருபல் பந்தமெனா
உலகொருநான் கினுமதன்க ணொருநால்வ
ரெனும்படித்தாய்
நிலவலயத் தடைவடைவே நிரைத்துளதீ விருமுன்றுஞ்
சுலவியபால் கடலரவிற் றுயிலுவந்த வொருமுதலாய்

(2)

மீனாவ தாரமுதன் மேதினிமேல் வருகற்கி
தானாக வுனக்குமொரு தந்தைதா யுளவெனலாய்
ஊனார்பைக் குரம்பையினோ டுகந்தோறு முகந்தோறு
மானாதிங் கமைபருவத் தங்குமமை பவனாகி.

(3)

ஏழ்வகைத்தாய் நால்வகைத்தோற் றத்திசைந்து மீனத்துளதம்
ஊழ்வகைத்தா யலம்போது முயிர் கடோறும் பிரியாது
வாழ்வகைத்தாய்ப் புனற்சொரிந்து மலர்தூவி வழிபடுதற்
காழ்கடற்பா ராடியவர்பா லங்கங் கமர்ந்துளாய்.

(இவை மூன்றும் நான்கடிகளாலான தாழிசை.)

குறிப்பு: தாழிசை மூன்றும் ஒரு பொருளை மூன்று விதமாய்த் தனித்தனி கூறி நிற்றலே முறை. ஆனால், அவை மூன்றும், ஒரு பொருளை ஒரே விதமாய்த் தொடர்ந்து கூறலுங் கூடும் என்பதை இச்செய்யுள் தெரிவிக்கிறது. இவ்வாறு தாழிசைகள் அமையும் செய்யுள்களும் சிலவுள.

## அம்போதரங்கம்

பேரெண்:

(1)

பேதைமையா லிறந்துபிறந் துழல்வனெனப் பேதுறா
முதறிவா ரழியாத முதல்வனெனத் தெரிந்துளாய்

(2)

சாபத்தா லிழுக்க முறாத் தலைமையாய்ச் சாபமடைந்
தாபத்தா யினர்சரண மடைதருமாங் கருள்புரிவாய்.

(அளவடி இரண்டுடைய அம்போதரங்கம் இரண்டு இது. இரண்டிரண்டு அடியில் பொருள் முற்றுவதால் இது பேரெண் ஆகின்றது.)

அளவெண்:

(1)

வேதனுமுற் றுணர்வலெனி லறிவறிய மேன்மையாய்

(2)

ஆதரவுற்றிடு மெளியர்க் கறிவெளிய பான்மையாய

(3)

நினைவர்தா நினைவுறுமவ் வுருவமதாய் வெளிநிற்பாய்

(4)

அனைவருங்கண் டால்வியப்புற் றாசிபகர்ந் தெழுபொற்பாய்

(ஓரளவடியாலான அம்போதரங்கம் நான்கு. ஒவ்வோரடியும் பொருள் முற்றி நிற்பது காண்க. ஒவ்வோரடியும் பொருள் முற்றி நிற்றலால் அளவெண் ஆகின்றது.)

இடையெண் :

1. திகிரியை யுயர்வலந் தரித்துளாய்
2. திகழ்வரி வளையிடம் பரித்துளாய்
3. புகர்முக மதமலை சொலச் செல்வாய்
4. பொருமுத லையினுயிர் செலக்கொல்வாய்
5. இரணியன் மார்பது பிளந்துளாய்
6. இருநில மூவடி யளந்துளாய்
7. அரணிய லார்கவி யடைத்துளாய்
8. அதனிடை யேழ்மதின் படைத்துளாய்

(பொருள் முற்றிய தனித்தனிச் சிந்தடிகளைக் கொண்ட அம்போதரங்கம் எட்டு.)

சிற்றெண் :

1. தேனிமிர் துளபத்தாய்
2. செனனம துளபத்தாய்
3. ஈனர திடமெய்தாய்

4. எழுமெழு மரமெய்தாய்
5. அலகையி னுயிர்கொன்றாய்
6. அலநல தருகொன்றாய்
7. உலகம துறுதுப்பாய்
8. உரலிடை யடர்துப்பாய்
9. மறைமொழி யினுமெட்டாய்
10. வரைபொரு ளுரையெட்டாய்
11. உறைதயி ரதுகட்டாய்
12. உரைபுகழ் பலகட்டாய்
13. அகன்மலை கவிகையுளாய்
14. அழல்பெறு கவிகையுளாய்
15. சகடம துதைமைந்தாய்
16. தகவி னருண்மைந்தாய்

(தனித்தனி பொருள் முற்றிய குறளடிகளைக் கொண்ட அம்போதரங்கம் பதினாறு.)

## தனிச் சொல்

எனவாங்கு.

(செய்யுள் முடிவைத் தெரிவிக்கும் உறுப்பு.)

## சுரிதகம

பரத்துவ முதலாய்ப் பரந்துள வைத்தாய்
வரத்துடன் மூவுரு வாகிய வரத
திருக்குரு கூரநின் திருவடி வழுத்தும்
எங்கோன் திருமகிழ் மார்பின் னியற்றமிழ்
ஊழிதோ றூழியெவ் வுலகினும்
வாழிய தாக வளர்க்கநீ யெனவே.

[illegible] டையாய நீ

(ஒரு சிந்தடியாலான நான்கு அம்போதரங்கம்.)

இடையெண் நான்கும், சிற்றெண் எட்டுங் கொண்டு நடக்கும் அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பா ஒன்றினை உதாரணமாகப் பார்த்துப் பின் மேலே தொடர்வோம்.

### தரவு

கெடலரு மாமுனிவர் கிளர்ந்துடன் தொழுதேத்த
கடல்கெழு கனைசுடரிற் கலந்தொளிரும் வாலுளைய
அழலவிர் சுழல்செங்க ணரிமாவாய் மலைந்தானைத்
தாரொடு முடிபிதிரத் தமனியப் பொடிபொங்க
ஆர்புன லிழிகுருதி யகலிட முடனனைப்பக்
கூருகிரான் மார்பிடந்த கொலைமலி தடக்கையோய்.

(இது ஆறடிகளாலான பாவின் முதலுறுப்பான தரவு.)

### தாழிசை

(1)

முரசதிர் வியன்மதுரை முழுவதூஉந் தலைபணிப்ப
புரைதொடித் திரண்டோட் போர்மலைந்த மறமல்லர்
அடியொடு முடியிறுப்புண் டயர்ந்தவ ணிலஞ்சேரப்
பொடியெழ வெங்களத்துப் புடைத்ததுநின் புதமாமோ !

(2)

கலியொலி வியனுலகங் கலந்துட னனிநடுங்க
வலியிய லவிராழி மாறெதிர்ந்த மருட்சோர்வு
மாணாதா ருடம்போடு மறம்பிதிர வெதிர்கலங்கச்
சேணுய ரிருவிசும்பிற் சேர்த்ததுநின் சினமாமோ !

(3)

---

2. சென்னம துளபத்தாய்
3. ஈனர திடமெய்தாய்

வெரிதொடு மருப்பொசிய வீழ்ந்துதிறல் வேறாக
எருமலி பெருந்தொழுவி னிறுத்ததுநின் னிகலாமே !

(இவை மூன்றும் நான்கடிகளாலான இரண்டாவது உறுப்பான தாழிசை )

## அம்போதரங்கம்

பேரெண் :

(1)

இலங்கொளி மரகத மெழின் மிகு வியன்கடல்
வலம்புரித் தடக்கை மால நின்னிறம்

(2)

விரியிணர்க் கோங்கமும் வெந்தெரி பசும்பொனும்
பொருகளி றட்டோய் புரையு நின்னுடை

(இவை இரண்டிரண்டு அளவடிகளினாலாகிய இரண்டு அம்போதரங்கம்.)

அளவெண் :

1. கண்கவர் கதிர்முடி கனலுஞ் சென்னியை
2. தண்சுட ருறுபகை தவிர்த்த வாழியை
3. ஒலியிய லுவண மோங்கிய கொடியினை
4. வலமிகு சகட மாற்றிய வடியினை

(ஓரளவடியாலான நான்கு அம்போதரங்கம் )

இடையெண் :

1. பேரவுணர்க் கடந்தோய் நீ
2. புணர்மருதம் பிளந்தோய் நீ
3. நீரகல மளந்தோய் நீ
4. நிழறிகழைம் படையோய் நீ

(ஒரு சிந்தடியாலான நான்கு அம்போதரங்கம்.)

சிற்றெண் :

(1) வாழி நீ (5) ஆழி நீ
(2) உலகு நீ (6) அருளு நீ
(3) உருவு நீ (7) அறமு நீ
(4) அருவு நீ (8) மறமு நீ

(குறளடி ஒன்றாலான எட்டு அம்போதரங்கம்)

## தனிச் சொல்

எனவாங்கு,

(செய்யுள் முடிவைக் குறிக்கும் சொல்.),

## சுரிதகம்

அடுதிற லொருவநிற் பரவுது மெங்கோன்
தொடுகழற் கொடும்பூட் பகட்டெழின் மார்பில்
கயலொடு கலந்த சிலையுடைக் கொடுவரிப்
புயலுறழ் தடக்கைப் போர்வே லச்சுதன்
தொன்று முதிர்கட லுலக முழுதுடன்
ஒன்று திகிரி யுருட்டுவோ னெனவே.

(இது ஆறடி ஆசிரியச் சுரிதகம்.)

இப்பாவில், இடை யெண்ணிலும், சிற்றெண்ணிலும் நீ என்ற அசை, ஒரு சீராக நிற்கின்றது. வெண்பாவின் ஈற்றைப்போல், அசைச் சீர் வருமிடங்களில் இதுவும் ஒன்று என்று கொள்ளலாம். சிலர், நீ என்பதை நீஇ என அளபெடையாகக் கொள்கின்றனர்.

அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பா, வெண்பாச் சுரிதகம் பெற்று நடப்பதை இலக்கிய நூல்களில் காண்கிலம்.

எனவே, வெண்பா இக் கலிப்பாவில் ஈறாதற்கில்லை என்றே நினைக்கின்றோம்.

## (3) வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா:

கலிப்பாவிற்குரிய, தரவு, தாழிசை, அராகம், அம்போதரங்கம் முதலிய ஆறுருப்புக்களையும் முறையே பெற்று நடப்பது வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா ஆகும். ஒன்றை வர்ணிக்கும் உறுப்பு அராகம்.

"விண்ணோர் விழுப்பமும் வேந்தரது புகழும்
வண்ணணித்து வருதலின் வண்ணகம் என்ப."

என்று கூறுவார் ஒரு காரிகை வித்தகர். ஒன்றினை வர்ணித்துக் காட்டலால் அதற்கு வண்ணகம் என்ற பெயர் வந்தது.

ஒவ்வோர் அராகமும் ஒரு வர்ணனையைத் தன்னுள் அடக்கிக் கொண்டிருக்கும். அராக அடியின் சிற்றெல்லை நான்கு சீர்களைக் கொண்ட அளவடி. பதின்மூன்றிற்கு மேற்படாத சீர்களைக் கொண்டும் அராகவடிகள் நடக்கலாம் அத்தகைய அராகங்கள் நான்கு முதல் எட்டடிகள் வரையில் வரலாம். அராகம் ஈரடியதாயின் நான்கு வரலாம். இதில் வருஞ்சீர்கள் குறைவதும் மிகுவதுமின்றி நடக்கும் கருவிளஞ்சீர்களாய்ப் பெரும்பாலும் இருக்கும். இவற்றையெல்லாம் முன்னரே விளக்கியுள்ளோம்.

அராகம் என்னும் இவ்வுறுப்பு, தாழிசைக்கும் அம்போதரங்கத்திற்கும் இடையே இடம்பெறும். இனி, உதாரணச் செய்யுளொன்றைப் பார்ப்போம்.

### தரவு

பூமாது நிழன்மணிப்பூண் பொதியவிழ் பொன் னிதழ்புனிதத்
தேமாலை நறுங்களபஞ் செறிமார்பத் திடைமுயங்க

அளப்பரிதாம் பகிரண்டத் தப்புறமு மகத்தடக்கி
உலப்பிலிளங் கதிருதயத் தொளிகிளர்பே ருருவாயும்
தன்னரங்கத் தணுக்கடொறு நயந்தணுவா கியுமெழில்கூர்
தென்னரங்கத் தரவணைமேற் செந்திருகண் வளர்ந்துளாய்!

(இது ஆறடித்தரவு)

## தாழிசை

(1)

ஒருசுடராஞ் சொருபமுட னுருபமைந் தொருசுடரோ
டிருசுடராய்க் குணமொருமூன் றெனலாகி முறைமுறையே
படைப்பதையு மழிப்பதையும் புறம்போக்கிப் பழிபிறங்கா
திடைப்படுகா வலைநினதென் றெடுத்ததெவ னருளுதியே!

(2)

நின்றனவா யியங்கினவாய் நீடியபல் லுருவளித்தோன்
பொன்றியநா ளெழுந்தபெரும் புனற்படிந்த வுயிர்களைநீ
எம்மானே திருவுதரத் திருத்தியகா லவற்கவற்றால்
கைம்மாறங் கெவனோமுன் கைக்கொண்ட தருளிதியே!

(3)

புறம்பயின்ற வினைவழிசார் போக்குவா வினும்பிரியா
தறம்பயின்ற தணுவுளதே லதற்கவற்றை யெடுத்தணையாங்
உண்ணீர்மை யற்றனமாய்ந் துறுநரகர் புரிவதுரீ இயக்
கண்ணீர்கொண் டகன்றகலாக் காவலெவ னருளுதியே!

(இவை மூன்றும் நாலடித் தாழிசை)

## அராகம்

(1)

தரணியி லெவரொடு முரணிய பெருவிற
லிரணிய வனெனு மாரற விகலினை

(2)

ஒருபது சிரமுட னிருபது கரமுன
திருதன துயிர்மிசை பொருகணை சிதறினை

(3)

மறைய ரிறையல குறைவயின் வடுவுரை
பறைபவ னுயிர்புகு மறைகழ லிணையினை

(4)

முதலையி னிடருறு மதமலை மடுவினுள்
உதவுக வெனுமுரை யதனொடு முதவினை.

(இவை கருவிளஞ்சீர்களால் முடுகி நடக்கும் அளவடிகள்
இரண்டு கொண்ட நான்கு அராகங்கள்)

பேரெண் :

(1)

வஞ்சனையோர் வடிவெடுத்து மாதுலனு முறைபயின்ற
கஞ்சனைக் கொன்று ரகேசன் கடும்பொறையைத்
[தவிர்த்தனையே]

(2)

குருகுலத்தார் நூற்றுவரைக் கூற்றுவனாட் டினிலிருத்தித்
தருமன்முத லவர்க்கவனி தனியாளக் கொடுத்தனையே!

(நாற்சீர் ஈரடி அம்போதரங்கம் இரண்டு)

அளவெண் :

(1)

கழிபெருங்கற் பினளாடை கழியாம னயந்தனையே

(2)

வழிபடுந்தூ தனுமாகி மடக்கோலைச் சுமந்தனையே

(3)

ததிபாண்டன் றனக்கழியாத் தமனியநா டளித்தனையே

(4)

விதிகாண்டற் கெண்ணில்பல வேடமவை
கொண்டனையே

(நாற்சீர் ஓரடி அம்போதரங்கம் நான்கு)

**இடையெண் :**

(1) தாடகை யுடலுயிர் போக்கினை.
(2) தாபதன் மனத்திடர் நீக்கினை.
(3) நீடக லிகைப்பழி தீர்த்தனை.
(4) நேசமுள் ளவனொடு சேர்ந்தனை.
(5) வில்லினை மிதிலையில் வளைத்தனை.
(6) மெல்லிய விளமுலை திளைத்தனை.
(7) வல்லர வடல்கெட நடித்தனை.
(8) மருதினை முதலொடு முடித்தனை.

(முச்சீரடி அம்போதரங்கம் எட்டு)

**சிற்றெண் :**

(1) உறித்தயிர் கட்டுண்டனையே.
(2) உரலிடை கட்டுண்டனையே.
(3) மறித்துநிரை காத்தனையே.
(4) வழங்கினையைங் காத்தனையே.

(5) குடதடமுன் பாடினையே.
(6) குழலினிற்பண் பாடினையே.
(7) படர்சகடம் பொடித்தனையே.
(8) பகட்டுமருட் பொடித்தனையே.
(9) நாவலன்பின் நடந்தனையே
(10) நடித்தனைமன் னடந்தனையே.
(11) கோவலரில் லிருத்தனையே.
(12) கௌவிடையே யிறுத்தனையே
(13) புள்ளின்வா யிடந்தனையே.
(14) புரந்தனையா ரிடந்தனையே.
(15) தெள்ளமுதங் கடைந்தனையே.
(16) தேவருளங் கடைந்தனையே.

(குறளடி அம்போதரங்கம் பதினாறு)

## தனிச் சொல்

எனவாங்கு.

## சுரிதகம்

இனையதன் மையவா மெண்ணருங் குணத்தின்
நினைவருங் காவ னிகழ்த்தினை யதனால்
நின்னது கருணையு நீயும்
மன்னிய திருவுடன் வாழிவா ழியவே.

(நாலடி ஆசிரியச் சுரிதகம்)

இது கலிப்பா உறுப்புக்களை எல்லாம் முறையே பெற்றிருப்பதால் வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா ஆகின்றது. இங்கே காட்டிய உறுப்புக்களில் சிற்சில பிறழ்ந்தும், இடம் மாறியும் வண்ணக ஒத்தாழிசை வரலாம் என்று

சொல்வாரும் சிலர் உளர். அவைகளை விரிக்கின் நூல் வளர்ந்துவிடும் ; மேலும், கற்போர்க்கு இந்த விவகாரங்கள் வேண்டவும் வேண்டா.

தரவு, தாழிசைக்குப்பின் தனிச் சொல் பெற்றும், அம்போதரங்க உறுப்புக்களில் சில குறைந்தும், மீண்டும் தனிச்சொல் பெற்றும், வண்ணக ஒத்தாழிசை நடப்ப துண்டு.

## 2. வெண் கலிப்பா

கலிப்பாவின் உறுப்புக்களாகிய தாழிசை, அராகம், அம்போதரங்கம், தனிச்சொல், சுரிதகம் முதலியவை களைப் பெறாமல் தரவு ஒன்றையே உறுப்பாகக் கொண்டு, வெண்பாவைப்போல் சிந்தடி ஈற்றையும், நாள்-மலர், அல்லது காசு-பிறப்பு என்ற வாய்பாட்டு முடிவையும் கொண்டு, துள்ளலோசையுடைய பல அளவடிகளால் நடப்பது வெண்கலிப்பா ஆகும்.

துள்ளலோசைக்கு ஆதாரமாயிருப்பது கலித்தளை. வெண்சீரின்பின் நிரையசைவரின் கலித்தளை பிறக்கும். எனவே, கலிவெண்பாவில் நிரையை முதலிலுடைய காய்ச்சீர்கள் அதிகம் அமைந்திருக்கும். உதாரணமாக ஒரு செய்யுளைப் பார்ப்போம்.

சேல்செய்த மதர்வேற்கட் சிலைசெய்த சுடிகைநுதல்
மால்செய்த குழற்கோதை மகிழ்செய்ய நடஞ்செய்யும்
தருணவிளம் பிறைக்கண்ணித் தாழ்சடையெம் [பெருமானின்
கருணைபொழி திருநோக்கிற் கனியாத கன்னெஞ்சம்
வாமஞ்சால் மணிக்கொங்கைக் கொசிந்தொல்கு [மருங்குலவர்
காமஞ்சால் கடைநோக்கிற் கரைந்துருகா நிற்குமால்

அவ்வண்ண மாறிநிற்ப தகமென்றா லகமகம்விட்
டேவவண்ண மாறிநிற்ப தின்று.

இது எட்டடியால் வந்த வெண்கலிப்பா. இப்பாவில் இரண்டொன்று தவிர, மற்றெல்லாச் சீர்களும் காய்ச்சீர் களாக, ஈற்றடியும் வெண்பா அடியைப்போல் சிந்தடியாகத் துள்ளலோசை சிறக்க நடப்பது காண்க. இப்பாவில், துள்ளலோசை கெடாதபடி வேற்றுத்தளைகளும் வரலாம். தரவு ஒன்றே இதன் உறுப்பு.

செப்பலோசை சிதையாமல் வெண்டளை பிறழாத பல வடிகளைக் கொண்டு சிந்தடியில் முடிவது கலி வெண்பா என்று கூறினோம். பன்னிரண்டு அடிகளுக்கு அதிகமான அடிகளைக் கொண்ட பஃறொடை வெண்பாவைக் கலி வெண்பா என்பர் சிலர். வெண்கலிப்பா நான்கு முதல் பல வடிகள் கொண்டு துள்ளலோசை சிறக்க நடக்கும். இதுவே இரண்டிற்குமுள்ள வித்தியாசம்.

ஒரு பா, முற்றும் வெண்டளைகளால் அமைந்திருப் பினும், நேரீறும் நிரைமுதலுமான சீர்களைக்கொண்டு நடப்பின், அப்பொழுது, செப்பலோசை சிறிது சிதைந்து. துள்ளலின் சாயல் தலையெடுக்குமாதலால் அப்பொழுது அது, வெண்பா இனத்தில் அடங்காமல் கலியுள் அடங்கு வதாகும்.

கலித்தளைகளை அதிகமாகக் கொண்டு நடப்பதை வெண்கலி என்றும், வெண்டளைகளை அதிகமாகக் கொண்ட பலவடிகளுடன் நடப்பதைக் கலிவெண்பா என்றும் பெயர்கள் கொள்ளலாம்.

எனின், கலிவெண்பாவிற்கும் பஃறொடைவெண்பா விற்கும் வித்தியாசம் யாதென்ற சந்தேகம் இலக்கணம் பயில்வாரிடை ஏற்படலாம். இரு பாக்களும் வெண்டளை

பெற்ற அளவடிகளால் நடந்து சிந்தடியில் முடிவனவே, எனினும், செப்பலோசை ஒரு சிறிதும் சிதையாமல் நடப்பதை பஃறொடை வெண்பா என்றும், செப்பலோசை சிறிதேனும் சிதையுமாயின் கலிவெண்பா என்றும் கொள்ளுதல் பொருந்தும் என்று நினைக்கின்றோம்.

ஓசைபற்றிச் சிலரும், பொருள் பற்றிச் சிலரும் இவ்விருபாவிற்கும் வித்தியாசம் கூறுகின்றனர். வெண்டளையும் செப்பலோசையும் பெற்றுப் பா நடக்குமிடத்தும், வெளித் தோன்றும் பொருளோடு உள்ளுறைப் பொருளாக வேறோர் பொருளைக் கொண்டிருப்பது கலிவெண்பா என்றும், வெளித்தோன்றும் பொருளோடு நிற்பது பஃறொடை வெண்பா என்றும் சிலர் அபிப்பிராயப் படுகின்றனர். பன்னிரண்டிற்கு மேற்பட்ட அடிகளைக் கொண்ட பஃறொடையே கலிவெண்பா என்றும், செப்பலோசை சிறிது சிதைவுற்ற பல அடிகளைக் கொண்ட வெண்பாவே கலிவெண்பா என்றும் கூறுவாருமுளர்.

இவ் விவகாரங்கள் நமக்கு வேண்டா. காய்முன் நிரையாகும் மூவசைச்சீர்களைப் பெற்றுத் துள்ளல் மேலிட வெண்பா உருவத்தில் வரும் பாக்களை வெண்கலிப்பா என்றும், செப்பலோசை மிகுங்கால் கலிவெண்பா என்றும் பெயர்கள் கொள்ளலாம்.

பின்னாளில் வந்த புலவர்கள் கட்டளைக் கலிப்பா என்ற ஒரு பா வகையை வகுத்துக் கையாண்டுவரக் காண்கிறோம். அது, நாற்சீர் கொண்ட இரட்டையடிகளுடைய நான்கடிகளைப் பெற்றும், தேமா, புளிமா வன்னும் மாச்சீரை முதல் சீராகக் கொண்டும் நடக்கும் இயல்பினது. அதன் முதலசை நேரசையாயின் (தேமாவாயின்) அந்த அடி பதினோரெழுத்தும், நிரையசையாயின் (புளிமா வாயின்) அந்த அடி பன்னிரண்டெழுத்தும் பெறும் (எழுத்தை எண்ணும்போது ஒற்றெழுத்தை நீக்கி எண்ணுக).

உதாரணம் :

(1) மனைவி மக்களும் மாண்டு மறைந்தனர் 12
வாழ்ந்த வீடுங் குடியு மிழந்தனன் 11

(2) இனிய நட்பினர் யாவரு மேகினர் 12
ஏழை யாண்டியே காங்கியு மாயினேன் 11

(3) எனையு மிந்நிலை கண்டனை யின்னுமிங் 12
கின்ன லேது மிழைத்திட வுள்ளதோ 11

(4) உனையு மன்னையென் றோதி யழைப்பதோ 12
உலகெ லாந்தருந் தேவிகா மாட்சியே! 12

இது, தேசிக விநாயகம் பிள்ளை பாடிய கட்டளைக் கலிப்பா. இது, நான்கு இரட்டை அடிகளைக் கொண்டது. இரட்டை அடிகளாலான முதலடியில், மனைவி என்று புளிமாவில் ஆரம்பமாகும் முன்னடி 12 எழுத்துக்களைக் கொண்டது; வாழ்ந்த என்று தேமாவில் ஆரம்பமாகும் பின்னடி 11 எழுத்துக்களைக் கொண்டது. (இரட்டையடி ஒவ்வொன்றையும் அரை அடி என்பர்.

எழுத்தெண்ணிப் பாடப் பெறுவதால் இதைக் கழி நெடிலடி நான்கினாலான ஆசிரிய விருத்தம் என்று கொள்ளற்கு இல்லை.

## 3. கொச்சகக் கலிப்பா

கலிப்பாவின் மூன்றாவது பிரிவான கொச்சகக் கலிப்பாவின் இலக்கணத்தை இனிக் கருதுவோம்.

தரவு, தாழிசை, தனிச்சொல், சுரிதகம் பெற்று நடப்பது ஒத்தாழிசைக் கலிப்பா என்றும், அவைகளோடு

அம்போதரங்கம் சேருமாயின் அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பா என்றும், அதனோடு அராகம் என்னும் உறுப்பைப் பெற்று (கலிப்பாவிற்குரிய ஆறு உறுப்புக்களுடன்) நடப்பது வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா என்றும் கூறினோம்.

கலிப்பாவின் முதல் உறுப்பான தரவு ஒன்றே கொண்டு துள்ளலோசை சிதையாமல் நடந்து வெண்பாவைப்போல் சிந்தடியில் முடியும் செய்யுள், வெண்கலிப்பா வாகும் என்பதையும் பார்த்தோம்.

கலியுறுப்புக்களில் சில பெற்றும், உறுப்புக்கள் முறை மாறியும், மிகுந்தும் குறைந்தும் வருங்கலிச் செய்யுளைக் கொச்சகக் கலிப்பா என்று கொள்ளலாம்.

கொச்சகக் கலிப்பாவில் துள்ளலில்லாத வேற்றோசையுடைய அடிகளும் வரக்கூடும். கலிப்பாவிற்குரியனவல்ல என்று விளக்கம் பெற்ற, தேமா, புளிமா, கருவிளங்கனி, கூவிளங்கனி என்னும் நான்கு வகைச் சீர்களும் கொச்சகக் கலியினுள் வருவதுண்டு. இதில், நெடிலடியும் வரக்கூடும்.

ஒத்தாழிசை, வெண்கலிப்பாக்களுக்கு ஒவ்வாது நடக்கும் கலிச் செய்யுள்களை எல்லாம் கொச்சகக் கலிப்பா என்னலாம். இக்கொச்சகக் கலிப்பா,

1. தரவு கொச்சகக் கலிப்பா
2. தரவிணைக் கொச்சகக் கலிப்பா
3 சிஃறாழிசைக் கொச்சகக் கலிப்பா
4. பஃறாழிசைக் கொச்சகக் கலிப்பா
5. மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா,

என்ற பிரிவுகளை உடையது என்று முன்னரே கூறியுள்ளோம். இனி அவற்றை ஒவ்வொன்றாய் எடுத்துக் கொண்டு அவற்றின் இலக்கணங்களைக் கருதுவோம்.

## தரவு கொச்சகக் கலிப்பா :

கலிப்பாவின் முதல் உறுப்பான தரவு மாத்திரம் பெற்றும் அல்லது தரவோடு தனிச்சொல்லும் சுரிதகமும் பெற்றும் நடப்பது தரவு கொச்சகக் கலிப்பா.

ஒரு தரவோடு நிற்பதை இயற்றரவு (இயல்தரவு) கொச்சகக் கலிப்பா என்றும், தரவோடு தனிச்சொல்லும் சுரிதகமும் பெற்று நிற்பதைச் சுரிதகத் தரவு கொச்சகக் கலிப்பா என்றும் வேறுபடுத்திக் கூறுவர்.

தரவு

செல்வப்போர் கதக்கண்ணன்
செயிர்த்தெறிந்த சினவாழி
முல்லைத்தார் மறமன்னர்
முடித்தலையை முருக்கிப்போய்
எல்லைநீர் வியன்கொண்மூ
இடைநுழையும் மதியம்போல்
மல்லலோங் கெழில் யானை
மருமம்பாய்ந் தொளிந்ததே.

இது நாலடித்தரவு. கலியுறுப்பு வேறெதுவுமின்றித் தரவு மாத்திரம் பெற்று நிற்றலால், இது இயற்றரவு கொச்சகம் ஆகும்.

தரவு

கற்பனைமேற் கொண்டொழுகும்
கடைப்பிடியார் வயிற்றிருநாண்
பொற்புறுமாற் றலிற்பொறித்த
பொருவருசெவ் வணிநோக்கித்
தற்பொதிவாட் டுறந்தகெழு
தகைத்தாய புனலூரன்

இற்புகலால் வெஞ்சினநஞ்
சனக்கூர்த்த மருணோக்க
முற்பலதென் னமிர்துயிர்த்தற்
றொளிகிளர்சீர் பயின்றனவே.

## தனிச்சொல்

அஃதன்றால்

### சுரிதகம்

அனகனிங் கெமையாண் டருண்மகிவ் மாறன்
புனல்வரங் கூராப் பொருனையுட் புத்தேன்
தினகரோ தயத்திற் செல்விபெற் றலர்ந்த
தண்மலர் மரைபுரை தகைத்தாம்
ஒண்ணுத லரிவை யொளிர்தரு முகமே.

இது தரவு, தனிச்சொல், சுரிதகம் பெற்றுவந்த சுரிதகத் தரவு கொச்சகக் கலிப்பா. இதையும், இயற்றரவு கொச்சகத்தையும், தரவு கொச்சகம் என்ற பெயரால் அழைப்பர் ஒரு சாரர். வேறு சிலர், தரவோடு நிற்பதைத் தரவு கொச்சகம் என்றும் தனிச் சொல்லும் சுரிதகமும் பெற்று நிற்பதைத் தரவு கொச்சக ஒரு போகு என்றும் கூறுவர்.

**தரவிணைக் கொச்சகக் கலிப்பா :**

இதுவும், இயற்றரவிணைக் கொச்சகம் என்றும், சுதரிகத் தரவிணைக் கொச்சகம் என்றும் இருவிதப்படும். இடையே தனிச்சொல் பெற்றும் பெறாமலும், இரண்டு தரவுகளைப் பெற்று நிற்பது இயற்றரவிணைக் கொச்சகம்.

தனிச் சொல்லை இடையிலே பெற்றோ, பெறாமலோ இரட்டித்துவரும் தரவோடு தனிச் சொல்லும், சுரிதகமும் பெற்று நிற்பது சுரிதகத் தரவிணைக் கொச்சகம்.

வார்பணிய தாமத்தால் வளைக்கையோர் வண்டோச்ச
ஊர்பணிய மதியம்போ னெடுங்குழைக்கீ ழுலாப்போந் [தான்
கூர்பணிய வேற்றானைக் கொற்கையார் கோமானே

அவர்க்கண்டு

பூமலர் நறுங்கோதை புலம்பலைப்ப நறுங்கொண்டால்
தூமலர்க்கண் மடவார்க்குத் தொல்பகையே யன்றியும்
காவலற்குப் பெரியதோர் கடனாகிக் கிடவாதே

இது தனிச் சொல்லை இடையிலே பெற்ற இரண்டு தரவுகளைக் கொண்ட இயற்றவிணைக் கொச்சகம்.

தரவு

(1)

குழைதூங்கு கழைமென்றோர்ட் கோமாரி சொலைக் [கண்கன்
இழைதூங்கு முலைக்கண்வைத் தேயெய்தா நாணெய்த
உழைதூங்கு குயினேங்க வுருமுத்தீ யுகநக்கும்
மழைதூங்கு பொழிற்றில்லை மணிமன்று நடஞ் [செய்வோய்

(2)

மீனேற்றின் றுவசத்தான் தனிதுஞ்ச விழித்தோய்நின்
ஆனேற்றின் றுவசமோ வடலேற்றி னூர்தியோ
கானேற்ற பைங்கூழின் கவளமாக் கணத்தின்கண்
வானேற்ற பகிரண்டம் வாய்மடுக்க வல்லதே

தனிச்சொல்

எனவாங்கு

சுரிதகம்

பைந்துழாய் மவுலிப் பண்ணவ னுவப்ப
அந்தணர் பழிச்சவு மறத்தின் புங்கவன்
முனியான் முனிவன் போலும்
அனைய தன்றே யான்றோர் கடனே.

இது இரண்டு தரவும் தனிச்சொல், சுரிதகமும் பெற்ற சுரிதகத் தரவிணைக் கொச்சகக் கலிப்பா, தரவிணைக் கொச்சக ஒரு போகு என்றும் இதை அழைப்பர்.

சிஃறாழிசைக் கொச்சகக் கலிப்பா ;—

இது, நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பாவைப்போல் தரவு, தாழிசை, தனிச்சொல், சுரிதகம் என்னும் நான்கு உறுப்புக்களையும் பெறும். ஆனால், இப்பாவில் தாழிசை களுக்கு இடையே தனிச் சொற்கள் வருவதே வேறுபாடு. தரவு, தனிச்சொல், தாழிசை, தனிச் சொல், தாழிசை; மறுபடியும் தனிச்சொல், தாழிசை; மறுபடியும் தனிச்சொல் சுரிதகம் இதன் அமைப்பு முறை. இவ்வாறு உறுப்புக்களை ஏற்று நடக்கும் சிஃறாழிசைக் கொச்சகத்தை இயன் சிஃறாழிசைக் கொச்சகக் கலிப்பா என்பர்.

ஆனால், தாழிசைகளின் ஈற்றடிச் சீர் குறைந்து நிற்குமாயின், அப்பொழுது, அது, குறைச் சிஃறாழிசைக் கொச்சகக் கலிப்பா ஆகும்.

தரவு

பருஉத்தடக்கை மதயானை
பணையெருத்தின் மிசைத் தோன்றிக்
குருஉக்கொண்ட வெண்குடைக்கீழ்க்
குடைமன்னர் புடைசூழப்

படைப்பரிமான் தேரினொடும்
பரந்துலவு மறுகினிடைக்
கொடித்தானை யிடைப்பொலிந்தான்
கூடலார் கோமானே.

தனிச்சொல்

ஆங்கொருசார்

தாழிசை

உச்சியார்க் கிறைவனா யுலகமெலாங்
காத்தளிக்கும்
பச்சையார் மணிப்பைம்பூட் புரந்தரனாப்
பாவித்தார்
வச்சிரங் காணாத காரணத்தான்
மயங்கினரே.

தனிச்சொல்

ஆங்கொருசார்

தாழிசை

அக்காலம் மணிநிரைகாத் தருவரையாற்
பனிதவிர்த்து
வக்கிரனை வடிவழித்த மாயவனாப் பாவித்தார்
சக்கரங் காணாத காரணத்தாற் சமழ்த்தனரே.

தனிச்சொல்

ஆங்கொருசார்

### தாழிசை

மால்கொண்ட பகைதணிப்பான் மாத்தடிந்து
மயங்காச் செங்
கோல்கொண்ட சேவலங் கொடியவனாகப்
பாவித்தார்
வேல்கொண்ட திண்மையான் விம்மிதராய்
நின்றனரே.

### தனிச்சொல்

அஃதான்று

### சுரிதகம்

கொடித்தே ரண்ணல் கொற்கைக் கோமான்
நிறைபுக ழொருவன் செம்பூட் சேஎய்
என்றுநனி யறிந்தனர் பலரே தானும்
அய்வரு ளொருவனென் றறிய லாகா
மைவரை யானை மடங்கா வென்றி
மன்னவன் வாழியென் றேத்தத்
தென்னவன் வாழி திருவொடும் பொலிந்தே

இது மேலே கூறிய இலக்கணம் பெற்றிருப்பது காண்க. தாழிசைகளின் அடிகள் முற்றிய அளவடிகள். ஆதலால் இது, இயற்சிஃறாக் கொச்சகக் கலிப்பா ஆகின்றது.

தரவும் இடையிடையே தனிச் சொல்லைப் பெற்ற மூன்று தாழிசைகளும், மீண்டும் ஒரு தனிச் சொல்லும், சுரிதகமும் பெற்றிருப்பதுடன், தாழிசைகளின் ஈற்றடிகள் சீர் குறைந்து நிற்குமாயின் குறைச் சிஃறாழிசைக் கொச்சகம் ஆகும்.

தரவு

மாயவனாய் முன்றோன்றி மணிநிரைகாத் தணிபெற்ற
ஆயநீள் குடையினரா யரசர்கள் பலகூடி
மணிநின்ற மேனியான் மதநகையைப் பெறுகுவார்
அணிநின்ற விடைகொண்டா ரெனச்சொல்லி
[யறைந்தனரே

தனிச்சொல்

தானவ்வழி

தாழிசை

எழுப்பற்றிச் சினந்துறும் யெவ்வழியு மியம்ப
இழுக்குற்று நின்றாரும் பலர்

தனிச்சொல்

ஆங்கே

தாழிசை

வர்ளுற்ற கண்ணாளை மகிழ்விப்பா மெனக்கருதி
கோளுற்று நின்றாரும் பலர்

தனிச்சொல்

ஆண்டே

தாழிசை

இத்திறத்தாற் குறையென்னை யிருங்கிளைக்குங்
கேடன்னப்
பற்றாது நின்றாரும் பலர்

### தனிச்சொல்

### அதுகண்டு

### சுரிதகம

மைவரை நிறத்தன மாலை யியறாமுக்
கைவரை நில்லாது கடிதேற் றெருத்தொடிப்ப
வழுங்கின ராய மமர்ந்தது சுற்றம்
எழுந்தது பலசன மேறுதொழ விட்டன
கோல வரிவளை தானுங்
கால்வனபோலுங் கடிமகிழ் வோர்க்கே

இது நான்கடித்தரவும் இடையிடையே தனிச்சொல் பெற்ற மூன்று ஈரடித்தாழிசைகளும், ஆறடி ஆசிரியச் சுரிதகமும் பெற்றுளது. தாழிசைகளின் ஈற்றடிகள் சீர் குறைந்து நிற்பதால் குறைச் சிஃறாழிசைக் கொச்சகம் ஆகின்றது.

### பஃறாழிசைக் கொச்சகக் கலிப்பா :

'தரவு, தனிச் சொல் பெற்றோ, பெறாமலோ மூன்றிற்கு அதிகமான தாழிசைகள், தனிச் சொல், சுரிதகம் முறையே பெற்று வருவது பஃறாழிசைக் கொச்சகம். இவ்வாறு உறுப்புக்கள் பெற்று முற்றிய அளவடிகளாலான தாழிசை களைக் கொண்ட இதை இயன்பஃறாழிசைக் கொச்சகக் கலிப்பா என்று அழைப்பர்.

### தரவு

தண்மதியேர் முகத்தாளைத் தனியிடத்து நனிகண்டாங்
குண்மதியு முடனிறையு முடன்றளர முன்னாட்கண்
கண்மதியொப் பிலையின்றிக் காரிகையை நிறைகவர்ந்து
பெண்மதியின் மகிழ்ந்தநின் பேரருளும் பிறிதாமோ

## தாழிசை

1. இளநல மிவள்வாட விரும்பொருட்குப் பிரிவாயேல்
தளநல முகைவெண்பற் றாழ்குழ றளர்வானோ

2. தகைநல மிவள்வாடித் தரும்பொருட்குப் பிரிவாயேல்
வகைநல மிவள்வாடி வருந்தியில் லிருப்பானோ

3. அணிநல மிவள்வாட வரும்பொருட்குப் பிரிவாயேல்
மணிநல மகிழ்மேனி மாசொடு மடிவானோ

4. நாம்பிரியோ மினியென்று நன்னுதலைப் பிரிவாயேல்
ஓம்பிரியோ மெனவுரைத்த வுயர்மொழியும் பழுதாமோ

5. குன்றளித்த திரடோளாய் கொய்புனத்திற் கூடியநான்
அன்றளித்த வருண்மொழியா லருளியது மருளாமோ

6. சில்பகலு முடியக்காற் சிலம்பொலிச்சீ ரடிபரவிப்
பல்பகலுந் தலையளித்த பணிமொழியும் பழுதாமோ

## தனிச்சொல்

அதனால்

## சுரிதகம்

அரும்பெற லிவளினுந் தரும்பொரு ளதனினும்
பெரும்பெற லரியன வெறுக்கையு மற்றே
விழுமிய தறிமதி யறிவாங்
கெழுமிய காதலிற் றரும்பொருள் சிறிதே.

நாலடித்தரவும், ஈரடித் தாழிசை ஆறும், தனிச்சொல்லும் நாலடி ஆசிரியச் சுரிதகமும் பெற்று வந்த பஃறாழிசைக் கொச்சகம் இது. தாழிசைகளுக்கிடையே தனிச்சொல்லும் பெற்று வரலாம். இவ்வாறு பல தாழிசைகளைப் பெற்று

நடக்கும் இப்பாவை இயற் பஃறாழிசைக் கொச்சகக் கலிப்பா என்பர். தாழிசைகளின் ஈற்றடிச்சீர் குறைந்து நிற்பின் குறைப் பஃறாழிசைக் கொச்சகம் என்ற பெயர் பெறும்.

மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா :

வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா உறுப்புக்கள், இடமும் முறையும் மயங்கியும் குறைந்தும், மிகுந்தும் வருவது மயங்கிசைக் கொச்சகம். அதாவது, இரண்டு தரவு, ஆறுதாழிசை, அராகம், மீண்டும் தாழிசை, (பேரெண், அளவெண், இடையெண், சிற்றெண்களைக் கொண்ட) அம்போதரங்கம், தனிச்சொல், சுரிதகம் பெற்று நடப்பது மயங்கிசைக் கொச்சகம். மேலே கூறிய உறுப்புக் களில் சில பிறழ்ந்தும் உறழ்ந்தும், குறைந்தும் மிகுந்தும், வருதலின் இது மயங்கிசைக் கொச்சகமாகின்றது. கலம்பகங் களின் முதல் பாட்டு எப்பொழுதும் கொச்சகக் கலியாகத் தான் இருக்கும். உதாரணமாக முதலில் எடுத்துக்கொண்ட கலிச் செய்யுளை நோக்குக. அது மயங்கிசைக் கொச்சகம். இம்மயங்கிசையில், கலியின்கண் வரலாகாத நிரை நடுவாகிய கனிச்சீரும் அருகி வருவதுண்டு.

---

குறிப்பு : இதுகாறுங் கூறப்பெற்ற கொச்சகங்கள் நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பாவின் வேறுபாட்டால் விளைந்த கொச்சகங்கள். மூன்றடிக்குக் குறையாத ஒரு தரவும், தரவினும் குறைந்த அடிகளையுடைய தாழிசைகள் மூன்றும், தனிச்சொல்லும், வெண்பா அல்லது ஆசிரியப் பாவில் அமைந்த சுரிதகமும் கொண்டது நேரிசை ஒத்தாழி சைக் கலிப்பாவாகும். இப்பாவின் நான்கு உறுப்புக்களி னிடையே விளையும் வேறுபாடு பற்றி இவ்வெண்வகைக் கொச்சகங்கள் எழுந்தமை வெளிப்படை. இனி வண்ணக ஒத்தாழிசையின் வேறுபாட்டால் அமையும் மயங்கிசைக் கொச்சகங்களைப் பார்ப்போம்.

வண்ணக ஒத்தாழிசைக்கு இயல்பான எல்லா உறுப்புக் களும் மிகுந்தும், குறைந்தும், முறைமாறியும் வருவதால் மயங்கிசைக் கொச்சகப் பெயர் பெற்ற இப்பாவை, இயன் மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா என்பர் இவ்வியன் மயங்கிசைக் கொச்சகத்தினிடையே, ஆசிரியம், வெண்பா போன்ற பிற பாக்களும் கலந்துவரின், அயன் மயங்கிசைக் கொச்சகம் என்று பெயர் பெறும்.

இதுகாறுங் கூறப் பெற்ற அய்வகைக் கொச்சகங்களில், தரவும் தாழிசையும் இடம் பெறுகின்றன. ஆசிரியர்களில் ஒரு சாரார் எல்லாக் கொச்சகங்களையும் ஒருபோகு என வழங்குவர். எனினும், மேலே கூறிய அய்வகைக் கொச்சகங் களையும் கொச்சகப்பாக்கள் என்றும், தனிச் சொல்லும் சுரிதகமும் இருக்க, தரவு, தாழிசை, அம்போதரங்கம், அராகம் ஆகிய வுறுப்புக்களில் ஒன்று இல்லாமல் வருவன வற்றை ஒருபோகு என்றும் அழைத்தல் அமையும்.

## ஒருபோகு

கலியுறுப்புக்கள் சில நீங்கிவரும் மயங்கிசைக் கொச்சகமே ஒருபோகு. இது, தாழிசை ஒருபோகு, அம்போதரங்கம் ஒருபோகு, வண்ணக ஒருபோகு என்று மூன்று வகைப்படும்.

தரவின்றித் தாழிசை, தனிச்சொல், சுரிதகம் பெற்று வருவது தாழிசை ஒருபோகு.

தரவு அல்லது தாழிசையும் இல்லாமல், அம்போதரங்க எண்களில் சிலவும் பலவுமாய்த் தனிச் சொல்லும், சுரிதகமும் பெற்று வருவது அம்போதரங்க ஒருபோகு.

தரவு அல்லது தாழிசையின்றி வண்ணக உறுப்பும், தனிச் சொல்லும் சுரிதகமும் பெற்று வருவது வண்ணக ஒருபோகு.

தாழிசை ஒருபோகு :

தாழிசை

(1) ஆனாய் மதுரகவி யாதரித்த பூங்கமலந்
தாளான் மகிழ்மாறன் றந்த தமிழ் மறைப்பாக்
கேளா தவரே யிருசெவியுங் கெட்டாரே

(2) மாதர் முலைப்பா லருந்தா வரோதயனாந்
தாதார் மகிழ்மாறன் றந்த தமிழ்மறைப்பா
வோதா தவரே யுரையறியா வூமர்களே

(3) புள்ளிப் பொறிவண் டிமிழ்ப்பூம் பொழிற்குருகூர்
வள்ளல் மகிழ்மாறன் வடித்த தமிழ்மறைப்பா
உள்ளத்துணரா தவரே யுணர்விலரே

தனிச்சொல்

புலவீர்

சுரிதகம்

பழுதற மாறன் பகர்தமிழ் கையால்
எழுதிய வேட்டி னினமலர் சூட்டித்
தொழுததன் வாசந் துற்றியு மவ்வேட்டைச்
செறிப்பதே சென்னி மற்றைய
பொறித்தலை யென்னப் புனைபொய்த் தலையே

இது, தரவின்றி மூன்று தாழிசைகளும், தனிச்சொல்லும், சுரிதகமும் பெற்றிருப்பதால் தாழிசை ஒரு போகு ஆகின்றது. தனிச்சொல், சுரிதகமின்றித் தாழிசை தனித்து நின்றும் தாழிசை ஒரு போகு ஆதல் கூடும்.

அம்போதரங்க ஒரு போகு :

தரவு அல்லது தாழிசை இல்லாமல் அம்போதரங்க உறுப்பு மிகுந்து வருவது அம்போதரங்க ஒரு போகு.

தாழிசை

(1)

கரைபொருநீர்க் கடல்கலங்கக் கருவரைமத் ததுவாக
திரைபொருது புடைபெயரத் திண்டோளாற்
கடைந்தனையே

(2)

முகில்பொரு துடல்கலங்க முழவுத்தோள் புடைபெயர
அகல்விசும்பி னமரர்க்கு மாரமுதம் படைத்தனையே

(3)

வரைபெரிய மத்தாக வாளரவங் கயிறாகத்
திரைபிரியக் கடல்கடைந்து திருமகளைப் படைத்தனையே

அராகம்

அமரரை யமரிடை யமருல கதுவிட
ருமரது புகழ்மிக மிகவிக லடுத்தனை

அம்போதரங்கம்

அளவெண் :

1. அலைகட லுலகமு மந்தணர்க் கீந்தனை
2. உலகொரு நிலவிய வொருபுகழ் சுமந்தனை

இடையெண் :

1. ஆதிக்க ணரசெய்தினை
2. நீதிக்கண் மதிநிரம்பினை

3. விளங்கெரி முதல்வேட்டனை
4. துளங்கெரி யவர்புகழ் துளக்கினை

**சிற்றெண் :**

1. அலகு நீ
2. உலகு நீ
3. அருளு நீ
4. பொருளு நீ
5. நிலவு நீ
6. வெயிலு நீ
7. நிழலு நீ
8. நீரு நீ

## தனிச்சொல்

எனவாங்கு

## சுரிதகம்

பவழ மெறிதிரைப் பரவைக் கோவே
புகழ்துறை நிறைந்த பொருவே னந்தி
உலகுட னளந்தனை நீயே
உலகொடு நிலவுமதி யுதயவரை யொத்தே

இப்பாவில் தரவு இல்லை தாழிசை வந்துளது. வண்ணக (அராக) உறுப்பொன்று இருக்கின்றதேனும் அம்போதரங்க உறுப்பு மிகுந்திருப்பதால் இது, அம்போ தரங்க ஒருபோகு ஆகும்.

## வண்ணக ஒருபோகு :

தரவோ, தாழிசையோ இல்லாமல் அம்போதரங்க உறுப்புக்கள் சிலவரினும், அராக உறுப்பு மிகுந்து நடக்கு மாயின் வண்ணக ஒருபோகு ஆகும்.

## தரவு

அகலிடமு மமருலகு மமர்பொருதா மறந்தோற்றுப்
புகலிடநின் குடைநிழலாப் புதுமரணம் பிறிதின்றி

மறந்தோற்று திறங்கருகி மாற்புகழு நிலைதளரப்
புறந்தோற்றுக் கழலார்ப்பப் பொருகளம் வறிதாக
மண்ணுலகு மறிகடலு மாமலையு நிலைகலங்க
விண்ணுலகம் வியப்பெய்த வெஞ்சமத்து ளலைத்தனையே.

## தனிச்சொல்

அதனால்

அராகம்

(1)

கனைகட லுடைதிரை கரைபொரக் கடைந்தனை

(2)

முன்னவரு மமரரு முறைமுறை வந்துநின்
னிணைமலர் பலர்புகழ் பயில்வதோர் பண்பினை

(3)

மருளுறு துதைகதிர் மணியது மணிநிறம்
அருளு நின்குடை

(4)

குடையது குளிர்நிழ லடைகுண வுயிர்களை
அளிக்கு நின்கோல்

(5)

கோலது செம்மையிற் குறைகடல் வளாக
மாலையுங்காலையும் மகிழ்தூங் கின்ற

## அம்போதரங்கம்

**பேரெண் :**

(1) ஆருயிர்க் கெல்லா மமிழ்தின் றமையா
நீரினு மினிதுநின் னருள்

(2) அருளு மலைகடலு மாயிரண்டு மொக்கும்
இருள்கொடி மேற்கொண்டாய் நினக்கு

**இடைஎண் :**

(1) நீர்கலங் காத்தோய் நீ
(2) நிலவுலக மீந்தாய் நீ
(3) பேரமர்க் கடந்தோய் நீ
(4) புனையெரிமுன் வேட்டோய் நீ
(5) ஒற்றவெண் குடையோய் நீ
(6) கொற்றச் செங்கோலோய் நீ
(7) பாதையந் துறைவ னீ
(8) பரியவ ரிறைவ னீ

## தனிச்சொல்

என வாங்கு

## சுரிதகம்

பொருகுடை வளாக மொருகுடை நிழற்றி
இருபிறப் பாளர்க் கிருநிதி யீந்து
மனமகிழ்ந் தருள்புரி பெரும்புக ழச்சுத
கோவே யினையை யாதலிற் பனிமதி
தவழு நந்தி மாமலைச் சிலம்ப
நந்திநிற் பரவுத னாலவர்க் கரிதே.

தரவிருக்கத் தாழிசையின்றி அராகவுறுப்பு அதிகமாகப் பெற்று வந்தமையால் இது வண்ணக ஒரு போகு ஆகின்றது தரவில்லாமல் தாழிசை பெற்று நடக்கும் வண்ணக ஒரு போகிற்கு உதாரணம் எமக்குத் தென்படவில்லை.

---

குறிப்பு :— இதுவரை யாம் கூறிவந்த இலக்கணங்களுக்கு அடங்காமல் நடக்குங் கொச்சகக் கலிப்பாக்கள் இருக்கின்றன. ஒருவர் கூறுவதும் மற்றவர் விடைமொழிவதுமாய்ப் பொருள் நடந்து வருங்கலிச் செய்யுளை உறழ்கலி என்று அழைக்கின்றனர். சுரிதகம் பெற்றும் பெறாமலும் இடையிடையே அயல்பாக்களின் அடிகள் பெற்றும் பல விதமாக உறழ்கலி நடக்கின்றது. எனவே, இதன் உறுப்பை வரையறுத்துக் கூறுதற்கில்லை. நெடிலடிகளும் பாவில் இடம் பெறுகின்றன. கலிப்பாவைப் பற்றி யாம் அறிந்த அளவு கூறிவிட்டோம். கற்போரைக் குழப்பி வைக்கும் இப்பாவின் இலக்கண விரிவெல்லாம் அவ்வளவு அவசியமற்றது என்பதே எம் கருத்து.

## 4. வஞ்சிப்பா

அகவலோசையால் ஆசிரியமும், செப்பலால் வெண்பாவும், துள்ளலால் கலிப்பாவும் ஆவதுபோல், தூங்கலோசையால் ஆவது வஞ்சிப்பா. தூங்கலோசைக்கு ஆதாரமாவது வஞ்சித்தளை.

கனிமுன் நேரும் நிரையும் வரின், வஞ்சித்தளை விளையும் எனவே, தேமாங்கனி, புளிமாங்கனி, கருவிளங்கனி, கூவிளங்கனி என்ற கனிச் சீர்களும், நிரையசையை ஈற்றிலுடைய நாலசைச் சீர்களும் வஞ்சிப்பாவில் இடம் பெறும்.

ஒன்றிய வஞ்சித்தளையால் அமையும் வஞ்சியில், ஏந்திசைத் தூங்கலோசையும், ஒன்றாத வஞ்சித் தளையால் அமையும் பாவில் அகவல் தூங்கலும், இருவகைத் தளைகளோடு, சில வேற்றுத் தளைகளும் விரவிவரின் பிரிந்திசைத் தூங்கலும் விளையும். இவற்றை எல்லாம் முன்னரே கூறியுள்ளோம்.

தூங்கலோசைக்கு இடனான இவ்வஞ்சிப்பா, குறளடி வஞ்சிப்பா என்றும் சிந்தடி வஞ்சிப்பா என்றும் இருவகைப்படும். வஞ்சியுரிச்சீர் எனப்படும் கனியிற்று மூவசைச் சீர்கள், அல்லது நிரையீற்று நாலசைச் சீர்கள் இரண்டு கொண்டு நடப்பது குறளடி வஞ்சிப்பா: மூன்று கொண்டு நடப்பது சிந்தடி வஞ்சிப்பா. (அளவடி, நெடிலடி முதலியன மிக அருகியன்றி இப்பாவில் வாரா.)

இத்தகைய சீரும், தளையும், அடியும், ஓசையும் உடையதாகிய வஞ்சிப்பா, தனிச்சொல்லும் ஆசிரியச் சுரிதகமும்

பெற்று முடியும். இப்பா ஒருபோதும் வெண்பாச் சுரிதகம் பெற்று முடியாது, வஞ்சிப்பா மூன்றடிகளைச் சிற்றெல்லை யாகக் கொண்டது. இரண்டடிகளாலும் வரலாம் என்பர் சிலர். பேரெல்லைக்கு வரையறையில்லை. பாடுவோரது பொருள் முடிவிற்கு ஏற்றபடி பலவடிகளைக் கொண்டு அது நடக்கும். இனிச் சில செய்யுள்களை உதாரணமாகப் பார்ப்போம்.

## குறளடி வஞ்சிப்பா

வினைத்திண்பகை விழச்செற்றவன்
வனப்பங்கய மலர்த்தாளிணை
நினைத்தன்பொடு தொழுதேத்தினர்.

நாளும்

மயலார் நாற்கதி மருவார்
பெயரா மேற்கதி பெறுகுவர் விரைந்தே.

இது, குறளடிகளாலான வஞ்சிப்பா. ' நாளும் ' என்பது தனிச்சொல். இரண்டடி கொண்ட ஆசிரியச் சுரிதகத்தால் பா முடிந்துளது. பாவின் முதல் மூன்றடிகளும் ஒன்றிய வஞ்சித்தளை பெற்று ஏந்திசைத் தூங்கலோசையுடன் நடப்பது காண்க. இப்பாவின் முதலுறுப்பை—அதில் கூற வரும் பொருளை எடுத்துத் தரும் குறிப்பு இல்லையாதலால்-கலிப்பாவில் அழைப்பது போல், தரவு என்று அழைக்கும் வழக்கமில்லை. பாவின் முதலுறுப்பு மூன்று குறளடிகளா தலால், இது குறளடி வஞ்சிப்பா ஆகும்.

## சிந்தடி வஞ்சிப்பா

பாலத்தஞ் செலவிவளோடு படுமாயின்
நீரவத்தை நடவேண்டா வினிதனியென

நஞ்சிறு குறும்பிடை மூதெயிற் றியர்
சிறந்துரைப்பத் தெறுகதிர் சென்றுறும்
ஆங்கட் டெவிட்டனர் கொல்லோ

என வாங்கு

நொதுமலர் வேண்டி நின்னோடு
மதுகரமுற் றவாடவர் தாமே,

இது சிந்தடிகளால் வந்த வஞ்சிப்பா. இதனில் ஆசிரியத்தளை, வெண்டளை, கலித்தளை, ஒன்றிய வஞ்சித்தளை, ஒன்றாத வஞ்சித்தளை எல்லாம் விரவி வந்திருப்பதால், இது பிரிந்திசைத் தூங்கல் சிறக்க நடக்கும் சிந்தடி வஞ்சிப்பா.

பொதுச் சீரெனப்படும் நாலசைச் சீர்களும் இப்பாவில் விரவி வரலாம்.

மேலே காட்டிய உதாரணங்களில் வஞ்சிப்பாக்களெல்லாம் ஆசிரியச் சுரிதகத்தால் முடிந்திருப்பது காண்க. வெள்ளைச் சுரிதகம் (வெண்பாச் சுரிதகம்) வஞ்சிப்பாவில் வராது. இப்பாவில் ஆசிரிய அடிகளும் அருகி வருதலுண்டு.

## 5. மருட்பா

ஆசிரியம், வெள்ளை, கலி, வஞ்சியாகிய நால்வகைப் பாக்களின் இலக்கணம் கற்றோம். இனி, வெண்பாவும் ஆசிரியமும் கலந்து நடக்கும் மருட்பாவின் இலக்கணத்தைப் பார்ப்போம். மருளுதல் என்றால் ஒன்றோடொன்று கலந்து மயங்குதல், என்பது பொருள். வெண்பா முதலாகவும் ஆசிரியம் ஈறாகவும் கலந்து வருவதால் இதை மருட்பா என்று அழைத்தனர் போலும்.

"தன்க ணளியவாய் நின்றேற்குத் தார்விடலை
வன்கண்ண னல்கா னெனவாடும்—என்கண்
இடரினும் பெரிதா லெவ்வம்
படரினும் பெரிதாற் பாவியிப் பகலே."

என்னுமிப்பாவின் முதலிரண்டடிகள் வெண்டளைகளால் விளைந்த செப்பலோசையோடு நடக்கின்றன. பின்னிரண்டடிகள் ஆசிரியத்தளைகளால் வரும் அகவலோசை பெற்ற ஆசிரியவடிகள். இவ்வாறு வெண்பாவாக ஆரம்பமாகி ஆசிரியமாக முடியும் பாக்களை எல்லாம் மருட்பா எனக் கொள்க. ஆரம்பம் ஆசிரியமாகவும் முடிவு வெண்பாவாகவும் மருட்பா அமைவதில்லை. பாவின் முடிவும் நேரிசை ஆசிரியமாக இருக்க வேண்டும். மருட்பா, அளவாலும், பொருளாலும் பலவகைப்படும்.

பாவில் வெண்பாவடியும் ஆசிரியவடியும் அளவொத்து நடப்பின், அதைச் சமநிலை மருட்பா என்று அழைப்பர். மேலே காட்டிய உதாரணத்தில் வெண்பாவடி இரண்டும், ஆசிரியவடி இரண்டும் வந்திருப்பது காண்க. இவ்வாறன்றி, ஏற்றத்தாழ்வான அடிகளைக் கொண்டும் மருட்பாக்கள் அமையலாம். அவ்வாறு அமையின், அதை வியனிலை

மருட்பா என்பர். உதாரணமாக ஒரு செய்யுளை எடுத்துக் கொள்வோம்.

திருமால் பரனெனவே தேற்றுதற்கன் பாக
வருமாரி யன்றனையிம் மண்மேற் புலவீர்
ஒருமா னிடனென் றுணரா தவனெம்
பெருமானா மென்னுற்ற பெருமா னருள்கூர்
பத்தர தடியிணை பரவுமின் னதுவே
உத்தம விலக்கண முரைசால்
முத்தியை விளைக்கு முயற்சியு மதுவே.

இப்பாவின் முதல் நான்கடிகள் வெண்டளை பிறழாத வெண்பா அடிகள். பின்னடி மூன்றும் நேரிசை ஆசிரியம். இரு பாக்களின் அடிகளும் ஏற்றத் தாழ்வாக அமைந்திருக் கின்றன. எனவே, இது வியனிலை மருட்பா ஆகின்றது. வெண்பா அடிகள் குறைந்தும், ஆசிரியவடிகள் மிகுந்தும் வியனிலை மருட்பா நடக்கலாம்.

புறநிலை வாழ்த்து, கைக்கிளை, வாயுறை வாழ்த்து, செவியறிவுறூஉ என்பவை மருட்பாவிற்குரிய பொருள்கள், வேறு பொருள்களின் மீது இப்பா வருவதில்லை.

புறநிலை வாழ்த்து : "உன் குலதெய்வம் உன்னைப் புறங்காத்து நிற்க, அறவழி தேடிய பொருளுடன் வழிவழி சிறந்து நீயும், நின்குலமும், சுற்றமும் நீடு வாழ்க," என்று ஒருவனை வாழ்த்தும் பொருளது இது.

கைக்கிளை : ஒருதலைக் காமத்தை விஷயமாகக் கொண்டது. பருவம் முதிராத பெண்ணின் பால் ஒருவன் ஆசை கொண்டு, வேட்கை மிகுதியால் தனக்குத்தானே கூறிக்கொள்ளுதலை ஆண் கைக்கிளை என்பர். தன்பால் காதல் கொள்ளாத தலைவனை ஒரு பெண் நயந்து, விரக மிகுதியால் வருந்தல் பெண் கைக்கிளையின் பாற்படும். இதைப் பெரும்பாலும் மருட்பாவில் கூறுவது வழக்கம்.

புறப்பொருள் வெண்பா மாலையில் கைக்கிளைச் செய்தி யைக் கூறும் பன்னிரண்டு பாக்களும் சமநிலை மருட்பா வினாலானவை.

வாயுறை வாழ்த்து : கேட்கும்பொழுது வேம்பும் கடுவும் போலிருப்பினும், பின்னர் நன்மை பயக்கும் என்னுங் கருத்தில் "மெய்ப்பொருள் இது, இது" என்று ஒருவனுக்கு வற்புறுத்திக் கூறும் வாழ்த்து.

செவியறிவுறூஉ : கர்வமின்றி, அந்தணர், அடியார், அருந்தவத்தோர் முதலிய பெரு மக்களுக்கு அடங்கி வாழ்தலே கடன் என்று ஒருவனுக்கு எடுத்துக் காட்டி வாழ்த்துவது.

(1)

" தேவர் பெருமான் திருப்பாற் கடல்கடைந்தோன்
மூவ ரெனவாழ் முதல்வ னனைத்துயிர்க்கும்
காவல் புரிவானிற் காக்கவெவர் வாக்கும்
தண்ணளி புரிமகிழ் மாறா நதியின்
ஒண்ணிதிச் செல்வம துடனீ
மண்மிசை வாழி மதிநலந் தழைத்தே.

இது புறநிலை வாழ்த்து மேல் வந்த மருட்பா. முதல் மூன்றடிகள் வெண்பாவடிகள், பின்னடிகள் ஆசிரியம். ஆகவே, இது புறநிலை வாழ்த்து சமநிலை மருட்பா.

(2)

தாமரைமேல் வைகிய தையல்கொல் தாழ்தளிரில்
காமருவும் வானோர்கள் காதலிகொல்—தேமொழி
மையய ருண்கண் மடந்தைகண்
அய்ய மொழியா தாழுமென் நெஞ்சமே.

இது அய்யம் என்னும் கைக்கிளைச் செய்திமீது வந்த சமநிலைக் கைக்கிளை மருட்பா. வியனிலையாகவும், அதாவது அளவொவ்வாத அடிகளைக் கொண்டும் வரலாம். (வெண்பா அடி நாலும், ஆசிரியவடி இரண்டுமாகவும் வரலாம்.) வியனிலையாயினும், சமநிலையாயினும் கைக்கிளை மருட்பாவின் ஈற்றில் வரும் ஆசிரியவடி இரண்டிற்கு மேல் வரலாகாது என்று இலக்கண நூல்கள் கூறுகின்றன. ஆனால், குமர குருபரர் பாடிய சிதம்பரச் செய்யுட் கோவையில் ஆசிரியவடி மூன்று கொண்ட கைக்கிளை மருட்பா ஒன்று காணப்படுகின்றது.

(3)

தில்லாது செல்வ நிலவா ருடம்படைத்தார்
செல்லா ரொருங்கென்று சிந்தித்து—நல்ல
வருள்ளம் புரிகுவ ராயின்
இருளறு சிவகதி யெய்தலோ வெளிதே.

இது வாயுறை வாழ்த்துச் சமநிலை மருட்பா. வியனிலை மருட்பாவாகவும் வரலாம்.

(4)

இருமூன் றி லொன் றுகொண் டேதங் களைந்து
பெருநீர்மை யார்தொடர்ச்சி பேணி—யிருநிலம்
காப்பா யாகுமதி கடனென
மாப்பெருந் தானை மன்ன ரேறே.

இது, சமநிலைச் செவியறிவுறூஉ மருட்பா. வியனிலையாகவும் வரக்கூடும்.

வாழ்த்துமின் தில்லை நினைமின் மணிமன்றம்
தாழ்த்துமின் சென்னி தலைவற்கு—வீழ்த்த
புறநெறி யாற்றா தறநெறி போற்றி
நெறிநின் றொழுகுதிர் மன்ற
துறையறி மாந்தர்க்குச் சூழ்கட னிதுவே.

இது வியனிலைச் செவியறிவுறூஉ மருட்பாவிற்கு உதாரணம்.

மருட்பா இந் நான்கு பொருள்களின் மேலன்றி, மற்றப் பொருள்களில் வாராது.

வெண்பா, ஆசிரியம், கலிப்பா, வஞ்சிப்பா ஆகிய நான்கும் தமக்கென்ற தனி ஓசையுடையவை. இருவகைப் பாக்களின் கலப்பினாலாகும் மருட்பாவிற்கு அந் நலம் இல்லை. எனவே, இது மற்ற நால்வகைப் பாக்களுடன் சேர்ந்து அய்ந்தாவது பாவாக இடம்பெறும் சிறப்பு இல்லாத தாயிற்று.

அசைச் சீர் :—

தனிக்குறில் சீரின் முதலில் நின்று ஒரு நேரசையாகாது என்றும் சீரின் ஈற்றில்தான் அவ்வாறு நிற்கும் என்றும் கூறியுள்ளோம். ஆனால் விட்டிசைத்த வழி சீர் முதலில் அது நேரசையாகலாம்.

"உண்ணா னொளிதரு வோங்கு புகழ்செய்யான்
துன்னருங் கேளிர் துயர்களையான்—கொன்னே
வழங்கான் பொருள்காத் திருப்பானேல் அ ஆ
இழந்தானென் றெண்ணப் படும்"

என்பது நாலடியாரிலுள்ள ஒரு வெண்பா. இதனில் அ ஆ என்பது ஈற்றுச்சீர். இங்கே அ என்னும் குறில் சீரின் முதலில் நேரசையாயிற்று. இதை விட்டிசை அசை என்பர்.

"அஅவனும் இஇவனும் உஉவனும் கூடியக்கால்
எஎவனை வெல்வா ரிகல்"

என்னுமிச் செய்யுளில் அ, இ, உ, எ என்ற தனிக்குறில்கள் சீர் முதலில் நேரசையாய் நிற்றல் காண்க. இவ்வாறு விட்டிசையாகத் தனிக்குறில் செய்யுள்களில் அருகி வருவதுண்டு.

நாள் மலர் என்னும் வாய்பாட்டினவான அசைச் சீர்கள் வெண்பா ஈற்றிற்குரியவை. ஆனால், கொச்சகக் கலியின் அளவு குறைந்த தாழிசைகளின் ஈற்றிலும், அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பாவின் இடையெண், சிற்றெண்களின் ஈற்றிலும் சிறுபான்மை ஒரு சீராக நிற்பது முண்டு.

வெண்பாவில் கனிச்சீர் வரலாகாது என்று கூறினோம். சில சமயம் வெண்பாச் செய்யுள்,

" மக்கள்மகி ழப்பேசும் மாணிலர்தம் விண்பேச்சை
எக்காலுங் கேளாமை நன்று."

என்றும் நிற்கலாம். மக்கள்மகி என்பது கனிச்சீர். கனி முன் நேர் ஒன்றாத வஞ்சித்தளை. கனிச்சீரும் வஞ்சித் தளையும் வெண்பாவில் இடம் பெறா. எனவே, மக்கள்மகி என்பதிலுள்ள ளகரமெய்யை நீக்கி மக்கமகி என்று அலகிட் டால் காய்ச்சீராய்விடும். காய் முன் நேர் வெண்சீர் வெண் டளை. எனவே தளைதட்டாமை ஏற்படுகின்றது. இதை ஒற்று நீக்கி அலகிடல் என்பர்.

எங்கட் கிறைவன் திருவீதி வந்தக்கால்
திங்கள்முகம் தேயாதோ சொல்.

என்றுமிப்பாவிலும் திங்கள்முகம் என்பதிலுள்ள ளகர மெய்யை நீக்கித் திங்கமுகம் என்று கொண்டால் வெண் டளை விளைந்துவிடும்.

ஆன்றோர் பாடிய வெண்பாவில் கனிச்சீர்வரின், அதன் முன் ஒரு மெய்யும், அம்மெய்யின் முன் ஒரு குறிலும் நிற்கும்.

பாவின் இலக்கணத்தைப் பார்த்தோம். இனி அடுத்த பகுதியில் பாவினங்களின் இலக்கணத்தைக் கற்போம்,

# மூன்றாம் பாகம்

## பாவினம்

நூலின் முதல் பாகத்தில் செய்யுளமைப்பிற்கு இன்றியமையாதனவான உறுப்புக்களின் இலக்கணத்தையும், இரண்டாம் பாகத்தில், செப்பல், அகவல், துள்ளல் தூங்கலோசைகளுக்குரிய வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா என்னும் நால்வகைப் பாக்களின் அமைப்பிற்குரிய இலக்கணத்தையும் அறிந்தோம். இந் நான்கும் சிறப்புடைய பாக்களாகக் கருதப்படுபவை. இவைகளன்றி, வெண்பாவும் ஆசிரியமுமாய்க் கலந்து நடக்கும் மருட்பா என்பதின் இலக்கணத்தையும் பார்த்தோம். இனி, மருட்பா ஒழிந்த மற்ற நால்வகைப் பாக்களும் வழங்கும் இனங்களைக் கருதுவோம்.

சிறந்த பாக்களாகக் கருதப்படும் நால்வகைப் பாக்களுக்கும் தனித்தனி, மூன்றுவகை இனங்கள் இருக்கின்றன. அவை, தாழிசை, துறை, விருத்தம் என்பன. பாக்களுக்குரிய இலக்கணங்களிலிருந்து வேறுபடினும், ஒருவாறு தத்தம் பாக்களை அவை ஒத்து நடத்தல் பற்றிப் பாவினங்களெனப் பெயர் பெறலாயின. பாக்கள் வழங்கும் இனங்கள் வருமாறு :—

**வெண்பா இனம் :**

1. வெண்டாழிசை (வெண்-தாழிசை)
2. வெண்டுறை (வெண்-துறை)
3. வெளிவிருத்தம்

ஆசிரியப்பா இனம் :

1. ஆசிரியத் தாழிசை
2 ஆசிரியத் துறை
3. ஆசிரிய விருத்தம்

கலிப்பா இனம் :

1. கலித்தாழிசை
2. கலித்துறை
3. கலி விருத்தம்

வஞ்சிப்பா இனம் :

1. வஞ்சித்தாழிசை
2. வஞ்சித்துறை
3. வஞ்சி விருத்தம்

அய்ந்தாவது பாவாகக் கருதப்படும் மருட்பா இரு பாக்களின் கலப்பினால் உருப் பெறுவதால், அதற்கு இனங்கள் இல்லை. இனி இப்பாவினங்களை ஒவ்வொன்றாய் எடுத்துக்கொண்டு, அவற்றிற்குரிய இலக்கணங்களைக் கருதுவோம்.

பாவின் இலக்கணத்தை நன்றாய் அறிந்தவர்க்குப் பாவினங்களின் இலக்கணத்தை உணர்தல் எளியதே

தத்தம் பாவிற்குரிய ஓசையின் சிறிது தாழ்ந்து ஒலிப்பது தாழிசை. தத்தம் பாவிற்குத் துறை போன்ற நெறியுடையதாய் நடப்பது துறை. புராண, இதிகாச விருத்தாந்தங்களை விரிவாய் உரைத்தற் குரியதாவது விருத்தம்.

# 1. வெண்பா இனம்

## வெண்டாழிசை

வெண்டாழிசையைச் சிந்தியல் வெண்பாவின் இனமாகக் கொள்ளல் அமையும். வெண்பாவிற்குரிய பொதுவிலக்கணம் எல்லாம் அமையப் பெற்று, மூன்றடிகளை உடையதாய் (இரண்டே முக்கால் அடிகளை உடையதாய்) நாள், மலர்; அல்லது காசு, பிறப்பு என்ற வாய்பாடுகளில் ஒன்றினால் முடிவது சிந்தியல் வெண்பா என்று கூறினோம். அச்சிந்தியல் வெண்பா மூன்று ஒரு பொருளின் மேல் அடுக்கிவரின் வெண்டாழிசை ஆகும்.

உதாரணம்:

(1)

அன்னா யறங்கொல் நலங்கிளர் சேட்சென்னி
ஒன்னா ருடைபுலம் போல நலங்கவர்ந்து
துன்னான் துறந்து விடல்

(2)

ஏடி யறங்கொல்,நலுங்கிலர் சேட்சென்னி
கூடா ருடைபுலம் போல நலங்கவர்ந்து
நீடான் துறந்து விடல்

(3)

பாவா யறங்கொல் நலங்கவர் சேட்சென்னி
மேவா ருடைபுலம் போல நலங்கவர்ந்து
காவான் துறந்து விடல்

வெண்பாவோசையுடன் வேற்றுத்தளை பெறாது அமைந்த சிந்தியல் வெண்பா மூன்று ஒரு பொருளின் மேல் அடுக்கி வந்தமை காண்க. இவ்வாறு அமைவது வெண்டாழிசை எனப்படும்.

வேற்றுத் தளைகளை இடையே பெற்று வெண்டளை பிழைத்து நடக்கும் சிந்தியல் வெண்பா ஒன்றோ, அல்லது இரண்டோ, அல்லது மூன்றின் மிகுந்தோ ஒரு பொருளின் மேல் வரின், அதையும் வெண்டாழிசை எனக் கொள்ளலாம் என்பது ஒரு சார் ஆசிரியர் கருத்து.

வெண்டாழிசையை வெள்ளொத் தாழிசை என்றும் அழைப்பதுண்டு.

சிந்தியல் வெண்பா வெண்டாழிசைப் பெயர் பெறுவது போல், இலக்கணம் சிதைந்த குறட்பா, குறட்டாழிசை என்ற பெயர் பெறுகின்றது. குறட்பாவிற்கும் இதற்கும் இரண்டடிகளாய் வருவதன்றி வேறு எந்த விதமான சம்பந்தமும் இலது. பாவிற்கும், அது வழங்கும் இனத்திற்கும் நெருங்கிய சம்பந்தம் இல்லாமையை முன்னரே கூறியுள்ளோம்.

' பாவடி மதய னை மன்னர்பைம் பொன்னி னீள்மு
[டிமே னிலாவிய
சேவடி யெங்கோமான் செழும்பொன் னெயிலவனே''

என்னுமிது, முதலடி ஆறுசீரும், இரண்டாவது அடி நாற்சீரும் பெற்று நிற்பது காண்க. இது குறட்டாழிசை.

'' தண்ணந் தூநீ ராடச் சேர்ந்த
வண்ண வோதி கண். ''

இது அளவடியும் சிந்தடியும் பெற்று நிற்பது காண்க.

'' என்னே சொல்லுதி வாழி தங்காய்
பொன்னே சொல்லுவன் போகு தங்காய். ''

அளவொத்த இரண்டடிகளைக் கொண்ட குறட்டாழிசை இது.

" கோடல்மன்னு பூங்கானற் குயில்கள்மன்னு [நீள்சோலை
நாடலரிதா மினியாம் நயந்து."

அளவு ஒவ்வாத அடிகளோடு நாலசைச்சீர் வரப்பெற்ற இரண்டடிச் செய்யுள் இது. எனவே, குறட்டாழிசை ஆகின்றது. இவ்வாறு, அமைந்து நடக்கும் ஈரடிச் செய்யுள்களைக் குறட்டாழிசை என்று கொள்ளலாம்.

## வெண்டுறை

வெண்பாவின் இனமெனக் கொள்ளும் வெண்டுறை என்பது மூன்றடிகளைச் சிற்றெல்லையாகவும், ஏழடிகளைப் பேரெல்லையாகவுங் கொண்டது. இதன் ஈற்றடியும் ஈற்றயல் அடிகளும், ஒரு சீரோ, இரு சீர்களோ, பல சீர்களோ குறைந்தும் நிற்கும். இவ்வாறு அமைதல் வெண்டுறையின் இலக்கணம். இதன் எல்லா அடிகளும் ஒத்த வோசையுடன் வரின், ஒரொலிவெண்டுறை என்றும், முன்னர்ச் சிலவடிகள் ஓரோசையுடனும், பின்னர்ச் சில வடிகள் வேறுவித ஓசையுடனும் நடக்குமாயின் வேற்றொலி வெண்டுறை என்றும் அழைப்பர். இது, அளவடி, நெடிலடி, கழிநெடிலடிகளாலும் அமையலாம்.

இச் செய்யுள் மூன்றடிகளை உடையதாயின், சிந்தியல் வெண்பாவிற்கும், நான்கடிகளை உடையதாயின் நேரிசை-இன்னிசை வெண்பாக்களுக்கும், அய்ந்தடி முதல் ஏழடிவரை உடையதாயின், பஃற்றொடை வெண்பாவிற்கும் இனமாகக் கொள்வர்.

உதாரணம் :

"காளாள ரல்லாதார் தாம்பல ராயக்கா லென்னா
மென்னாம்
யாளியைக் கண்டஞ்சி யானைதன் கோடிரண்டும்
பீலிபோற் சாய்ந்துவிழும் பிளிற்றியாங் கேபோலும், "

இது மூன்றடிகளால் வந்த வெண்டுறை. முதலடி ஆறு சீர்களைக் கொண்டது. பின்னிரண்டடிகள் நாற்சீரடிகள். இது ஒத்த ஓசையுடன் நடப்பதால் ஒரொலி வெண்டுறை ஆகும்.

குழலிசைய வண்டினங்கள் கோழிலைய செங்காந்தள்
குலைமேற்ப பாய
அழலெரியின் மூழ்கினவா லந்தோ வளியவென்
றயல்வாழ் மந்தி
கலுழ்வனபோல் நெஞ்சயர்ந்து கல்லருவி தூஉம்
நிழல்வரை நன்னாட னீப்பனோ வல்லன்

இது நான்கடிகளாலான வெண்டுறை. ஈற்றடிகள் இரண்டும் இரண்டு சீர்கள் குறைந்து அளவடிகளாய் நிற்பது காண்க. பா முழுதும் ஓசை ஒத்து நடப்பதால் ஒரொலி வெண்டுறை. மேலே காட்டிய இரு பாக்களையும் வாய் விட்டு ஓதிப் பார்த்தால் ஓசையில் வேறுபாடில்லாமை புலப்படும்.

கல்லாதார் நல்லவையுட் கல்லேபோல்
சென்றிருந்தாற் கருமம் யாதாம்
இல்லாதார் செல்வரைக்கண் டிணங்கியே
யேமுற்றா லியைவ தென்னாம்
பொல்லாதார் நன்கலன்கள் மெய்புதைப்பப்
பூண்டாலும் பொலிவ தென்னாம்
புல்லாதார் பொய்க்கேண்மை புனைந்துறைத்தா
லாவதென்னே
அல்லாதார் பொய்யாவ தறிபவே லமையாதோ.

இது அய்ந்தடி வெண்டுறை ஈற்றடியிரண்டு, இருசீர் குறைந்து அளவடிவாய் வந்துளது. இதன் முதல் மூன்றடிகள் ஒருவித ஓசையையும், பின்னிரண்டிகள் வேறுவித ஓசையையும் கொண்டிருப்பது வாய்விட்டு ஓதிப்பார்த்தால் புலப்படும். எனவே, இது வேற்றொலி வெண்டுறை.

செப்பலோசை சிறிது சிதைய நடக்கும் நேரிசை வெண்பாவையும், இன்னிசை வெண்பாவையும், வெண்டுறையின் பாற் படுத்தி வழங்கலும் குற்றமுடையதாகாது என்பர் சிலர்.

இதுவோ திருவர சிதுவோ மணங்கொல்லை
யிதுவோ வெழிலாலி யென்னுமூ—ரிதுவோதான்
வெட்டுங் கலியன்வேல் வெட்டி நெடுமாலே
எட்டெழுத்தும் பறித்த விடம்

இது நேரிசை வெண்பா போல் தோன்றினும், செப்பலோசை சிதைய நடப்பதால் வெண்டுறை ஆகின்றது.

அம்ம் பவள்வரி நெடுங்கணாய் வஞ்சிக்
கொம்ம் பவள்கொடி மருங்குல் கோங்கின்
அரும்ம் பவள்முலை யொக்குமே யொக்கும்
கரும்ம் பவள்வாயிற் சொல்.

இது இன்னிசை வெண்பா போல் தோன்றினும் செப்பலோசையினின்று சிறிது வேறுபட்டு ஒலிப்பதால் வெண்டுறை ஆகின்றது.

வெண்பா வகையினதான குறள் வெண்பாவும் வெண் செந்துறை எனவோர் இனம் வழங்கும். குறள் வெண் செந்துறை என்றும் அதை அழைப்பர். செந்துறை வெள்ளை என்ற மற்றோர் பெயரும் இதற்கு உளது. ஓரடியில் எத்தனை சீர்கள் வேண்டுமெனினும் இருக்கலாம். எந்தத்தனையும் பெற்றுப் பா நடக்கலாம். ஆனால் பாவின்

இரண்டு அடிகளும் அளவொத்து இருக்கவேண்டும். பாவின் முதலடி அளவடியாயின் இரண்டாவது அடியும் அளவடியாய் இருக்கவேண்டும். முதலடி கழிநெடிலாயின், இரண்டாவது அடியும் கழிநெடிலாக இருக்க வேண்டும் இவ்வாறு நடக்கும் இரண்டடிச் செய்யுள் வெண்செந்துறை எனப்படும்.

உதாரணம் :

1. ஆத்திசூடி யமர்ந்த தேவனை
ஏத்தியேத்தித் தொழுவோ மியாமே.

2. ஆர்கலி யுலகத்து மக்கட்கெல்லாம்
ஓதலிற் சிறந்தன் றொழுக்க முடைமை.

இவ்விருபாக்களும் அளவொத்த அளவடிகளால் அமைந்திருப்பது காண்க. எனவே, இது வெண்செந்துறை.

நண்பகுற வினர்கணமை நாடியுற வாடல்
நறுநெயுறு குடத்தெறும்பு நண்ணலென வெண்ணாய்
பெண்களகக் காதலெல்லாம் பேசுமுயற் கொம்பே
பெருங்கபட மிடுகலனோ பிறங்குமவ ருடலம்

இது எண்சீர்க் கழிநெடிலடி இரண்டினாலான வெண் செந்துறை. அடிகள் அளவொத்திருப்பது காண்க.

பாரதியாரின் கண்ணன் பாட்டு வெண்செந்துறையால் பாடப் பெற்றது. அல்லியரசாணிமாலை, பவளக் கொடி மாலை, பஞ்சபாண்டவர் வனவாசம், நல்லதங்காள் கதை முதலிய இசைப் பாட்டு நூல்கள் வெண்செந்துறைகளால் ஆனவை.

## வெளிவிருத்தம்

மூன்று, அல்லது நான்கடிகளைக் கொண்டு, ஒவ்வோரடியின் ஈற்றிலும் ஒரு சொல்லையே தனிச்சொல்லாகப் பெற்று நடப்பது வெளிவிருத்தம்.

உதாரணம் :

ஏதங்க ணீங்க வெழிலிளம் பிண்டிக்கீழ்—புறாவே
வேதங்க ணான்கும் விரித்தான் விரைமலர்மேல்—புறாவே
பாதம் பணிந்து பரவுதும் பல்காலும் புறாவே.

இது, மூன்றடியான் வந்து ஒவ்வோரடியின் ஈற்றிலும் ஒரே விதமான தனிச்சொல் பெற்று நிற்பது காண்க. எனவே, இது வெளிவிருத்தம்.

ஆவா வென்றே யஞ்சின ராழ்ந்தார்—ஒரு சாரார்
கூகூவென்றே கூவிளி கொண்டார்—ஒரு சாரார்
மாமா வென்றே மாய்ந்தனர் நீந்தார்—ஒரு சாரார்
ஏகீர் நாகீ ரென்செய்து மென்றார்—ஒரு சாரார்.

இது, நான்கடியான் வந்து, ஒவ்வோரடியின் ஈற்றிலும் ஒரே விதச் சொல்லைத் தனிச்சொல்லாகக் கொண்டு நிற்பது காண்க. இது வெளிவிருத்தம்.

மேலே காட்டிய உதாரணப் பாக்களில், முதற் பாவின் அடிகள் ஒவ்வொன்றும் பொருள் முற்றாமலும், ஆனால் இரண்டாவது பாவின் அடிகள் ஒவ்வொன்றும் பொருள் முற்றியும் இருப்பதைக் காண்க. பொருள் முற்றாத அடிகளைக் கொண்ட பாவை, நிலை வெளிவிருத்தம் என்றும், பொருள் முற்றிய அடிகளைக் கொண்ட பாவை மண்டில வெளிவிருத்தம் என்றும் வேறுபடுத்திக் கூறுவர்.

மூன்றடிகளைப் பெற்று நடக்கும் வெளிவிருத்தத்தை நேரிசைச் சிந்தியல் வெண்பாவின் இனமாகவும், நான்கடி

களைப் பெற்று நடக்கும் வெளிவிருத்தத்தை நேரிசை வெண்பாவின் இனமாகவும் கொள்ளலாம்.

உதாரணமாக ஒரு விருத்தச் செய்யுளை எடுத்துக் கொள்வோம்.

" விண்புகு வியன்சினை மெலியப் பூத்தன
சண்பகத் தனிமலர் குடைந்து தாதுக
வண்சிறைக் குயிலொடு மயில்கள் மாறுகூய்க்
கண்சிறைப் படுநிழற் காவு சூழ்ந்தவே. "

இச் செய்யுளில் சீர்கள் ஒத்து நடப்பது காண்க. அடிகளும் சீர்களும் ஒத்து நடத்தல், அவசியமாகும்.

---

குறிப்பு :— விருத்தத்தில் எல்லாவிதச் சீர்களும், தளைகளும் வரலாம். விருத்தச் செய்யுளின் நான்கடிகளும் ஒரே எதுகை பெற்று நிற்பது சிறப்புடைத்து. முதலிரண்டடிகள் ஒரெதுகையாகவும், பின்னிரெண்டடிகள் ஒரெதுகையாகவும் நிற்றலுமுண்டு. ஆனால், பாவின் அடியளவும், சீரின் தன்மையும் ஒத்ததாய் இருக்க வேண்டும்.

அதாவது, செய்யுளின் முதலடி சிந்தடியாயின் மற்ற அடிகளும் சிந்தடியாகவும், அளவடியாயின் அளவடியாகவும், நெடிலடியாயின் நெடிலடியாகவும், கழிநெடிலடியாயின் கழிநெடிலடியாகவும் அமைந்திருக்க வேண்டும்.

செய்யுளின் முதலடியின் மாச்சீர் நின்றவிடத்தில், மற்ற அடிகளிலும் மாச்சீரும், விளச்சீர் நின்றவிடத்தில், விளச்சீரும் காய் நின்றவிடத்தில் காய்ச்சீரும், கனிநின்றவிடத்தில் கனிச்சீரும் நிற்கவேண்டும்.

## 2. ஆசிரியப்பா இனம்

### ஆசிரியத் தாழிசை

நான்கு சீர்களையும், நான்கிற்கு அதிகமான பல சீர்களையும் கொண்ட அளவொத்த மூன்றடிகள் ஒரு பொருள் மேல் மூன்றாக அடுக்கியும், தனித்தும் வருஞ் செய்யுளை ஆசிரியத் தாழிசை என்றழைப்பர். தனித்து வருதலினும், ஒரு பொருள் மேல் மூன்று அடுக்கி வருதலே சிறப்புடையதாகக் கருதப்படுகின்றது.

உதாரணம் ;

(1)

" கன்று குனிலாக் கனியுகுத்த மாயவன்
இன்றுநம் மானுள் வருமே லவன்வாயில்
கொன்றையந் தீங்குழல் கேளாமோ தோழி,

(2)

பாம்பு கயிறாக் கடல்கடைந்த மாயவன்
ஈங்குநம் மானுள் வருமே லவன்வாயில்
ஆம்பலந் தீங்குழல் கேளாமோ தோழி,

(3)

கொல்லியஞ் சாரற் குருந்தொசித்த மாயவன்
எல்லிநம் மானுள் வருமே லவன்வாயில்
முல்லையந் தீங்குழல் கேளாமோ தோழி. "

இவை, வெண்டளைபெற்ற நாற்சீரடிகளைக் கொண்டு ஒரு பொருளின் மேல் மூன்றாய் அடுக்கி வந்த ஆசிரியத் தாழிசை.

" வானுற நிமிர்ந்தனை வையக மளந்தனை
பான்மதி விடுத்தனை பல்லுயி ரோம்பினை
நீனிற வண்ணனின் நிரைகழல் தொழுதனம். "

இது, ஆசிரியத்தளை பெற்ற நாற்சீரடிகளைக் கொண்டு ஒரு பொருளின்மேல் தனித்து வந்த ஆசிரியத்தாழிசை.

நான்கிற்கு அதிகமான சீர்களைக் கொண்ட அடிகளைக் கொண்டும், கலித்தளை வரப்பெற்றும் ஆசிரியத் தாழிசை நடக்கலாம்.

## ஆசிரியத்துறை

நான்கடியாய் ஈற்றயலடி அளவில் குறைந்தும், நான்கடியாய் ஈற்றயல் அளவு குறைந்து இடை மடங்கியும், நான்கடியாய் இடையிடை அடிகள் அளவு குறைந்தும் இடை மடங்கியும் வருவது, ஆசிரியத்துறை ஆகும். (செய்யுளின் இடையில் வந்த ஓரடியோ, அல்லது அவ்வடியின் ஒரு பகுதியோ மீண்டும் மடங்கி வருதல் இடைமடக்கு எனப் படும்.) ஓரடியில் இத்தனை சீர்கள்தான் இருக்கவேண்டும் என்ற நியதியில்லை. எத்தனை சீர்கள் வேண்டுமெனினும் வரலாம். இதுவே, ஆசிரியத்துறையின் இலக்கணம்.

உதாரணம் :

"கரைபொரு கான்யாற்றங் கல்லத ரெம்முள்ளி வருதிராயின்
அரையிருள் யாமத்தே யடுபுலி யேறஞ்சி யகன்று போக
கரையுறு மேறஞ்சு நுங்கைவே லஞ்சுநும்மை
வரையர மங்கையர் வவ்வுத லஞ்சுதும் வாரலையோ."

என்பது, நான்கடியாய், ஈற்றயலடி அளவின் குறைந்து வந்த ஆசிரியத்துறை. ஈற்றயலடி, அதாவது மூன்றாவதடி அடி அளவு குறைந்திருப்பது காண்க.

"வண்டுளர் பூந்தார் வளங்கெழு செம்பூட்சேய்
வடிவே போலத்
தண்டளிர்ப்பூம் பிண்டித் தழையேந்தி மாவினவித்
தணந்தோன் யாரே
தண்டளிர்ப்பூம் பிண்டித் தழையேந்தி வந்துநம்
பண்டைப் பதியினவிப் பாங்குபட மொழிந்து
பகர்ந்தோ னன்றே."

இது நான்கடியாய், ஈற்றயலடி அளவு குறைந்திருப்ப தோடு, இரண்டாவதடியின் ஒரு பகுதி, மூன்றாவதடியில் மடங்கி வந்திருப்பது காண்க. எனவே, இது இடை மடக்காய் வந்த ஆசிரியத்துறை.

"சங்க முழங்குந் தமிழ்நாடன் றன்னைத்
திங்கள் முகத்துத் தெரிவையர் கண்டு தினைக்கவான்
கங்குல் புகுந்து கருமுகில் தன்னை
எங்க ணகற்றி யிருந்தனை வாழி வெண்டிங்காள்."

இதன் முதலடியும் மூன்றாமடியும் அளவு குறைந்திருப்ப தால், இது இடையிடைக் குறைந்த ஆசிரியத்துறை ஆகின்றது.

இரங்கு குயின்முழவா யின்னிசையாழ் தேனா
அரங்க மணிபொழிலா வாடும் போலு மிளவேனில்
அரங்க மணிபொழிலா வாடுமே யாமாயின்
மரங்கொல் தணந்தகன்றார் நெஞ்சமென் செய்த தின
வேனில்

இதன் முதலடியும் மூன்றாவது அடியும் அளவு குறைந்தும், இரண்டு மூன்றாவது அடிகளின் ஒரு பகுதி மடங்கியும் வந்திருப்பது காண்க. எனவே, இது இடையிடைக் குறைந்து இடைமடக்காய் வந்த ஆசிரியத்துறை.

## ஆசிரிய விருத்தம்

ஒத்த அளவுடைய கழிநெடிலடி நான்கு கொண்டு நடப்பது ஆசிரிய விருத்தம். எட்டிற்கும் அதிகமான சீர்களைக் கொண்ட அடிகளையுடைய பாவைச் சிறப்புடைய ஆசிரிய விருத்தமாகக் கொள்வதில்லை.

உதாரணம் :

"ஈட்டுவார் தவம லான்மற் றீட்டினா
 லியைவ தின்மை
காட்டினார் விதியா ரஃது காண்கிற்பார்
 காண்மி னம்மா
பூட்டுவார் முலைபொ றாத பொய்யிடை
 தையப் பூநீர்
ஆட்டுவா ரமரர் மாத ராடுவா
 ரரக்கர் மாதர்."

இது, அறுசீர்க் கழிநெடிலடியால் வந்த சிறப்புடை ஆசிரியவிருத்தம்.

"ஆயிடை யரக்க னரம்பையர் குழுவும்
 அல்லவும் வேறய லகல
மேயினன் பெண்ணின் விளக்கெனுந் தகையா
 ளிருந்துழி யாண்டவன் வெருவிப்
போயின வுயிர ளாமென நடுங்கிப்
 பொறிவரி யெறுழ்வலிப் புகைக்கண்
காய்சின வுழுவை தின்னிய வந்த
 கலையினம் பிணையெனக் கரைந்தாள்."

இது, எழுசீர்க்கழி நெடிலடியால் வந்த சிறப்புடை ஆசிரிய விருத்தம்.

'செங்கயலுங் கருவிளையுஞ் செல்வேலும்
பொருகணையுஞ் செயிர்க்கு நாட்டம்
பங்கயமு மிலவலரும் பனிமுருக்கும்
பவளமுமே பதிக்குஞ் செவ்வாய்
பொங்கரவி னிரும்படமும் புனைதேரும்
பொலிவழிக்கும் புடைவீங் கல்குல்
கொங்கிவருங் கருந்கூந்தற் கொடியிடையாள்
வனமுலையுங் கூற்றங் கூற்றம்.'

இது அறுசீர்க்கழி நெடிலடியாலான ஆசிரிய விருத்தம். இதனில், அடிகள் ஒவ்வொன்றும் பொருள் முற்றியிருப்பது காண்க. இவ்வாறு அமையும் ஆசிரியவிருத்தச் செய்யுளை ஆசிரிய மண்டில விருத்தம் என்று அழைப்பர். பொருள் முற்றாத அடிகளாலானதை ஆசிரியநிலை விருத்தம் என்று அழைப்பர்.

எட்டிற்கு அதிகமான சீர்களைக் கொண்ட சிறப்பில் ஆசிரிய விருத்தங்களும் இலக்கியங்களில் பயின்று வருகின்றன. பதினான்கிற்கு அதிகமான சீர்களையுடைய அடிகள் ஆசிரிய விருத்தத்தில் வாரா. ஒன்பது, பத்துச் சீர்களைக் கொண்ட கழிநெடிலடி இனிய ஓசையைத் தாரா. ஆகவே, ஆறு, ஏழு, எட்டுச் சீர்களைக் கொண்ட கழி நெடிலடிகளே சிறப்புடையவை. பன்னிரண்டு, பதினாலு சீர்களைக் கொண்ட அடிகள் கொள்ளத் தக்கவை யென்று கருதப்படுகின்றது ஒன்பது, பத்துச் சீர்களைக் கொண்டவை விலக்கத் தக்கவை.

பதினொன்றும், பதிமூன்றும் நூல்களில் அதிகம் நிலவக் காண்கிலம்.

விசேஷக் குறிப்பு :

இலக்கிய வழக்குடைய அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தங்களுக்குரிய வாய்பாடுகளைக் கீழே தருகின்றோம்.

(1)

"விளம்—மா—தேமா
விளம்—மா—தேமா,"

இச் *சீர்க்கோவையால்* அமைவது ஒருவகை ஆசிரிய விருத்தம்.

"விளம் என்பது கூவிளம், கருவிளம்;
மா என்பது தேமா, புளிமா,"

என்று கொள்க. இவ்வகை விருத்தங்களில், விளத்திற்குப் பதில் தேமாங்காய் வருதலும் உண்டு.

"வேதியா வேத கீதா விண்ணவ ரண்ணா......"

என்ற அப்பர் தேவாரச் செய்யுள் நல்ல உதாரணமாகும்.

(2)

"மா—மா—காய்
மா—மா—காய் "

என்ற *சீர்க்கோவை* ஒருவகை ஆசிரிய விருத்தம்.

"பற்றற் றார்சேர் பழம்பதியை
பாசூர் நிலாய..."

என்ற திருவாசகக் குழைத்துப் பத்துச் செய்யுள் உதாரணமாகும். இருவித மாச்சீர்களும் வரலாம்.

(3)

" காய்—காய்—காய்
காய்—மா—தேமா,"

என்பது ஒருவகை வாய்பாடு.

"கங்காளர் கயிலாய மலையாளர்
காணப்பே ராளர்..."

என்ற அப்பர் தேவாரச் செய்யுள் உதாரணம். அய்ந்தாஞ் சீரான மா, தேமாவாகவோ புளிமாவாகவோ இருக்கலாம்.

(4)

"மா—கூவிளம்—விளம்
விளம்—விளம்—மாங்காய்."

என்பது ஒருவகை. இதில் மா என்பது, குறிலையோ அல்லது மெய்யடுத்த குறிலையோ ஈற்றிலுடைய மாச் சீரைக் குறிக்கும். இதைக் "குறிய மா," என்பர். மாங்காய் என்பது, தேமாங்காய் அல்லது புளிமாங்காய் ஆக இருக்கலாம்.

"ஆடு கின்றிலை, கூத்துடை
யரன்கழற் கன்பிலை யென்புருகிப்
பாடு கின்றிலை..."

என்ற திருவாசகச் செய்யுள் உதாரணம்.

(5)

"மா—மா—மா
விளம்—விளம்—மா."

என்பது ஒருவகை. முதல் மா குறிய மா. மா எல்லாம் தேமா, புளிமாவாக இருக்கலாம்; விளம் எல்லாம் கருவிளம், கூவிளமாக இருக்கலாம்.

"நீல வண்டறை கொன்றை
நேரிழை மங்கையொர் திங்கள்
சால வாளர..."

என்பது உதாரணம். சுந்திரர் தேவாரச் செய்யுள்.

செய்யுளின் மூன்றாஞ்சீரும் ஆறாஞ்சீரும் மாச்சீர் களாகவும், மற்றவை வெண்டளை கலந்த விளமாச்சீர் களாகவும் இருத்தல் ஒருவகை ஆசிரியம். இவ்வகைச் சீர்க்கோவை செய்யுளுக்கு ஓசையையும் நடையோட்டத் தையும் அளிக்கும். உதாரணம் :

(6)

உன்னை யுகப்பன் குயிலே
யுன்துணைத் தோழியு மாவன்
பொன்னை யழித்தநன் மேனிப்
புகழிற் றிகழு மழகன்
மன்னன் பரிமிசை வந்த
வள்ளற் பெருந்துறை மேய
தென்னவன் சேரலன் சோழன்
சீர்ப்புயங் கன்வரக் கூவாய்.

என்னுமிது திருவாசகச் செய்யுள். இதை வாய்பாட்டில் எழுதினால், இதன் அமைப்பு முறை நேயர்களுக்கு விளங்கிவிடும்.

" தேமா—புளிமா—புளிமா
கூவிளம்—கூவிளம்—தேமா
தேமா—கருவிளம்—தேமா
புளிமா—புளிமா—புளிமா
தேமா—கருவிளம்—தேமா
தேமா—கருவிளம்—தேமா
கூவிளம்—கூவிளம்—தேமா
கூவிளம்—கூவிளம்—தேமா."

என்பது வாய்பாடு. விளத்திற்குப் பதிலாய் மாங்காய் வரலாம். இயற்சீர் வெண்டளைகளும் வெண்சீர் வெண் டளைகளும் விரவி வரலாம்.

(7)

"மா - மா—மா
மா—மா—காய்."

என்றும் சீர்கள் அமையலாம்.

"பாரோர் விண்ணோர் பரவி
யேத்தும் பரஞ்சோதி
வாராய் வாரா..."

என்ற திருவாசகச் செய்யுள் நல்ல உதாரணமாகும். அய்ந்து மாச்சீர்களும் ஒரு காய்ச்சீரும் பெற்று நடக்கும் இப்பா, ஓசை சிறக்க நடக்கும் அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தமாகும்.

இவ்வகை அமைப்பில்லா விருத்தங்களை ஆசிரிய விருத்தமாகக் கொள்ளாமையே அமையும் என்று விருத்தப் பாவியல் என்னும் நூலின் ஆசிரியர் அபிப்பிராயப்படு கின்றார்.

# 3. கலிப்பா இனம்

## தாழிசை

கலிப்பாவின் இனமாகும் இத்தாழிசை வேறு, முன்னர் யாம் எடுத்து விளக்கிய கலிப்பாவின் உறுப்புக்களில் ஒன்றான தாழிசை வேறு. ஒன்றை மற்றொன்றாக நேயர்கள் மயங்கலாது என்று இது கூறினோம். அது, பரணிப் பாக்கள் பாடுவதற்குரிய தாழிசை. அது எப்பொழுதும் இரண்டடியாகவே வரும். இதுவோ இரண்டும், இரண்டிற்கு அதிகமான அடிகளும் பெற்று நடக்கும். ஈற்றடி அளவு மிகுந்தும், மற்றவடிகள் தம்முள் ஒத்தும், ஒவ்வாமலும், ஒரு பொருளின்மேல் மூன்றாய் அடுக்கியும், தனித்தும் வரலாம்

ஈற்றடி மிகுந்தும் மற்றவடிகள் ஒத்தும் நடப்பின் அதைச் சிறப்புடைக் கலித்தாழிசை என்றும், ஒவ்வாது நடப்பின் சிறப்பில் கலித்தாழிசை என்றும் கூறுவர்.

(1)

கொய்தினை காத்துங் குளவி யடுக்கத்தெம்
பொய்தற் சிறுகுடில் வாரனீ யைய நலம்வேண்டின்

(2)

ஆய்தினை காத்து மருவி யடுக்கத்தெம்
மாசிற் சிறுகுடில் வாரனீ யைய நலம்வேண்டின்

(3)

மென்றினை காத்தும் மிகுபூங் கமழ்சோலைக்
குன்றச் சிறுகுடில் வாரனீ யைய நலம்வேண்டின்,

இவை, இரண்டடியாய் ஈற்றடிமிகுந்து ஒரு பொருளின் மேல் மூன்றாய் அடுக்கி வந்த கலித்தாழிசை.

வாள்வரி வேங்கை வழங்குஞ் சிறுநெறியெங்
கேள்வரும் போதி னெழால் வாழி வேண்டிங்காள்
கேள்வரும் போதி னெழாதாய்க் குறாலியரோ
நீள்வரி நாகத் தெயிறே வாழி வெண்டிங்காள்.

இதன் ஈற்றடி மிகுந்தும், ஏனைய அடிகள் அளவொத்தும், ஒரு பொருளின் மேல் தனித்து வந்திருப்பது காண்க. எனவே, இது கலித்தாழிசை.

"பூண்ட பறையபறையப் பூத மருள
நீண்ட சடையா னாடுமே
நீண்ட சடையா னாடு மென்ப
மாண்டசாயல் மலைமகள் காணவே காணவே.

இது, ஈற்றடி மிகுந்தும், இரண்டாவது அடி அளவு குறைந்தும், முதலடியும், மூன்றாவது அடியும் அளவொத்தும் ஒரு பொருளின் மேல் தனித்தும் வந்த கலித்தாழிசை. இரண்டு மூன்றாவது அடிகள் அடிமடக்காயிருப்பது காண்க.

## கலித்துறை

நெடிலடி நான்கு பெற்று நடப்பது கலித்துறை எனப்படும். இதைக் கலிநிலைத்துறை என்றும் அழைப்பர்.

உதாரணம் :

பாரொக் குஞ்சொல் பைங்கிளி யோடும்
  பலபேசி
மாகத் தும்பர் மங்கையர் நாண
  மலர்கொய்யும்

தோகைக் கொம்பி னன்னவர்க் கன்னம்
நடைதோற்றுப்
போகக் கண்டு வண்டின மார்க்கும்
பொழில்கண்டார்.

என்னுமிக் கம்ப ராமாயணச் செய்யுள் கலித்துறை ஆகும். ஜீவக சிந்தாமணி, பெரிய புராணம் முதலிய நூல்களில் கலித்துறைச் செய்யுள்கள் அதிகம் பயின்று வருகின்றன. நேயர்கள் அந் நூல்களில் இச்செய்யுளைக் கண்டு பயிலுதல் நலம்.

இக்கலித்துறைச் செய்யுளை எழுத்தெண்ணிப் பாடுங் கால், கட்டளைக் கலித்துறை என்ற பெயர் பெறும். இதன் இலக்கணம் வருமாறு :

"நெடிலடி நான்கு கொண்டதாயும், அவ்வடிகளின் முதல் நான்கு *சீர்கள்* வெண்டளை தழுவியதாயும் இருக்க வேண்டும். கடைசிச் *சீர்கள்*, (அதாவது அடிகளின் அய்ந் தாவது *சீர்*) கூவிளங்காய், அல்லது கருவிளங்காய்ச் *சீர்களில்* ஒன்றாயிருக்க வேண்டும். இடையில்-விளங்காய்ச் *சீர்கள்* வரலாகாது. அடியின் முதல் நான்கு *சீர்களும்* இயற்சீர் வெண்டளை பெற்று நிற்பது சிறப்புடையதாகும். சிறுபான்மை தேமாங்காய், புளிமாங்காய்ச் *சீர்கள்* வருதலும் உண்டு. இவ்விதிகள் அமைந்த பாவின் அடிகள் நேர சையை முதலில் உடையதாயின், அடி ஒவ்வொன்றும் பதினாறு எழுத்துக்களையும், நிரையசையை உடையதாயின் பதினேழு எழுத்துக்களையும் கொண்டிருக்கும் (எழுத்தை எண்ணுங்கால் மெய்யெழுத்தை நீக்கி எண்ண வேண்டும்) பாவின் ஈற்றடி ஏகாரத்தில் முடியும்."

இவ்விலக்கணம் பெற்ற செய்யுள் கட்டளைக் கலித் துறை ஆகும். *திருக்கோவையார்*, த ஞ் சை வா ண ன் கோவை முதலிய நூல்கள் கட்டளைக் கலித்துறைகளினால்

ஆனவை. அந்நூல்களில் இக்கலித்துறைச் செய்யுளை ஓதிப் பயிலுதல் பயனுடையதாகும்.

உதாரணம் :

பேய்போல் திரிந்து பிணம்போற் கிடந்திட்ட
பிச்சையெல்லாம்
நாய்போ லருந்தி நரிபோ லுழன்றுநன்
மங்கையரைத்
தாய்போற் கருதித் தமர்போ லனைவர்க்குந்
தாழ்மைசொல்லிச்
சேய்போ லிருப்பவர்கண் டீருண்மை ஞானந்
தெளிந்தவரே.

இதில் மேலே கூறப்பெற்ற இலக்கணம் அமைந்திருத்தல் காண்க. அடிகளின் ஆரம்பம் நேரசையால் இருப்பதால், அடி ஒவ்வொன்றும் பதினாறு எழுத்துக்களை உடையது. எண்ணி அறிக.

வலம்புரி போற்கொடை வாணன்றென் மாறை
மழைவளர்பூஞ்
சிலம்புறை சூர்வந்து தீண்டின போலொளி
தேம்பியிவ்வா
றுலம்புனை தோளுநின் னுள்ளமும் வாடி
யுருகிநின்று
புலம்புவ தென்னைகொல் லோசொல்ல வேண்டும்
புரவலனே.

நிரையசையை, அடி முதலாகவுடைய இக்கட்டளைக் கலித்துறையின் அடிதோறும் பதினேழு எழுத்துக்கள் இருப்பதை எண்ணி அறிக.

## விசேஷக் குறிப்பு

இலக்கிய வழக்குடைய கலித்துறைச் செய்யுள்களின் வாய்பாடுகளைப் பார்ப்போம்.

(1)

" (குறிய) மா—கூவிளம்—விளம்
விளம்—மா. "

இவ்வாய்பாட்டில் அமையும் செய்யுள் ஒருவகைக் கலித்துறை.

" பத டுங்கின பணிக்குலம்
நடுங்கின புரைதீர்
வாக டுங்கின மாதிரம்
நடுங்கின............ "

என்ற கந்தபுராணச் செய்யுள் உதாரணமாகும். அடியீற்று மாச்சீருக்குப் பதில் காய்ச்சீரும் வரலாம்.

" இரதி யின்னலும் வருந்திடத்
தொன்மையி லெங்கோமான்
விரத மோனமே............ "

என்ற இச் செய்யுள் ஈற்று மா விற்குப் பதில் காய் வந்திருப்பது காண்க. இவ்வகைக் கலித்துறைகளே கம்பர், கச்சியப்பர், பரஞ்சோதியார் போன்றாரின் நூல்களில் இடம் பெற்றுள்ளன.

(2)

"மாங்கனி—கூவிளம்—கூவிளம்
தேமா—தேமா"

இது ஒருவகைக் கலித்துறை. இவ்வாய்பாட்டுச் செய்யுளில் நடையோட்டத்தின் நயத்தைக் காணலாம்.

"தாமந்தரு மொய்ம்புடை வீரன்ச
யந்தன் விண்ணோர்
ஏமந்தரு வன்சிறைச்.. ..."

என்பது உதாரணம். இதனில் மூன்றாஞ் சீரான வீரன்ச என்பது தேமாங்காய்ச்சீர். இது கூவிளத்திற்குப் பதிலாக வந்துள்ளது. இவ்வாறும் வரலாம். நாலாஞ் சீரான தேமா குறிய மாவாக இருத்தல் சிறப்புடையதாகும்.

(3)

"மா—புளிமா—மாங்கனி
தேமா—தேமா"

இவ்வாறு செய்யுள் அமைதல் ஒருவகை.

"அன்னா ரமருக் களஞ்சென்றவீ
வேந்து நம்பி
தன்னா யகமாம்... ..."

என்பது உதாரணம்.

குறிப்பு : இவ்வாய் பாட்டினின்று சிறிது வேறுபட்டும் செய்யுள் அமையலாம். முதல் மா வுக்கும் இரண்டாவது புளிமாவுக்கும் பதிலாக காயும் தேமாவும் வருவதோடு, மூன்றாவது புளிமாங்கனியாகவும் நாலு அய்ந்து சீர்கள் தேமாவாகவும் வருவதுண்டு.

உதாரணம் :

"செறிகின்ற ஞானத் தனிநாயகச்
செம்ம னாமம்
எறிகின்ற வேலை யமுதிற்செவி
யேக லோடும்

அறிகின்ற துன்பிற் சயந்தன்மகிழ்
வெய்தி முன்னர்
அறிகின்ற லன்போற் றொழுதின்னவ
றைத லுற்றான்.''

இதில், ''காய்—மா—புளிமாங்கனி — தேமா — தேமா'' அமைந்திருப்பது காண்க. இவ்வகை வாய்பாடுகளை யுடைய கலித்துறைகளே இலக்கியங்களில் அதிகம் வழங்கி வரக் காண்கின்றோம்.

## கலிவிருத்தம்

துள்ளலோசையின்றி, அளவடி நான்கு கொண்டு நடப்பது கலிவிருத்தம். பெரும்பாலும் இயற்சீர்களால் செய்யுள் அமைவதே சிறப்புடையதாகும். பொழிப்பு மோனை பெற்றுப் பா நடப்பின் ஓசை சிறக்கும்.

குஞ்சர மனையவர் சிந்தைகொ ளினையார்
பஞ்சினை யணிவார் பால்வளை தெரிவார்
அஞ்சன மெனவார் ளம்புக ளிடையே
நஞ்சினை யிடுவார் நாண்மலர் புனைவார்.

என்பது கலிவிருத்தம். இதில் துள்ளலோசை பயிலாமை காண்க. எனவே, கலிப்பாவின் இனமென வழங்கும் கலிவிருத்தத்திற்கும் முன்னர்க்கூறிய கலிப்பாவிற்கும் சம்பந்தமில்லாமை அறிக.

தேம்பழுத் தினியநீர் மூன்றுந் தீம்பலா
மேம்பழுத் தளிந்தன சுளையும் வேரியும்
மாம்பழக் கனிகளு மதுத்தண் டீட்டமும்
தாம்பழுத் துளசில தவள மாடமே.

என்ற இப்பாவும் கலிவிருத்தம். இயற்சீரால் அமைந்த அளவடி நான்கு கொண்டிருப்பது காண்க.

**விசேஷக் குறிப்பு :—**

விருத்தங்களில் கலிவிருத்தம் *சிறந்த* விருத்தமாகக் கருதப்படுகின்றது. கீழ்வரும் வாய்பாடுகளில் *சீர்கள்* அமையின் விருத்தம் சிறப்புடையதாகும்.

(1)

(குறிய)மா—கூவிளம்—கூவிளம்—கூவிளம்.

இவ்வாறு *சீர்கள்* அமைந்து பா நடப்பது ஒருவகை. கூவிளமே யன்றிக் கருவிளமும், மாவும், மாங்காயும் வருவதும் உண்டு.

"உலகம் யாவையுந் தாமுள வாக்கலும்
நிலைபெ றுத்தலும் நீக்கலு நீங்கலா
அலகி லாவினை யாட்டுடை யாரவர்
தலைவ ரன்னவர்க் கேசர ணாங்களே."

என்ற இக்கம்ப ராமாயணச் செய்யுளில் புளிமா, கூவிளம் கூவிளம், கூவிளம் என்னும் முறையில் *சீர்கள்* அமைந் திருப்பது காண்க.

(2)

"விளம்—விளம்—(குறிய)மா—கூவிளம்."

இம் முறையில் *சீர்கள்* அமைதல் ஒருவகைக் கலி விருத்தம்.

உதாரணம் :

தூயசந் திரன்கலை பெருக நாடொறும்
தீயவன் கானகந் தேயு மாறுபோல்
சீயசந் திரன்றவம் பெருக நாடொறும்
காயமுங் கசாயமும் கரிச மானவே.

இதில், கூவிளம், கருவிளம், புளிமா, கூவிளம் என்ற முறையில் சீர்கள் அமைந்திருப்பது காண்க.

(3)

"மா—மா—மா—கூவிளம்,"

அல்லது

"தேமா—புளிமா—புளிமா—புளிமா."

என்ற முறையில் கலிவிருத்தங்கள் அமையின், சந்தச் சிறப்பு ஏற்படும்.

"பெண்ணேர் தருமே னியனே புரியும்
மின்னேர் சடையாய் விரைகா விரியின்
நன்னீர் வயனா கேச்ச ரநகரின்
மன்னே யெனவல் வினைமாய்ந் தறுமே!"

என்ற சம்பந்தர் தேவாரம் உதாரணமாகும்.

(4)

புளிமா—புளிமா—புளிமா—புளிமா

அல்லது

புளிமா—புளிமா—புளிமா—காய்.

என்ற சீர்க்கோவையிலும் சந்தக் கலிவிருத்தங்கள் அமையலாம். முதல் சீர் தேமாவாகவும் இருக்கலாம்.

"சூலப் படையான் விடையான் சுடுநீற்றான்
காலன் தனையா ருயிர்வவ் வியகாலன்
கோலப் பொழில்சூழ்ந் தகுரங்க ணின்முட்டத்
தேலங் கமழ்புன் சடையெந் தைபிரானே."

" தேமா புளிமா, புளிமா, புளிமாங்காய்," என்ற சீர்க் கோவையை உடையது இக்கலிச் செய்யுள். இதன் ஈற்றுச் சீர் காய். மூன்றாவது அடியின் மூன்றாவது சீரும் காயாய் இருக்கின்றது. இடையில் காயும் ஒரோ வழி வருவதுண்டு.

(4)

" கூவிளம்கூவிளம்—கூவிளம்—தேமா."

என்ற வாய்பாட்டிலும் சந்தக்கலி விருத்தம் அமையும்.

" எண்ணியி ருந்துகி டந்துந டந்தும்
அண்ணலெ னாநினை வார்வினை தீர்ப்பார்
பண்ணிசை யார்மொழி யார்பலர் பாட
புண்ணிய னாருறை பூவண மீதோ."

என்பது உதாரணம்.

(5)

" தேமா—தேமா—தேமா—தேமா "

என்று அடி முழுதும் தேமாச் சீர்கள் வரலாம்.

வியா வாமா மாவா யாவீ
யாவா யாரா யாரா வாயா
வாயா டேமா மாடே யாவா
வாயா மாதோ தோமா ராக

என்ற காஞ்சிப் புராணச் செய்யுள் உதாரணமாகும்.

(6)

(வாழி) மா—கூவிளம் - கூவிளம்—தேமா

இவ்வாறு சீர்கள் அமைதல் ஒருவகைச் சந்தக் கலி விருத்தம். (வாழி) மா என்பது முதலில் நெடிலோசை யுடைய மாச்சீரைக் குறிக்கும்.

வீரத் திண்டிறல் மார்பினில் வெண்கோ
டாரக் குத்திய முத்திட நாகம்
வாரத் தன்குலை வாழை மடல்சூழ்
ஈரத் தண்டென விற்றென வெல்லாம்.

என்பது உதாரணம். நெடிலோசையை முதலிலுடைய மாவும், கூவிளமும், தேமாவும் வந்திருப்பது காண்க.

(7)

" மாங்காய்—விளங்காய்—மாங்காய்—தேமா."

இவ்வாறு சந்தக் கலிவிருத்தம் அமைந்து நடக்கும். முதல் மாங்காய், தேமாங்காயாகவும், அடுத்த விளங்காய் கூவிளங்காயாகவும் இருக்கலாம்.

வெங்கார்தி றப்புணரி வேறேயு மொன்றை
பொங்கார்க லிப்புனல்த ரம்பொலிவ தேபோல்
இங்கார்க டத்திரென வென்னாவெ ழுந்தான்
அங்கார தாரைபெரி தாலால மன்னாள்

என்ற கம்பர் செய்யுள் உதாரணமாகும். மேலே கூறிய வாய்பாட்டில் செய்யுள் அமைந்திருப்பது காண்க. வேறு வித வாய்பாடுகளிலும் சந்தக் கலிவிருத்தம் அமையலாம். நூல்களில் வருங்கால கண்டு கொள்க.

## 4. வஞ்சிப்பா இனம்

### வஞ்சித்தாழிசை

குறளடி நான்கு ஒரு பொருளின்மேல் மூன்றாய் அடுக்கி வரின், அது வஞ்சித்தாழிசை ஆகும்.

உதாரணம் ;

(1)

மடப்பிடியை மதவேழம்
தடக்கையான் வெயின்மறைக்கும்
இடைச்சுர மிறந்தார்க்கே
நடக்குமென் மனனேகாண்

(2)

பேடையை யிரும்போத்துத்
தோகையான் வெயின்மறைக்கும்
காடக மிறந்தார்க்கே
ஓடுமென் மனனேகாண்

(3)

இரும்பிடியை யிகல்வேழம்
பெருங்கையான் வெயின்மறைக்கும்
அருஞ்சுர மிறந்தார்க்கே
விரும்புமென் மனனேகாண்.

இவை இரு சீரடி நான்காய் ஒரு பொருள்மேல் மூன்று அடுக்கி வந்த வஞ்சித்தாழிசை. இரு சீரடிகளில் மோனை வருவதற்கு இல்லை.

## வஞ்சித்துறை

குறளடி நான்கு ஒரு பொருள் மேல் ஒன்றாக வரின் வஞ்சித்துறை ஆகும். (மூன்றாய் அடுக்கி வரின் வஞ்சித் தாழிசையாய் விடும்.)

உதாரணம் :

மைசிறந்தன மணிவரை
கைசிறந்தன காந்தளும்
பொய்சிறந்தன காதலர்
மெய்சிறந்திலர் விளங்கிழாய்

இது, இருசீர் நான்கடியாய் ஒரு பொருளின்மேல் தனித்து வந்திருப்பது காண்க. எனவே, வஞ்சித்துறை.

அன்புறு கிளியே
இன்புறு முருகன்
என்புடை வரவே
அன்புடை னழையாய்.

இதுவும் வஞ்சித்துறைக்கு உதாரணம்.

## வஞ்சிவிருத்தம்

முச்சீரடி நான்காய் வருவது வஞ்சிவிருத்தம்.

உதாரணம் :

சோலை யார்ந்த சுரத்திடை
காலை யார்கழ லார்ப்பவும்
மாலை மார்பன் வருமாயின்
நீலவுண் கணிவள் வாழுமே.

என்பது சிந்தடி நான்காய் வந்த வஞ்சி விருத்தம்.

கள்ள மாய வாழ்வெலாம்
விள்ள ஞானம் வீசுதாள்
வள்ளல் வாழி கேளெனா
உள்ள வாறு ணர்த்தினான்.

என்ற இக் கம்பராமாயணச் செய்யுளும் வஞ்சி விருத்தமே.

தனக்கென ஓரோசையும், தனித்த நிலையும் இல்லா மருட்பா இனம் வழங்குவதற்கில்லை. மருட்பாவின் இலக்கணத்தை முன்னரே கூறிவிட்டோம்.

இவ்வளவோடு யாப்பியல் முற்றும்.

# அநுபந்தம் I

## இசைப் பாட்டு

யாப்பிலக்கண விளக்க நூலின் முதல் மூன்று பாகங்களில் நால்வகைப் பாக்களையும், அவை வழங்கும் இனங்களையும், அவற்றோடு, வெண்பாவும் ஆசிரியமுங்கலந்த சிறப்பில் மருட்பாவையும் பார்த்தோம். இனி, இந் நாளில் பாடப் பெற்று வரும் புதுப் பாட்டு என்ற பெயர் கொண்டு வழங்கிவரும் இசைப்பாட்டுக்களின் இலக்கணத்தை அறிவோம்.

இற்றைக்கு ஆயிர வருடங்களுக்கு முன்னரே, அதாவது சரித்திர காலத்திற்கு முன்னரே, தமிழ் இலக்கியம் வளமும் நிலையும் உடைய தன்மையதாய் இருந்திருக்கவேண்டும் என்பதற்கு ஆதி இலக்கண நூலான தொல்காப்பியம் நல்ல சான்றாகும். சங்க காலம் என்று அழைக்கப்படும் காலத்திற்கு முந்திய கால இலக்கியங்கள் நமக்குக் கிடைக்கவில்லை. ஆனால், நமக்குச் சங்க காலத்திலிருந்து முறை செய்யப்பட்ட இலக்கிய நூல்கள் கிடைத்துள்ளன.

சரித்திர காலத்திற்குமுன் ஆரம்பமாகி, கி. பி. அய்ந்தாம் நூற்றாண்டின் முடிவு வரையிலுள்ள காலத்தைச் சங்க காலம் என்று கொள்ளலாம். அதைத் தொடர்ந்த அய்ந்நூறு ஆண்டுகளைப் பக்தி காலம் என்னலாம். அதைத் தொடர்ந்த காலம் காப்பிய காலம் ஆகும்.

காப்பிய காலத்தின் உதயசூரியனாய்க் கம்பன் என்னும் புலவன் தோன்றவே, அவனுக்குப்பின் வந்த புலவர்களுக்கு, ஒளி மங்கிய விளக்காகும் நிலை ஏற்பட்டது.

எனவே, அவர்கள், நூல்களுக்கு உரை எழுதுதலையும், இலக்கணங்கள் இயற்றலையும் மேற்கொள்ள வேண்டிய வர்கள் ஆயினர்.

இந்தக் காலத்தில்தான் பேராசிரியர், இளம்பூரணர், சேனாவரையர், நச்சினார்க்கினியர், பரிமேலழகர், அடியார்க்கு நல்லார் என்னும் உரையாசிரியர்களும், பவணந்தி முனிவர், புத்த மித்திரர் முதலிய இலக்கணப் புலவர்களும் தோன்றிப் பலதிறப்பட்ட அறிவுநூற் செல்வங்களை நமக்கு வழங்கினர். பதினாலாம் நூற்றாண்டை இக் காலத்தின் எல்லையாகக் கொள்ளலாம்.

பதினைந்தாம் நூற்றாண்டிலிருந்து ஒரு நானூறு வருட காலத்தை அறிஞர் சிறுபிரபந்த காலமாகக் கொள்கின்றனர். புலமை உலகம் கண்ணயர்ந்த காலம் என்று இதைச் சொல்லலாம். அன்னதற்குக் காலநிலையும் துணை புரிவதாயிற்று.

முகமதியப் படையெடுப்பினாலும் பிறவேறு காரணங் களாலும் தமிழ்நாட்டு முடிவேந்தர் மரபுகள் மறைந்தன. முகமதிய ஆக்ரமிப்பையும், மதத்தின் பேரால் அவர்கள் இழைத்த கொடுமைகளையும் எதிர்த்து நின்று தென் னாட்டைக் காத்த பெருமை விஜயநகர அரச பரம்பரை யைச் சாரும். அவர்களுடைய ஆதிக்கம் தமிழ்நாட்டில் பரவிய காலத்தில், அவர்களது பிரதிநிதிகளாய் நாயக்கர்கள் மதுரையைத் தலைநகராகக் கொண்டு தமிழகத்தை ஆண்டு வந்தனர்.

விஜயநகர அரச பரம்பரையின் வலிகுன்றவே, பிரதிநிதி களாய் வந்த நாயக்கர்கள் தாங்களே தனியரசு செலுத்தலா யினர். அவர்களின்கீழ் வீரர் பலர் பாளையக்காரர் என்ற பெயரில் சிறு பகுதிகளுக்குத் தலைவர்களாயினர். நாட் டிலும் ஓரளவு அமைதி பரவலாயிற்று.

இந்த நிலையில், புலவர்களுக்கு, அவர்களை ஆதரித்து வந்த வேந்தர் பரம்பரை அற்றுப்போகவே, நாயக்க மன்னர்களையும், பாளையக்காரர்களையும் அண்டிப் பிழைக்க வேண்டிய எளிய நிலை ஏற்பட்டது. நாயக்கர்களோ தெலுங்கர்கள். தமிழ்ப் புலமையின் அருமை பெருமைகளை அவர்கள் அறிவதற்கில்லை. எனவே, அவர்களைப் பாட்டுடைத் தலைவர்களாகக் கொண்டு 'உலா', கோவை முதலிய காதல் நூல்களைச் சிருங்காரச்சுவை சிறக்கப் பாடிப் பிழைத்தல் தமிழ்ப் புலவர்களுக்கு இன்றியமையாததாயிற்று.

அதன்பின், வியாபாரஞ் செய்யவந்த ஆங்கிலேயர் ஆட்சியைக் கைப்பற்றவே, நாயக்கர் பரம்பரையும் சிதைந்தது. பின்னர், புலவர்கள் செல்வர்களையும் ஜனங்களையும் நம்பிப் பிழைக்க வேண்டியவர்களாயினர். அதன் பயனாய்க் கும்மி, சிந்து, ஓடம், அம்மானை என்னும் பாடல்களைப் பின்பற்றி இசைப் பாடல்கள் எழுந்தன.

சிந்து என்பது இசைப்பாட்டு வகைகளில் ஒன்றாகும். மூன்று உறுப்புக்களாலான ஒருவகை இசைப்பாட்டு. பல்லவி, அநுபல்லவி, மூன்று கண்ணிகளைக்கொண்ட சரணம், 'சிந்து'வின் உறுப்புக்கள். தாளக்கட்டும், எளிய நடையும், சிருங்காரச் சுவையுங்கொண்டு நடக்கும் சிந்து, மக்கள் மனத்தைக் கவரலாயிற்று. கவிஞர் பாரதியாரின் முன்னோடியென்று சொல்லக்கூடியவரான அண்ணாமலை ரெட்டியார் என்பவர் பாடிய காவடிச் சிந்து என்பது சிந்துப் பாட்டின் ஒருவகையாகும். பல்லவி, அநு பல்லவிகள் இல்லாமல், சரணத்திற்குரிய கண்ணிகளை மாத்திரம் பெற்று நடக்கும் இசைப்பாட்டு அது.

இதைப் பலர் பின்பற்றிப் பாடலாயினர். அருணாசலக் கவிராயரும், கோபால கிருஷ்ண பாரதியாரும் எளிய நடையில், நாடோடிப் பாணியில் இராம நாடகம்,

தந்தன் சரித்திரங்களைப் பாடினர். இந்த நிலையில் நமது கவிஞர் சுப்ரமணிய பாரதியார் தோன்றினார். உறங்கிக் கிடந்த தமிழ் நாடும் கண் விழிப்புக்கொண்டது. அரசியல் இயக்கங்களும் சீர்திருத்த இயக்கங்களும் தோன்றிப் பரவின.

அவ்வியக்கங்களால் கவரப்பெற்ற பாரதியார், இசைப் பாட்டுக்கள் மூலம், " எல்லோரும் ஒரு குலம். எல்லோரும் இந்நாட்டு மன்னர். ஆண்டை இல்லை, அடிமை இல்லை..." என்ற குரலைக் கிளப்பினார். பாமர மக்களும் புரிந்து கொள்ளக்கூடிய எளிய நடையில் அமைந்த அவரது பாக்கள் செய்யுளுலகினில் ஒரு புதுமையையும் புரட்சியையும் உண்டாக்கின. தமிழ்ப் பா வுலகில் ஒரு புதிய பாதையைத் தோற்றி வைத்த பெருமை அவரதாகின்றது.

அவரது வழியைப் பின்பற்றிப் பலர் பாட்டுக்கள் பாடி வருகின்றனர். ஆனால், இப்புதுப் பாக்களில் பெரும்பாலானவை யாப்பமைதி அற்றவையாக இருக்கின்றன. யாப்பிலக்கணப் பயிற்சி இல்லாமல், காதே துணையாகப் பாடப் பெறுவதே இக்குறைக்குக் காரணம். பாடும் விருப்பம் உடையவர்கள், இப்புதுப் பாக்களின் யாப்பு விதிகளை அறிந்து பாடுவாரேல் பாக்கள் சிறப்பின் மிகக்கூடும். எனவே, அவற்றின் இலக்கணத்தைச் சுருக்கமாய் வகுத்துக் கூறுவோம். யாப்பிலக்கணம் பயின்றவர்களுக்கு, கும்மி, சிந்து, ஓடம் முதலிய நாட்டுப் பாடல்களை ஆதாரமாகக்கொண்டு பாடப் பெறும் இசைப்பாக்களின் இலக்கணத்தை அறிதல் எளியதே.

## கும்மி

வெண்டளை பிறழாத ஏழு சீர்களை உடைய இரண்டடிப் பாட்டைக் கும்மி என்பர். இயற்சீர்

வெண்டளையும் வெண்சீர் வெண்டளையும் அல்லாத வேற்றுத் தளைகள் கும்மியில் வரக்கூடாது. வரின், கும்மியோசை கெட்டுவிடும். ஒவ்வோரடியின் ஈற்றுச் சீரும் விளங்காய்ச்சீராய் அதாவது நிரையசையை இடையிலுடைய காய்ச்சீராய் இருத்தல் நலம். எதுகைத் தொடை அமைந்த அடிகளைக் கொண்டு பா நடத்தல் அவசியமாகும்.

"தேவர் சபைதனில் தய்வநார தென்வந்து
தேவரைப் பார்த்தவ னொன்றுரைத்தான்
பூவுல காளுநல் வேந்தர் கணத்தினில்
பொய்யுரை யான்றனைக் கண்டு கொண்டேன்."

என்பது ஒரு கும்மிப் பாட்டு.

"தேமா கருவிளம் கூவிளங்காய் தேமாங்காய்,
கூவிளம் கூவிளம் கூவிளங்காய் ;
கூவிளம் கூவிளம் தேமா கருவிளம்
கூவிளம் கூவிளம் கூவிளங்காய்."

என்ற வாய்பாட்டினது இது.

இக்கும்மி அடிகள் வெண்டளை பிறழாமலும், எதுகை மோனைத் தொடைகள் பெற்றும் வந்திருப்பது காண்க. 1, 5 சீர்களில் மோனை அமைதல் சிறப்புடையதாகும். இதை, வெண்பா இனத்தின் ஒருவகை என்னலாம்.

"கும்மி யடிதமிழ் நாடு முழுதும்
குலுங்கிடக் கைகொட்டிக் கும்மியடி
நம்மைப் பிடித்த பிசாசுகள் போயின
நன்மைகண் டோமென்று கும்மியடி."

என்பது பாரதியார் பாடிய ஒரு கும்மிப்பாட்டு. எதுகை மோனைத் தொடைகள் பெற்று வெண்டளை கொண்டு நடப்பது காண்க.

இவ்வாறு அமையும் கும்மியை இயற்கும்மி என்றமைப்பர். இக்கும்மியின் நாலாவது சீரின் முதலசையை மூன்றாவது சீருடன் சேர்த்துக்கொண்டு, எஞ்சிய அசை அல்லது அசைகளைத் தனிச் சொல்லாகக் கொள்வது வழக்கம். ஒரு கும்மிச் செய்யுளை உதாரணமாக எடுத்துக் கொள்வோம்.

நல்லவர் பண்பை யிழந்துவிட் டோமொரு
நல்ல துயிலையு மறந்துவிட்டோம்
அல்லும் பகலு மிரைக்கலைந்தே நாமொரு
பொல்லாப் பசியை வளர்த்துவிட்டோம்,

என்ற கும்மியை,

நல்லவர் பண்பை யிழந்து விட்டோம்—ஒரு
நல்ல துயிலையு மறந்து விட்டோம்
அல்லும் பகலு மிரைக்கலைந்தே நாம்—ஒரு
பொல்லாப் பசியை வளர்த்துவிட்டோம்.

என்று பிரித்து அமைப்பது வழக்காய் இருக்கின்றது.

இப்பாட்டின் முதலடியின் நாலாஞ்சீரின் முதலசையாகிய டோம் என்பதும்; இரண்டாம் அடியின் நாலாஞ் சீரின் முதலசையாகிய நாம் என்பதும் மூன்றாஞ்சீருடன் முறையே சேர்க்கப்பட்டிருப்பது காண்க. அடியின் 3, 7 சீர்களில் இயைபுத்தொடை அமைதல் சிறப்புடையதாகும்.

பாலானந்த சுவாமிகள் பாடிய ஞானக் கும்மியிலிருந்து ஒரு பாட்டை எடுத்துக் கொள்வோம்.

"பாரி லுயர்மது ராபுரி யில்வாலை
சாமிசொல் லுங்கும்மிப் பாடலுக்கு
சீரார் மலரடி மூலமுக் கோண
விநாயகன் தன்பதம் காப்பாமே."

என்ற கும்மிச் செய்யுளில், நாம் மேலே கூறியபடி செய்யுளைப் பிரித்துக் கொள்ள முடியாமை காண்க.

இதன் முதலடியின் நாலாஞ்சீரின் முதலசையான வில் என்பதை மூன்றாஞ்சீருடன் சேர்த்து, வாலை என்ற அசைகளைத் தனிச் சொல்லாகக் கொள்ளலாம். ஆனால், இரண்டாவது அடியின் நாலாஞ்சீரை அவ்வாறு பிரித்தால் எஞ்சும் ண என்ற அசை தனிச் சொல்லாதற்கில்லை. பாரதியார் பாடியுள்ள பெண் விடுதலைக் கும்மியிலும், அவ்வாறு பிரிக்க முடியாவகை அடிகள் அமைந்திருப்பது காண்க ஆகவே, வெண்டளை பிழையாமல் நடக்கும் ஏழு சீர்களைக் கொண்ட இரண்டடிப் பாட்டைக் கும்மி என்று கொள்ளலாம்.

எதுகை மோனை அடிகளில் அமையின் கும்மி ஓசை சிறக்கும்.

மேலே கூறிய கும்மியிலக்கணம் வாய்க்கப்பெற்ற எழுசீர்க் கழிநெடிலடி இரண்டு கொண்டது இயற்கும்மி என்று கூறினோம். ஓரடியிலேயே பொருள் முற்றுமாயின் அது ஓரடிக்கும்மி ஆகும்.

வாருங்கள் வாருங்கள் நாரியரே நல்ல
கும்மி யடித்துக் களித்திடுவோம் —1.

காலொடுகால் பின்னியிடாம லேபெண்காள்
ஆணுக் கொருமுழந் தள்ளிநில்லும் —2.

அறத்தால் வருவதே யாக்கமாகப் பாரோர்
பொருள்நாடி யேங்கித் திரிவதேனோ —3.

தன்மைக் கிடமில் லுரிமை மறந்துநாம்
கைகொட்டிக் கும்மி யடித்திடுவோம் —4.

ஞானக்கும்மி, வாலைக்கும்மி, அரிச்சந்திரக் கும்மி என்னும் நூல்கள் இயற் கும்மிப் பாக்களால் ஆனவை.

ஒயில் கும்மி என்ற ஒருவகைக் கும்மியும் உளது. வெண்டளை பெற்ற எழுசீர்க்கழி நெடிலடி ஒன்றும், அதன்பின் முடுகி நடக்கும் நான்கு சீர்களும், அதன்பின் வெண்டளை பிறழாத மூன்று சீர்களும் பெற்று அமைவது ஒயிற்கும்மி ஆகும். பாட்டின் முதலடியின் முதலெழுத்தும் முடுகியல் அடியின் முதலெழுத்தும் ஒன்றியிருக்க வேண்டும். அதாவது மோனை அமைந்திருக்க வேண்டும்.

முடுகியல் அடியின் முதல் சீரும், மூன்றாஞ்சீரும் மோனையும் எதுகையும் பெற்றிருக்க வேண்டும். எஞ்சிய ஈற்றுச் சீர்கள் மூன்று வெண்டளை பெற்றிருக்க வேண்டும். இவையே, ஒயிற்கும்மியின் இலக்கணம். இவ்வகைக் கும்மிப் பாக்கள் தாளத்தோடு பாடிக் கேட்க மிக ரஸமாயிருக்கும். உதாரணமாக முருகர் ஒயிற்கும்மியிலிருந்து ஒரு பாவை எடுத்துக்கொள்வோம்.

"தென்பரங் குன்றினில் மேவுங் குருபர
தேசிகன் மேற்கும்மிப் பாட்டுரைக்க
சிகரத்திரு மகரக்குழை
திகழுற்றிடு முமைபெற்றிடு
தில்லை விநாயகன் காப்பாமே."

என்ற பாட்டை அலகிட்டு ஆய்ந்து பாருங்கள்.

இதன் முதலடி வெண்டளை பெற்று நடக்கும் எழுசீர்க் கழிநெடிலடி. இரண்டாவது அடியின் முதல் நான்கு சீர்கள் முடுகி நடக்கும் புளிமாங்கனிச் சீர்கள். எஞ்சிய மூன்று சீர்களும் வெண்டளை பெற்றவை.

இவ்விதிக் கடங்காத மற்றோர் வகையதான ஒயிற்கும்மியும் உளது.

"தேனுந் தினைமாவும் நல்லாவின் நறுநெய்யும்
மன்ன வுனக்கென்று—மகிழ்ந்துநீ
தின்னக் கொணர்ந்தேன்—சாமி

ஈனனென் றெண்ணாம லேற்றருளி னைய
எளியன்யான் வாழ்ந்திடுவேன்.''

என்னுமிது உதாரணமாகும்.

“ மகிழ்ந்துநீ சாமி, ” என்ற தனிச் சொற்கள் தவிர மற்றவை வெண்டளை பெற்று நடப்பது காண்க.

## சிந்து

சிந்து என்பது ஒருவகை இசைப்பாட்டு. சிந்து உறுப்புக்களில் ஒன்றான சரணத்திற்குரிய கண்ணிகளை மாத்திரங்கொண்டு அமைவது இது. காவடிச் சிந்து, நொண்டிச் சிந்து, வழிநடைச் சிந்து, தங்கச் சிந்து, குற்றாலக் குறவஞ்சி, தெம்மாங்கு, ஆனந்தக் களிப்பு முதலிய நாட்டுப் பாடல்கள் சிந்து வகைகளைச் சேர்ந்தவையே.

“ பாலுங் கொடுவந்தேன்—ராமா
பழமுங் கொடுவந்தேன்
மேவு முள்ளன்பின்—சாமி
ஏற்றுக் கொள்வாயே. ’,

என்பதும்,

“பாலும் வேண்டாவே—குகனே
பழமும் வேண்டாவே
மேவு நின்னன்பே—வீரநான்
விரும்பு நல்லமுதம்.”

என்பதும் சிந்துப் பாக்களில் ஒரு வகை ஆகும். தளை வரை இவற்றிற்கு இல்லை. எல்லாத் தளைகளும் வரலாம். நெடிலடி இரண்டால் இவை ஆனவை. அதாவது, தனிச் சொற்களுக்கு முன்னும் பின்னும் இரண்டிரண்டு குறளடிகள் வந்துள்ளன.

தனிச் சொல்லுக்கு முன்னும் பின்னுமுள்ள அரையடிகள் அளவொத்திருப்பின் சமனிலைச் சிந்து என்றழைக்கப்படும். உதாரணமாகக் காட்டிய இரு சிந்துகளும் சமனிலைச் சிந்துகள். குறளடி முதல் சிந்தடி, நெடிலடி, கழிநெடிலடி வரையுள்ள எல்லா அடிகளாலும் சிந்துப்பா நடக்கலாம். ஆனால் அடிகள், அளவு ஒத்து இருக்க வேண்டும். தனிச் சொல்லின் முன்னடி குறளடியும் பின்னது சிந்தடி அல்லது அளவடியுமாய் இருப்பின் அதை, வியனிலைச் சிந்து என்றழைப்பர்.

"ஓடி விளையாடு பாப்பா—நீ
ஓய்ந்திருக்க லாகாது பாப்பா
கூடி விளையாடு பாப்பா—ஒரு
குழந்தையை வையாதே பாப்பா."

என்னும் பாரதியாரின் பாப்பாப் பாட்டு சிந்தடிகளாலான சமனிலைச் சிந்து.

முருகு சந்தனக் குழம்பு பூசுவார்—விரகத்தீயை
மூட்டி மூட்டி விசிறி வீசுவார்
கருகு தேயுட லுருகு தேயென்பார்—விரிதற்பூவும்
கரியு தேமுத்தம் பொரியு தேயென்பார்.

என்னும் குற்றாலக் குறவஞ்சிப்பா, அளவடிகளாலான சமனிலைச் சிந்து,

" உலகு தொடங்கிய நாள்முத லாகநஞ் சாதியில்—புகழ்
ஓங்கிநின் றாரித் தருமனைப் போலெவர் மாமனே
இலகு புகழ்மனு வாதி முதுவர்க்கும் மாமனே—பொருள்
ஏற்றமு மாட்சியு மிப்படி யுண்டுகொல் மாமனே."

என்ற இப் பாஞ்சாலி சபதப் பாட்டு நெடிலடிகளாலான சமனிலைச் சிந்து. கழிநெடிலடிகளாலும் வரலாம்.

தனிச் சொல்லிற்கு முன்னும் பின்னுமுள்ள அடிகளின் அளவு வேறுபடின் வியனிலைச் சிந்தாகும்,

தேனொத்த பண்டங்கள் கொண்டே—என்ன
செய்தாலும் எட்டாத வுயரத்தில் வைப்பான்
மானொத்த பெண்ணடி யென்பான்—சற்று
மனமகிழும் நேரத்தி லேகிள்ளி விடுவான்.

என்னுமிதில் தனிச் சொற்களுக்கு முன் சிந்தடிகளும், பின்னே அளவடிகளும் வந்திருப்பது காண்க. எனவே வியனிலைச் சிந்து.

காவடிச் சிந்து, நொண்டிச் சிந்து, வழிநடைச்சிந்து, வளையல்சிந்து, குள்ளத்தாராச்சிந்து, ஏற்றப்பாட்டு, ஏசல், தாலாட்டு, கிளிக்கண்ணி, ஏலப்பாட்டு, லாவணி, சேவற் பாட்டு முதலிய நாட்டுப் பாடல்கள் எல்லாம் சிந்து வகையைச் சேர்ந்தவையாகும். இப் பாடல்களில் வரும் ஒவ்வொரு சிந்தும் கண்ணி என்றழைக்கப்படும்.

யாப்பிலக்கணப் பயிற்சியுடையவர், இசைப் பாக்களின் இலக்கணத்தைத் தெளிதல் எளியதே. எனவே, விரிவாய் இலக்கணம் வரைய நினைத்திலம்.

# அநுபந்தம் II

## 1. கூன்

செய்யுளின் அடிமுதலில் பொருளோடு சம்பந்தங் கொண்டதாய், ஆனால் தனித்து நிற்கும் சொல்லை இலக்கண வல்லுநர் கூன் என்று கூறுவர். உதாரணமாக ஒரு செய்யுளை எடுத்துக் கொள்வோம்.

உதுக்காண்,

சுரனென்றுன் சூரறுத்த வேளென்றும் வாட்கைப்
புரவலனைப் போற்றியே பாடி—இரத்தார்மாட்(டு)
இன்மை யகல்வதேபோல் ஞாலவிருள் நீங்க
மின்னு மளிதேர் மழை.

சுரன்—தேவன், அறிஞன், ஞாலவிருள் — உலகின் வறுமையாகிய இருள், ஈற்றடியை, மின்னும் ஏர் மழை அளிது (அளித்து)" என்று அன்வயங் கொள்க. தேவன் அல்லது அறிஞன் என்றும், சூரபத்மாதிகளை அழித்த முருகன் என்றும், வாளேந்திய கையனாகிய புரவலனை (வள்ளலை)த் துதித்துப் பாடி யாசிப்போரின் வறுமை அகல்வதேபோல், பூமியின் வளமின்மையாகிய இருள் நீங்கி வளம் பெருகும்படி, மின்னுகின்ற சூல்கொண்ட அழகிய மேகம் உதவத்தக்கது; அதோபார்,—என்பது செய்யுளின் பொருள்.

அதோபார், என்ற பொருளுடைய உதுக்காண், என்பது கூன். கூன் பெற்ற வெண்பாவைப் பார்த்தோம். ஆசிரியப்பா ஒன்றை உதாரணமாக எடுத்துக்கொள்வோம்.

தலைவன் பிரிந்தவிடத்து, அப் பிரிவை ஆற்றாளாய் வருந்திய தலைவியின் நிலை கண்டு கவன்ற தோழிக்குத் தலைவி கூறியதை விஷயமாகக் கொண்ட, கூன் பெற்ற குறுந்தொகைச் செய்யுள் வருமாறு :

அவரே

தேடில் விழுப்பொருள் தருமாம் பாசிலை
வாடா வள்ளியங் காடிறந் தோரே,

யானே

தோடா ரெல்வளை நெகிழ வேங்கி
பாடமை சேக்கையிற் படர்கூர்ந் திசினே
அன்ன ளளிய ளென்னது மாமழை
இன்னும் பெய்ய முழங்கி
மின்னுந் தோழியென் னின்னுயிர் குறித்தே!

அவரோ (தலைவரோ) (—) கேடில்லாத சிறந்த செல்வப் பொருளைக் கொணரும் பொருட்டு, பசிய இலைகளையுடைய வாடாத வள்ளிக் கொடிகளை மிகுதியாகக் கொண்ட காட்டைக் கடந்து சென்றார்;

(பிரிவுபொறாத) நானே (—) தொகுதி கொண்ட ஒளி விளக்கமுடைய வளையல்கள் நெகிழ்ந்து கழலும்படி, படுத்தற்கு அமைந்த படுக்கையில் (விழுந்து கிடந்து) துன்பம் மிகுந்தவளாய் வாடுகின்றேன்;

கரியமேகமோ, "அத்தகைய நிலையினளாகிய தலைவி இரங்குதற்கு உரியாள்," என்று எண்ணாது, எனது இனிய உயிரைக் கொள்ளக் கருதி, மேலும் மழைபொழியும் பொருட்டு, இடி முழக்கத்தோடு மின்னுகின்றதே! (என் செய்வேன்?), — என்பது செய்யுளின் பொருள்.

"தலைவர் குறித்துச் சென்ற கார்ப்பருவமும் வந்தது," அவரோ வந்திலர், என் உயிரும் அழியும்," என்று தலைவி தோழிக்குக் கூறல் கருத்து.

இவ்வாசிரியச் செய்யுளில், அவரே என்றும் யானே என்றும் நிற்குஞ் சொற்கள் கூன்.

இனி நாம், கலிப்பாச் செய்யுளொன்றை உதாரண மாக எடுத்துக் கொள்வோம் :

உலகினுள்,

பெருந்தகையார் பெருந்தகைமை
பிறழாவே பிறழினும்
இருந்தகைய இறுவரைமேல்
எரிபோலச் சுடர்விடுமே!
சிறுதகையர் சிறுதகைமை
சிறப்பெனினும் பிறழ்வின்றி
உறுதகைமை உலகினுக்கோர்
ஒப்பாகித் தோன்றாவே.

பெரியோர் சிறியோர் ஆயவர்தம் இயல்புகளைக் கூற வந்த இத் தரவு கொச்சகக் கலிப்பாவின், அடி முதலில் உள்ள உலகினுள் என்ற சொல் கூன். வெண்பா, ஆசிரி யப்பா, கலிப்பா என்ற மூவகைப் பாக்களின் இடையிலும் கடையிலும் கூன் அமைவதில்லை.

இனி, வஞ்சிப்பாவை நோக்குவோம். இப் பாவின் அடி முதலில் கூன் அமைவதோடு பாவின் இடையிலும் கடையிலும் சிறுபான்மை இக் கூன் அமைந்து வரக் காண் கின்றோம்.

உலகே,

முற்கொடுத்தோர் பிற்கொளவும்
பிற்கொடுத்தோர் முற்கொளவும்
உறுதிவழி யொழுகுமென்ப

அதனால்

நற்றிறம் நாடுதல் நன்மை
பற்றற யாவையும் பிரிவறத் துறந்தே

பற்றறுத்தலால் வரும் நன்மையை எடுத்துரைக்கும் இவ் வஞ்சிப்பாவின் அடி முதலில் அமைந்துள்ள உலகே என்பது கூன், முன்னடிகளையும் பின்னடிகளையும் பொருள் அமைதியோடு இணைக்க வந்த அதனால் என்ற தனிச் சொல் கூன் அன்று.

இடையிலும் கடையிலுங் கூன் அமைந்த வஞ்சிப்பா வைப் பார்ப்போம்.

மாவழங்கலின் மயக்குற்றன (வழி)
கலங்கழாலித் (துறை) கலக்குற்றன
தேரோடத் துகள் கெழுமின (தெருவு)

என்ற இவ்வஞ்சி யடிகளில் வழி என்ற அசை ஈற்றிலும், துறை என்ற அசை இடையிலும், தெருவு என்ற சீர் கடையிலும், கூனாய் நின்று பொருள் அமைதிக்கு உதவல் காண்க.

## 2. செய்யுள் விகாரம்

செய்யுள்களில் அடியமைதியும் தொடை இன்பமும் நோக்கி, வலித்தல், தொகுத்தல், மெலித்தல் முதலிய விகாரங்களை, இலக்கணம் வல்லார் செய்யுள் விகாரம், என்பர். அவை,

1. வலித்தல் விகாரம்
2. மெலித்தல் விகாரம்
3. தொகுத்தல் விகாரம்
4. நீட்டல் விகாரம்

5. விரித்தல் விகாரம்
6. குறுக்கல் விகாரம்
7. முதல்குறை விகாரம்
8. இடைக்குறை விகாரம்
9. கடைக்குறை விகாரம்

என்றும் ஒன்பது வகைப்படும். இவற்றுள் முதல் ஆறு விகாரங்களும் பகுபதங்களிலும், பின்னைய மூன்றும் பகாப்பதங்களிலும் நேரும். செய்யுள்களுக்கே உரிய இவ் விகாரங்கள், உரைநடையில் பயின்று வர அனுமதியில்லை.

## 1. வலித்தல் விகாரம் :

ஒரு சொல்லில் உள்ள மெல்லினமெய் வல்லினமாகத் திரிதல் வலித்தல் விகாரம்.

அறத்தால் வருவதே யாக்கம்
இறத்தறம் வாழ்த லழிவிற் காவதே,

என்ற இச் செய்யுள் ஆசிரியப்பாவின் கடையடிகள். இறந்தறம் என்பது எதுகை நோக்கி இறத்தறம் என்று திரித்துளது. மெல்லின நகரம் வல்லினத்தைச் சேர்ந்த தகரமாய்த் திரிந்து நிற்றல் காண்க. எனவே, இது வலித்தல் விகாரம். (இறந்தறம் — அறம் இறந்து — தர்மம் கெட்டு).

## 2. மெலித்தல் விகாரம் :

ஒரு சொல்லின் வல்லினம் மெல்லினமாகத் திரிதல் மெலித்தல் விகாரம்.

தண்டையி னிளங்கிளி கடிவோள்
பண்டைய ளல்லள் மானோக் கினளே

என்ற இவை நேரிசை ஆசிரியப்பாவின் கடையடிகள் தண்டை என்பது தட்டை என்பதின் மெலித்தல் விகாரம்.

3. தொகுததல் விகாரம் :

ஓசையின்பம் நோக்கி ஒரு சொல்லிலுள்ள ஒரு எழுத்தைக் குறைத்தல் தொகுத்தல் விகாரம்.

"சிறியிலை, விரியின் நெல்விளையும்மே",

என்ற ஆசிரிய அடியில், சிறிய இலை என்று இருக்க வேண்டியது, சிறியிலை என்று யகரம் குறைந்து நிற்றல் காண்க. இது தொகுத்தல் விகாரம்.

4. நீட்டல் விகாரம் :

எதுகை நோக்கி, செய்யுளிலுள்ள குறில் ஒன்று நெடிலாய் நீள்வது நீட்டல் விகாரம்.

ஆர்த்த வறிவின ராண்டிளைய ராயினும்
காத்தோம்பித் தம்மை யடக்குவர் — மூத்தும்
தீத்தொழிலே கன்றித் திரிவர் நிலமெங்கும்
போத்துடைப் புல்லறிவி னார்.

இது, சிறிது மாற்றி யமைக்கப் பெற்ற நாலடிச் செய்யுள். அறிவுடைமையின் மேன்மையையும், புல்லறிவின் தாழ்மையையும் கூறவந்த இச் செய்யுளின் ஈற்றடியிலுள்ள போத்து என்பது பொத்து என்பதின் நீட்டல் விகாரம். பொத்து—அறிவின்மை, அடிமோனை கருதிப் பொத்து, போத்து என நீண்டது, ஒலியளவிலும் தொடை கொள்ளலாம்.

5. விரித்தல் விகாரம் :

ஒரு சொல்லில் இல்லாத மெய்யெழுத்தையோ, அல்லது உயிர்மெய் யெழுத்தையோ ஓசையின்பத்தோடு யாப்

பமைதியுங் கருதி, வருவித்துக்கொள்ளல், விரித்தல் விகாரம்.

ஒரு நாள் பழகினும் பெரியோர் கேண்மை
இரு நிலம் பிளக்க வேர்வீழ்க் கும்மே

என்ற இது, வெற்றிவேற்கைச் செய்யுள். வேர்வீழ்க்குமே என்று இருக்கவேண்டியது, வேர்வீழ்க்கும்மே என்று மகர மெய் ஒன்றைப் பெற்று நிற்றல் காண்க. இது, விரித்தல் விகாரம்.

## 6. குறுக்கல் விகாரம.

ஒரு சொல்லிலுள்ள நெடில், குறிலாகத் திரிதல், குறுக்கல் விகாரம்.

பன்மாடக் கூடல் மதுரை நெடுந்தெருவே
என்னயலே நின்றா ரெற்பிரிந்தே சென்றார்
நன்றோதான் தோழி நீயேசொல் லன்பதுவோ
இன்றே யழிந்தேன் யனே

என்ற இவ்வின்னிசை வெண்பாவின் கடையடியிலுள்ள யனே என்பது யானே என்பதின் குறுக்கல் விகாரம். சீரும் தளையும் சிதையாமை கருதி, யானே என்பது யனே என்று குறுகவேண்டியதாயிற்று.

## 7. முதற்குறை விகாரம்.

பகாப் பதத்தின் முதலெழுத்துக் குறைந்து நிற்றல் முதற்குறை எனப்படும்.

"மரையிதழ் புரையு மம்பொன் சீரடி,"

என்ற செய்யுளடியில், தாமரை, என்பது மரை என்று முதல்எழுத்துக்குறைந்து நிற்றல் காண்க. இது, முதற்குறை.

8. இடைக்குறை

பகாப் பதத்தின் இடையெழுத்துக் குறைந்து நிற்பது இடைக்குறை.

" தள்ளாவோதி கோபத்தைக் கவ்வ
வந்து சார்ந்ததுவும்
கொள்ளா வள்ளல் திருமூக்கிற்குவமை
பின்னுங் குணிப்பாமோ. "

என்ற இவ்வடிகள். இராமபிரானின் நாசியை வர்ணிக்க வந்த அறுசீர் விருத்தத்தின் கடையடிகள், ஓதி என்பது ஒந்தி என்பதின் இடைக்குறை. ஓந்தி பச்சோந்தி, மூக்கிற்கு இதை உவமை கூறல் வழக்கு.

9. கடைக்குறை

பகாப்பதத்தின் கடையெழுத்துக் குறைந்து நிற்பது, கடைக்குறை.

" நீலுண் துகிலே நெடுவான் கடுப்ப "

என்ற செய்யுளடியில், நீலம் என்று இருக்கவேண்டிய சொல், நீல் என்று லகரத்திலுள்ள அகரமும், ஈற்று மகர மெய்யும் குறைந்து நிற்றல் காண்க. இது கடைக்குறை. நீல் — உண் — நீலுண் — நீலநிறங்கொண்ட

3. வகையுளி

சொல்லின் முடிபே சீர் முடிபாகக் கொள்ளாமல், தளைபிறழாமல் சீர் கொள்ளல். வகையுளி. அதாவது சொல்லை நோக்காது, ஓசைக்கு ஆதாரமான தளை கோடாமல் செய்யுளை அலகிட்டுப் பிரித்தல் வகையுளி, எனப்படும்.

மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்.

என்ற குறள் வெண்பாவை எடுத்துக்கொள்வோம். நீடு வாழ்வார், என்பதைச் சொல்லை நோக்கிப் பிரித்தால், அத் தொடர், நீடு — வாழ்வார், என்று கொண்டால், வெண்பா இலக்கணம் கெடும். வாழ்வார், என்பது வெண்பா ஈறும் அன்று. நாள், மலர் என்ற ஓரசைச் சீர்களும், காசு, பிறப்பு என்று உகரத்தை ஈற்றில் கொண்ட ஈரசைச்சீர்களுமே வெண்பாவிற்குரிய ஈற்றுச் சீர்கள், எனவே, ஈற்றடி, "நிலமிசை நீடுவாழ் வார்," என்று நிற்றலே, யாப்பமைதியோடு செப்பலோசை சிதையாமைக்கும் ஏற்றதாகும். சொல்லை நோக்காமல், பாவிற்குரிய இலக்கண அமைதி கெடாமல் செய்யுளை அலகிட்டுப் பிரித்தல் வகையுளி செய்தலாகும்.

கம்பராமாயணச் செய்யுள் ஒன்றை எடுத்துக்கொள் வோம். தாடகைவதப் படலத்தில், களத்திடையே தாட கையை அழைத்துவரும் கம்பர் செய்யுள் சில, அரங்க மேடையுஞ் திரைச்சீலையும் இல்லாமலே, அரக்கியின் வரவாகிய நாடகத்தைச் சொற்களின் அமைப்பாலும் சந்தத்தின் ஒழுங்காலும் நிகழ்த்திக்காட்டும் விந்தையின வாகும். அவற்றில் ஒன்றை எடுத்துக்கொள்வோம்.

கூறவந்த பொருளை ஓசையே குறிக்கும் வண்ணம் சொற்களையும் சீர்களையும் அமைக்குந்திறத்தை ஆங்கி லத்தில் (அனமொடோப்பியா) (anamotopeia) என்பர் அந்த அழகை நமக்களிக்கும் நலத்தைத் தாடகையின் வரவினைக் கூறும் செய்யுள்களில் நாம் காண்பவராகின் றோம். அவற்றில் ஒன்றை எடுத்துக்கொள்வோம்

சிலம்புகள் சிலம்பிடை செறித்தகழ லோடும்
நிலம்புக மிதித்தனள் நெளித்தகுழி வேலை

சலம்புக வனற்றறு கனந்தகனு மஞ்சி
பிலம்புக நிலக்கிரிகள் பின்றொடர வந்தாள்.

இது, வகையுளி செய்து முறையே பிரிக்கப்பட்ட செய்யுள். கருவிளம்—கருவிளம்—கருவிளங்காய்—தேமா, என்ற வாய்பாட்டினது செய்யுள். செய்யுளின் மூன்றாவது அடியைச் சொல் நோக்கிப் பிரித்தால், "சலம்புக அனற்றறு கண் அந்தகனும் அஞ்சி," என்று அடி நிற்கும், "கருவிளம்—கருவிளங்காய்—கூவிளங்காய்—தேமா," என்பது இதன் வாய்பாடாகும். எனின், யாப்பமைதியும் ஓசையும் கெட்டு நிற்பதாகும். யாப்பமைதி கெடாமல் பிரித்தல் வகையுளியாகின்றது.

இச் செய்யுளை யாப்பமைதி கெடாது, வேறு விதமாகவும் பிரிக்கலாம்.

சிலம்புகள்சி லம்பிடைசெ றித்தகழ லோடும்
நிலம்புகமி தித்தனனெ ளித்தகுழி வேலைச்
சலம்புகவ னற்றறுக ணந்தகனு மஞ்சிப்
பிலம்புகநி லக்கிரிகள் பின்றொடர வந்தாள்.

நாற்சீர்களினாலான இக்கலி விருத்தத்தின் முதல் சீர் கருவிளங்காய், ஈற்றுச்சீர் தேமா, இடையிரு சீர்களும் கூவிளங்காய். வகையுளி விதிக்கடங்கிய இச்சீர் அமைப்பு, பருத்த உருவத்தினளாய்ப் பற்றிய சீற்றத்தோடும் தாடகை, பூமி நெளியும்படி மிதித்து விரைந்து வருவதை ஓசையால் தோற்றுவிக்கும் நலத்ததாகும்.

இவ்வாறு பிரித்தலில் சொல்லுருவம் சிதைகின்றதேனும், யாப்பமைதியோடு, வல்லரக்கியின் மலைபோன்ற தோற்றத்தையும், சீற்றத்தையும், நடையின் கடுமையையும் நாம் காண்பதோடு, வகையுளியின் விதி கடவாமையும் ஏற்படுகின்றது.

இச் சாகஸத்தை வல்லோசையின் மிகுதியும், செய்யுளில் விரவி வரும் வெண்டளையும் செய்வதாகின்றன.

## 4. வனப்பு

எழுத்தாலும் சொல்லாலும் செய்யுளை அழகு செய்வது வனப்பு. இவ் வனப்பு, அம்மை, அழகு, தொன்மை, தோல், விருந்து, இயைபு, புலன், இழைபு என்று எட்டு வகைப்படும்.

(1) மென்மை வாய்ந்த சொற்களைக் கொண்டு, உயர்ந்த பொருள்கள் அமையும்படி, சில அடிகளால் பாடுவது அம்மை.

அறிவினா னாகுவ துண்டோ பிறிதினோய்
தந்நோய் போற் போற்றாக் கடை

[பிற உயிரின் துன்பத்தைத் தன் துன்பம் போல் நினைத்து, அதை அகற்றி ரட்சிக்காவிட்டால், பெற்றிருக்கும் அறிவால் பயன்படுவது உண்டோ,—என்பது இக் குறளின் பொருள்.]

இக் குறள் இரண்டு அடிகளால் உயர்ந்த பொருளை, எளிய சொற்களால் கூறியிருத்தல் காண்க. திருக்குறள், நாலடியார், வெற்றி வேற்கை, வாக்குண்டாம் முதலிய நீதி நூல்கள் அம்மைக்கு நல்ல உதாரணங்களாகும்.

(2) திரிசொற்களால், ஓசைநலம் அமையச் சிறந்த பொருளைக் கூறல் அழகு. கற்றோர்க்கன்றி மற்றவர்க்கு எளிதே பொருள் விளங்காத சொல், திரிசொல் பௌவம் (கடல்), அடுக்கல் (மலை) பெற்றம் (மாடு), எழிலி (மேகம்), கால் (காற்று) கலுழி (காட்டாறு), வல்லியம் (புலி) போன்ற சொற்கள், திரி சொற்களாகும்.

(3) பழமையான சரித்திரங்களையும் நிகழ்ச்சிகளையும் விஷயமாகக் கொண்டு பல அடிகளால், அல்லது செய்யுள்களால் பாடுவது, தொன்மை. இராமாயணம் பாரதம், பெரியபுராணம், சிறுகாப்பியங்கள் முதலியன இதற்கு உதாரணங்களாகும்.

(4) மென்மை வாய்ந்த இனிய சொற்களால் பொருள் சிறப்போடு சிலவடிகளால் பாடுவது போல், எல்லா வகையான சொற்களைக் கொண்டு பலவடிகளால் பாடுவது, தோல் என்ற வனப்பின் மற்றோர் வகையாகும்.

இறைவன் மாணடி சேரி னன்றே
அறுமே பற்றொடு பகையு முறவும்
நன்மையுந் தீமையு மவர்க்கோ வில்லை
நன்றுதீ தில்லா நிலையில்.

இன்பமோ வாழ்க்கை யெய்த வருமே, என்ற இந் நேரிசை யாசிரியம் தோலின் முதல் வகைக்கு உதாரணமாகும். மற்ற வகைக்குப் பத்துப்பாட்டில் மலைபடுகடாம் போன்றனவற்றை உதாரணங் கொள்க.

(5) புதுவது புனைந்து பாடப்படுவது விருந்து என்ற வனப்பாகும். மாலை, அந்தாதி, கலம்பகம், உலா முதலியன, விருந்திற்கு உதாரணங்களாகும்.

(6) ஞ ண ந ம ன் என்ற அஞ்சு மெல்லின மெய்களும், ய ர ல வ ழ ள் என்ற ஆறு இடையின மெய்களும் ஈறாக அமையப் பாடுவது இயைபு.

(7) எல்லோரும் எளிதே பொருள் தெரிந்து கொள்ளும் படி இயற் சொற்களால் பாடல் புலன்.

நண்பரூற வினர்கணமை நாடியுற வாடல்
நறுநெயுறு குடத்தெறும்பு நண்ணலென
வெண்ணாய்

பெண்களகக் காதலெலாம் பேசுமுயற் கொம்பே
பெருங்கபட மிடுகலனோ பிறங்குவே ருடலம்

என்ற குறள் வெண்செந்துறை புலன் என்ற வனப்பிற்கு ஏற்ற உதாரணமாகும்.

(8) செய்யுளில் வல்லின மெய்யமை யாது பாடப் படுவது இழைபு, என்ற வனப்பாகும். உதாரணமாக ஒரு செய்யுளை எடுத்துக் கொள்வோம்.

போந்து போந்து சார்ந்து சார்ந்து
தேர்ந்து தேர்ந்து மூசி நேர்ந்து
வண்டு சூழ விண்டு வீங்கி
நீர்வாய் கொண்டு நீண்ட நீலம்
ஊர்வா யூதை வீச வூர்வாய்
மதியேர் விண்டோ டொல்கி மாலை
நன்மணங் கமழும் பன்னெல் லூர!
அமையேர் மென்றோ ளையரி நெடுங்கண்
இணையீ ரோதி யேந்திள வனமுலை
இறும்பமன் மலரிடை யெழுந்த மாவின்
நறுந்தழை துயில்வ ருஉந் செறித்தேந் தல்குல்
அணிநடை யசைஇய வரியமை சிலம்பின்
மணிமருள் வளர்குழல் வளரினம் பிறைநுதல்
ஒளிநிலவு வயங்கிழை யுருவுடை மகளொடு
நனிமுழவு முழங்கிய வணிநிலவு மணிநகர்
இருந்தளவு மலரளவு சுரும்புலவு நறுந்தொடை
கலனளவு கலனளவு கலனளவு கலனளவு
பெருமணம் புணர்ந்தனை யென்பவஃது
ஒரு நீ மறைப்ப வொழிகுவ தன்றே.

இந்த நேரிசை ஆசிரியப்பாவில் வல்லின மெய் ஒன்றேனும் இல்லாமை காண்க. அம்மை, அழகு முதலிய எட்டும் செய்யுளிற்கு வனப்பைத் தருவனவாகும்.

யாப்பிலக்கணம் தற்போர் அறிய வேண்டுவது பொருள் கோள் ஆகும். புலவர்கள் கவி பாடுகையில் எதுகை மோனை முதலிய தொடைகள் செய்யுளில் அமையப் பாட வேண்டியவர்களாகின்றனர். எனவே, சொற்கள் முறையின்றியும், இடமாறியும் நிற்றல் நிகழ்தற்குரியதே. பொருளமைதி கருதிச் சொற்களை, மாற்றியமைத்துப் பொருள் கோடலைத் தமிழிலக்கணப் புலமையினோர், பொருள் கோள், என்றனர். வடமொழியார், இதை அந்வயம் என்பர். இப் பொருள்கோள் எட்டு வகைப்படும்.

1. யாற்றுநீர்ப் பொருள்கோள்
2. மொழிமாற்றுப் பொருள்கோள்
3. நிரனிறை (நிழல்-நிரை)ப் பொருள்கோள்
4. விற்பூண் பொருள்கோள்
5. தாப்பிசை (தாம்பிசை)ப் பொருள் கோள்
6. அளைமறிப் பாப்பு (பாம்பு)ப் பொருள்கோள்
7. கொண்டு கூட்டுப் பொருள்கோள்
8. அடிமறி மாற்றுப் பொருள் கோள்

என்பன அவை.

இலக்கண வல்லுநர் சிலர், அடிமொழி மாற்றுப் பொருள் கோள், என்ற ஒன்றைச் சேர்த்துப் பொருள்கோள் ஒன்பது என்பர்.

யாற்று நீர் என்பதைப் புனல்யாற்றுப் பொருள் கோள் என்றும், நிரனிறையை, நேர்நிறை என்றும், விற்பூண் என்பதை பூட்டுவில் பொருள் கோள் என்றும் வழங்குவதுண்டு.

புணர்ச்சி இலக்கணத்தையும், பொருள் கோளையும் நன்கு தெரிந்து கொண்டாலன்றிச் செய்யுளுக்குப் பொருள் கொள்ளல் அரியதாகும். ஆகவே, இதை விஸ்தாரமாக உதாரணச் செய்யுள்களின் துணைகொண்டு நன்கு விளக்குதல் அவசியமாகும். எனவே, இதைத் தனி நூலாக எழுதி, இலக்கண விளக்கத்தின் ஏழாவது புத்தகமாகச் சேர்க்க நினைத்துள்ளோம்.

————